

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீ விஷ்ணுசித்த குரவே நம:

ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# ஸுதர்சனர் சதாபிஷேக வைபவ மலர்



தாரண, தை 14 (27-1-2005)

## சதாபிஷேகம்
## கண்ட ஸுதர்சனர் தம்பதிகள்



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் க்ருஷ்ண ஸூரயே நம:
ஸ்ரீமத் வரவர முநயே நம:



# ஸுதர்சனர்

## சதாபிஷேக வைபவ மலர்

கிடைக்குமிடம் :
ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், M.A., B.L.,
ஆசிரியர் : 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்'
5, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

ஸ்ரீ ரா ஸ்ரீ கி ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது.

டிரஸ்டிகள் :
S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், M.A., B.L., அட்வகேட்
S. ராம ஐயங்கார், B.Sc., B.L., அட்வகேட்

விலை ரூ. 25] 27—1—2005 [தபால் கூலி தனி

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

# விஷயஸூசிகை

## (பொருளடக்கம்)

---

குறிப்பு :— 'ஸுதர்சனம்' பத்திரிகைக்குத் தபாற்சலுகை கிடைப்பதில் தாமதமாவதால், கார்த்திகை, மார்கழி, தை மாத இதழ்கள் வெளியிடப்படவில்லை. புத்தகமாக இந்த மலர் வெளியிடப்படுகிறது. தபால் சலுகை கிடைத்தபின்பு 'ஸுதர்சனம்' பத்திரிகையாக வெளிவரும்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# ஸுதர்சனர் சதாபிஷேக வைபவ நிகழ்ச்சிகள்

## ஸுதர்சனர் சதாபிஷேக வைபவக் கமிட்டி

**5, புத்தூர் அக்ரஹாரம், புத்தூர், திருச்சிராப்பள்ளி-620 017.**



ஸ்ரீவைஷ்ணவ சமூகத்தின் ஒப்பற்ற வழிகாட்டியும், தமிழகத்தின் மூத்த பத்திரிகாசிரியரும், "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்" மற்றும் ஸ்ரீஸூக்திமாலா வெளியீடுகளின் ஆசிரியரும், வடமொழி தென்மொழி களில் புலமை மிக்கவருமான மூதறிஞர் ஸ்ரீ உ வே கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் (ஸுதர்சனர்) ஸ்வாமியின் சதாபிஷேக வைபவம் தாரண-ஹு கார்த்திகை-24 ஸ்வாதி நட்சத்திரத்தில் (9—12—2004) வியாழக் கிழமை காலை 9-30 மணிக்குமேல் 10-30 மணிக்குள் மகர லக்னத் தில் வெகுவிமரிசையாகக் கொண்டாடப்பெற்றது. திருவரங்கம், திருவெள்ளறை, உறையூர், ஸ்ரீரங்கம் உடையவர், திருவாலி திருநகரி, அண்ணன் கோயில், புத்தூர் ஆதிவராகர், ராமர் முதலான ஸந்நிதி களிலிருந்து வந்த மாலை பரிவட்டம் பிரசாதங்கள் ஸ்வாமி தம்பதியின ருக்கு அணிவிக்கப்பட்டன. முன்னதாக 17—11—2004 தொடங்கி 26 - 11 — 2004 ஈருக, புத்தூர ராமர் ஸந்நிதியில் நாலாயிர திவ்யப்ர பந்த அருளிச்செயல் கோஷ்டி நடைபெற்றது. 9—12—2004 அன்று காலை 8-30 மணிக்கு உபதேசரத்தின மாலை, திருவாய்மொழி நூற்றந் தாதி கோஷ்டி சாற்றுமுறை நடைபெற்றது. ஸுதர்சனர் சதாபிஷேக வைபவ நிகழ்ச்சிகளுக்கு முன்னோடியாக 26—11—2004 வெள்ளிக் கிழமை முதல் ஞாயிற்றுக்கிழமை முடிய திருமலை திருப்பதி தேவஸ் தான ஆழ்வார் திவ்யப்ரபந்த செயல் திட்டத்தின் ஆதரவில் விழாப் பந்தலில் திருப்பாணாழ்வார் கார்த்திகை மாத ரோகிணி திருநட்சத்திர அவதார உத்ஸவம் கொண்டாடப்பட்டது. 26—11—2004 வெள்ளி அன்று மாலை செயல்திட்ட அலுவலரின் வரவேற்புரைக்குப் பிறகு திருவெள்ளறை கீழத்திருமாளிகை அம்மாள் எஸ். திருவேங்கடாசார் யர் தலைமையில் ஸுதர்சனர் எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி "அமலனாதிபிரான் அவதாரிகையும் முதல் பாசுரமும்" என்னும் தலைப் பிலும், கோமடம் ஸம்பத்குமாராசார்யர் "அமலனாதிபிரான் 2, 3 பாசுரங்கள்" என்னும் தலைப்பிலும் உபந்யஸித்தனர். தொடர்ந்து ஸ்ரீரங்கம் ஜீ. ரங்கராஜன் குழுவினரின் வீணைக்கச்சேரி நடைபெற்றது. 27—11—2004 சனிக்கிழமையன்று திருவெள்ளறை மேலத்திரு மாளிகை அம்மாள் எஸ். ஸௌம்யநாராயணாசார்யர் தலைமையில் ஸ்ரீரங்கம் திருமலாசார்யர் "அமலனாதிபிரான் 4, 5 பாசுரங்கள்", திருப்புல்லாணி சுந்தரராஜ ஐயங்கார் "அமலனாதிபிரான் 6, 7 பாசுரங் கள்" என்னும் தலைப்புகளில் உபந்யஸித்தனர். தொடர்ந்து திருச்சி

புத்தூர் ஜெ. வெங்கட்ராமன் குழுவினரின் விஷ்ணுபரமான வாய்ப் பாட்டுக் கச்சேரி நடைபெற்றது. 28—11—2004 ஞாயிறு அன்று ஸ்ரீ அ. கிருஷ்ணமாசார்யர் தலைமையில் திருப்பதி மா. வரதராஜன் "அமலனுதிபிரான் 8, 9 பாசுரங்கள்", ஸ்ரீரங்கம் வித்வான் நரசிம்மா சார்யர் "அமலனுதிபிரான் 10-ம் பாசுரம்" பற்றி உபந்யஸித்தனர். திருப்பதி மா. வரதராஜன் அவர்கள் எழுதிய "வைஷ்ணவ மலர்கள்" புத்தகம் வெளியிடப்பட்டது. தொடர்ந்து சென்னை குமாரி அனுப்ரியா ராமாநுஜம் குழுவினரின் வைணவ இன்னிசைப் பாடல்கள கச்சேரி நடைபெற்றது. அம்மாள் ஸ்ரீதிருவேங்கடாசார்யர் நன்றி நவில, திருமலை ஆழ்வார் திவ்யப்ரபந்த செயல்திட்ட நிகழ்ச்சிகள் இனிது நிறைவுற்றன.

தொடர்ச்சியாக ஸுதர்சனர் சதாபிஷேக வைபவ நிகழ்ச்சி நாட் களில் மாலை 7-00 மணிமுதல் பின்வரும் சொற்பொழிவுகள் நடை பெற்றன. தொடக்க நாளான 29—11—2004 திங்கட்கிழமை மாலை "புத்தூர் ஸ்வாமி ஆற்றிவரும் அரும்பணிகள்" பற்றி, திருவெள்ளறை கீழத்திருமாளிகை அம்மாள் திருவேங்கடாசார்யரும், "ஸுதர்சனரின் சாரீரககாரிகாவளீ விவரணம்" பற்றி ஸ்ரீரங்கம் வித்வான் நரசிம்மா சார்யரும் சொற்பொழிவாற்றினர். இரண்டாம் நாளான 30—11—04 செவ்வாய்க்கிழமையன்று சென்னை டாக்டர் எம். ஏ. வேங்கடகிருஷ் ணன் ஸ்வாமி "ஸுதர்சனரின் ஸ்தோத்ரரத்ன சது:ச்லோகீ, கத்ய வ்யாக்யானப் பதிப்புகள்" பற்றியும், திருப்புல்லாணி சுந்தரராஜ ஐயங்கார் "ஸுதர்சனரின் உபநிஷத் விளக்கங்கள்" பற்றியும் சொற் பொழிவாற்றினுர்கள். ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதியாய் எழுந்தருளியிருக் கும் வானமாமலை ஜீயர் ஸ்வாமி நேரில் விஜயம் செய்து ஸுதர் சனர் ஸ்வாமிக்குப் பொன்னுடை போர்த்தி தம்பதிகளுக்கு மங்களா சாஸனம் செய்தார். விழாமேடையில் ஸுதர்சனரின் பணிகளை வெகு வாகப் பாராட்டியும், அவர் அரோகதிடகாத்திரராய் வாழ வேண்டு மென்று வாழ்த்தியும் மங்களாசாஸனப் பேருரை நிகழ்த்தினுர். ஜீயர் ஸ்வாமி தாம் பூர்வாச்ரமத்தில் இயற்றி ஸுதர்சனர் ஸ்வாமியால் பதிப்பித்து வெளியிடப்பட்ட "திருக்குறள் ஸம்ஸ்க்ருத மொழி பெயர்ப்பு" நூலை மறுபதிப்புச்செய்ய உதவுவதாகவும் வாக்களித்தார். மூன்றும் நாளான 1—12—2004 புதன்கிழமையன்று தில்லை திருச் சித்திரகூடம் ஏ. வி. ரங்காசார்யர் "ஸுதர்சனரின் குருபரம்பரை விளக்க நூல்கள்" பற்றியும், புதுவை பெருமாள் ராமாநுஜதாஸர் "ஸுதர்சனரின் சங்கரரும் வைணவமும் முதலான ஆராய்ச்சி நூல் கள்" என்னும் தலைப்பிலும் சொற்பொழிவாற்றினுர்கள். நிகழ்ச்சி களின் நான்காம் நாளான 2—12—2004 வியாழக்கிழமையன்று மாலை ஸ்ரீரங்கம் பாலபண்டிதமணி திருமலாசார்யர் "ஸுதர்சனரின் தனிச் லோக விவரணம்" பற்றியும், திருவெள்ளறை அம்மாள் திருவேங்கடா சார்யர் "ஸுதர்சனரின் கேள்வி—பதில்கள்" பற்றியும் உரை நிகழ்த்

தினார்கள். ஐந்தாம் நாளான 3—12—2004 வெள்ளிக்கிழமையன்று சென்னை டாக்டர் மதிஸ்ரீநிவாஸன் "ஸுதர்சனரின் திவ்யப்ரபந்த விவரணங்கள்" பற்றியும், புதுவை கல்விக்கடல் ப்ரஹ்ம ஸ்ரீ கோபாலய்யர் "ஸுதர்சனரின் சங்கநூல் விளக்க நூல்கள்" பற்றியும் சொற்பொழிவாற்றினர். ஆறாம் நாளான 4—12—2004 சனிக்கிழமையன்று சென்னை ஆடிட்டர் கே. ஜகந்நாதன் "ஸுதர்சனரின் ஸ்ரீதத்வ விசாரம்" பற்றியும், கபிஸ்தலம் ஸ்ரீநிவாஸாசார்யர் "ஸுதர்சனரின் ப்ரபந்தாம்ருத தர்ப்பணம் (விரைணம்)" பற்றியும் சொற்பொழிவாற்றினார். ஏழாம் நாளான 5—12—2004 ஞாயிற்றுக்கிழமையன்று "ஸுதர்சனரின் பகவத் விஷயப் பதிப்புகள்" பற்றி சென்னை கே. பி. தேவராஜன் ஸ்வாமியும், "ஸுதர்சனரின் ரஹஸ்யக்ரந்தப்பதிப்புகள்" பற்றி காஞ்சீ P. B. ராஜஹம்ஸம் ஸ்வாமியும் உரை நிகழ்த்தினார்கள். எட்டாம் நாளான 6—12—2004 திங்கட்கிழமை மாலை ஸ்ரீரங்கம் N. S. கிருஷ்ணய்யங்கார் "ஸுதர்சனரின் வார்த்தாமாலை விவரணம்" பற்றியும், கோவை பரகாலராமாநுஜதாஸர் "ஸுதர்சனர் தீட்டிய தலையங்கங்கள்" பற்றியும் உரையாற்றினார்கள். ஒன்பதாம் நாளான 7—12—2004 செவ்வாய்க்கிழமை மாலை குமாரவாடி சே. ராமாநுஜாசார்யர் "ஸுதர்சனர்—மூத்த பத்திரிகையாளர்" என்னும் தலைப்பிலும், ஸ்ரீவில்லிபுத்தூர் கண்ணன்ஸ்வாமி "ஸுதர்சனரின் விஷ்ணுசித்த விஜயம்" பற்றியும் உரை நிகழ்த்தினார்கள். பத்தாவது தினமான 8—12—2004 புதன்கிழமையன்று "ஸுதர்சனரின் பேத்திகள் திருமதி கிருஷ்ணாகிருபா முதலியோரின் வீணை கச்சேரியுடன் நிகழ்ச்சிகள் தொடங்கின. ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ. கிருஷ்ணமாசார்யர் "ஸுதர்சனரின் வைணவத் தொண்டு" பற்றியும், மதுரை டாக்டர் இரா. அரங்கராஜன் ஸ்வாமி "ஸுதர்சனரின கம்பராமாயண விளக்க நூல்கள்" பற்றியும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். திருமதி கிருஷ்ண கிருபா "அர்ச்சாவதார வைபவம்" என்னும் தலைப்பில் உரையாற்றினார்.

9—12—2004 வியாழக்கிழமை காலை 9-30 மணியிலிருந்து 10-30 மணிக்குள் மகர லக்னத்தில் எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் தம்பதிகளுக்கு வைதிக முறைப்படி சதாபிஷேக முஹூர்த்தம் நடைபெற்றது. திவ்யதேச மாலை பரிவட்டம் மரியாதைகளுக்குப் பின்னர் தம்பதிகளிடம் அனைவரும் மங்கள அக்ஷதை ஆசீர்வாதம் பெற்றனர். விசேஷமாகத் ததீயாராதனம் நடைபெற்றது. அன்று மாலை 6-00 மணி அளவில் புத்தூர் பாலாஜி (எ) ரகுராமன் ஸுதர்சனரால் தான் பெற்ற பயன்கள் பற்றி உரையாற்றினார். பிறகு ஸ்ரீரங்கம் ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீரங்கநாராயண ஜீயர்ஸ்வாமி தலைமையில் புத்தக வெளியீட்டு விழா நடைபெற்றது. மதுரை பேராசிரியர் இரா. அரங்கராஜன்ஸ்வாமி பதிப்பித்து வெளியிட்ட "ராமாநுஜார்ய திவ்யசரிதை"யின் எளிய

நடை விவரண நூல் சதாபிஷேகம் கண்டருளும் ஸுதர்சன ஸ்வாமிக்கு ஸமர்ப்பணமாக வெளியிடப்பட்டது. முதல் பிரதியை கிருஷ்ணமாசார்யர் வழங்க ஸுதர்சனர் ஸ்வாமி பெற்றுக்கொண்டார். "ஸுதர்சனம்" ஸ்தாபகர் ஸ்ரீ கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி எழுதிய "திருப்பல்லாண்டு விவரணம்" மறுபதிப்பும் வெளியிடப்பட்டது. விழாக்கமிட்டியினரின் சார்பாக வழங்கப்பெற்ற பொற்கிழியை ஜீயர் ஸ்வாமி ஸுதர்சனருக்கு அளித்து, அவர் ஆற்றியுள்ள ஸம்ப்ரதாயப் பணிகளைப் பாராட்டி அனுக்ரஹ உரை நிகழ்த்தினர். ஸுதர்சனரும் அவருடைய தர்மபத்தினியும் நோய்நொடியின்றி பல்லாண்டுகள் வாழ்ந்து ஸம்ப்ரதாயப்பணி புரியவேண்டும் என்று ஸ்ரீரங்கநாராயண ஜீயர்ஸ்வாமி ஆசீர்வதித்து மங்களாசாஸனம் செய்தார். ஸுதர்சனர் ஸ்வாமி தம்முடைய ஏற்புரையில் கடந்த பத்து நாட்களாகத் தமக்குச் சூட்டப்பெற்ற புகழாரங்கள் அனைத்தும்—ஸம்ப்ரதாயப் பணிக்கு நிதி வைத்ததோடு அல்லாமல் அதைத் தொய்வின்றி நடத்துவதற்காகத் தம்மையும், உருவாக்கிய தம் தந்தையாரும், ஸ்ரீவைஷ்ணவ ஸுதர் சனம் மற்றும் அறக்கட்டளைகளின் நிறுவனருமான கி. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் ஸ்வாமியையே சேரும் என்று கூறினர். ஸுதர்சனர் சதாபி ஷேக நிகழ்ச்சிகளைச் சிறப்பாக நடத்த ஏற்பாடு செய்த விழாக் கமிட்டித் தலைவர் அம்மான் திருவேங்கடாசார்யர், உபதலைவர் அம்மாள் ஸேனம்யநாராயணாசார்யர், செயலாளர் கிருஷ்ணமாசார்யர், பொருளாளர் வேங்கடம், உறுப்பினர்கள் ஆராவமுதன், அந்தணல்லூர் முரளி, பாலாஜி (எ) ரகுராமன் ஆகியோர் ஸுதர்சனர் ஸ்வாமியால் பொன்னாடை போர்த்தி கௌரவிக்கப்பட்டனர். தவிர்க்க முடியாத காரணங்களால் சதாபிஷேகத்திற்கு எழுந்தருள முடியாத ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீபெரும்பூதூர் வரத யதிராஜ ஜீயர் ஸ்வாமியும், மேலக்கோட்டை யதுகிரி ஸ்ரீமத் பரமஹம்ஸ யதிராஜ ஜீயர் ஸ்வாமியும் 21—12—2004 அன்று எழுந்தருளி மங்களாசாஸநம் செய்தனர்.

ஸுதர்சனர் சதாபிஷேக வைபவத்தில் அவருக்கு மரியாதை செய்து கௌரவித்ததில் ஸ்ரீரங்கம் பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ சபா, ஸ்வாமி நம்மாழ்வார் (இந்தியா) பவுண்டேஷன் (பெங்களூர் கிளை) சென்னை கிஞ்சித்காரம் டிரஸ்டு, திருநின்றவூர் ஸ்ரீவைஷ்ணவ ஸபா, பெங்களூர் ஸத்ஸம்ப்ரதாய பிரவசன ஸபா முதலிய அமைப்பு களும் பங்கு கொண்டன. நிறைவாக சதாபிஷேக் வைபவக் கமிட்டி யின் தலைவரான ஸ்ரீதிருவேங்கடாசார்யர் நன்றிநவில நிகழ்ச்சிகள் இனிது நிறைவடைந்தன. வாழ்க ஸுதர்சனர் பல்லாண்டு. பொலிக, பொலிக அவருடைய வைணவப் பணி.

ஸ்ரீ:







ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் வரவர முனயே நம:
ஸ்ரீவானமஹாசல முனிப்யோ நம:

# ஸ்ரீமுகங்கள்

**1. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி வானமாமலை கலியன் ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி, நான்குனேரி.**



அன்பர்களே, ஆத்யாத்மிக நண்பர்களே,

"புத்தூர் ஸ்வாமி" என்றே நல்லோர்கள் யாவராலும் மிக்க மதிப்புணர்வுடனும், மிக்க அபிமானத்துடனும் அழைக்கப்படும் "ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன"ப் பத்திரிகை ஆசிரியராய் விளங்கா நிற்கும் ஸ்ரீ உ. வே கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமியின் "சதாபிஷேக வைபவம்" 9—12—2004 அன்று வெகு கோலாஹலத்துடன் கொண்டாடப்படப்போவதைத் தெரிந்து நமதுள்ளம் அளவிலா உவகை கொள்கின்றது. ஸ்ரீ உ. வே புத்தூர் ஸ்வாமியின் பல வாருன பெருமைகளைப் பரக்க எடுத்துரைக்கப்புக்கால் "பன்னியுரைக்குங்கால் பாரதமாம்". இருப்பினும், சுருக்கமாகச் சில வார்த்தைகள் பேசிப் பேறுபெற விழைகின்றது நம் மனம்.

'எம்பெருமானார் தர்சனம்' என்றே நம்பெருமாளாலே பெயரிட்டு நாட்டி வைக்கப்பட்ட, பரம ஸத்ஸம்ப்ரதாயமான, நமது தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தை, விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை மிகமிகச் சீரிய பாங்கினில், இதோ நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் இக்கலியுகத்தினில் இந்தப் புத்தூர் ஸ்வாமியைப் போன்று போற்றிப் பாதுகாத்துவரும் மஹா புருஷர் வேறொருவர் உளரோ என எண்ணப்புகின், இரண்டாவது விரல் மடங்காதென்பது மிகைபடக் கூறலன்று. தமது திருத்தந்தையார் காட்டித்தந்த மிகவுயர்ந்த மார்க்கத்தில் வேரூன்றி நின்று, அந்த மஹான் விட்டுச்சென்ற திருப்பணிகளைத் தொடர்ந்து ஆற்றியும், எத்தனை

எத்தனையோ திவ்யப்ரபந்த, தத்வ்யாக்யான, ரஹஸ்யக்ரந்தங்களையும், குருபரம்பராப்ரபாவம் முதலிய நூல்களையும், நமது ஸத் ஸம்ப்ரதாய ஸ்தாபகங்களான புதிய நூல்களையும் மிகச் சீரிய பாங்கினில் வெளியிட்டு லோகோபகாரம் பெரிதும் புரிந்துள்ள மஹாநுபாவரிவர். அத்தனைக்கும் சிகரம் வைத்தாற்போல், கருதுமிடம் பொருது வெல்லும் "திருவாழியாழ்வான"து திருப்பெயர் தாங்கித் திகழும் மிகச்சிறந்த மாதப்பத்திரிகையான "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்ச"னத்தை ஐம்பத்திரண்டு ஆண்டுகளாக வெளியிட்டு வைணவ உலகிற்கும், பொருமையற்ற ஆத்திக அன்பருலகிற்கும் அரும்பணியாற்றிவரும் வித்தகர்.

நாம் இந்த மஹாபுருஷருடைய திருத்தமப்பனர் ஸ்வாமிக்கான பெருவிழாவிலும், ஆகம ஸம்பந்தியான மாநாட்டிலும், சென்னையில் திருவல்லிக்கேணி நல்லதம்பி முதலித்தெருவிலிருந்தவொரு மண்டபத்திலும், பல்கலைக்கழகத்தின் அரங்கத்திலும் கலந்துகொண்டு களிப்புற்ற நிகழ்ச்சி நம் மனத்தில் பசுமையாய் நிலைகொண்டு விளங்குகிறது. தனிப்பட்ட முறையில் எமக்கு இப்பெரியவர் நமது பூர்வாச்ரமத்தில் 1978-ஆம் ஆண்டிலே, நம்மால் இயற்றப்பட்ட "திருக்குறள்" ஸம்ஸ்க்ருத மொழி பெயர்ப்பு நூலினை மிகுந்த அன்பும், ஆதரவும் காட்டி, தமது அச்சகம் வாயிலாக வெளியிட்டுத்தந்த மஹோபகாரத்துக்கு நாம் அப்போதே எழுதினோம்—"தலையல்லால் கைம்மாறிலேன்" என்று.

இப்பெருமகனர், தற்போது தமது திருப்பாதங்களில் ஸஞ்சார யோக்யதை குன்றியிருப்பினும், தமது ஒப்புயர்வற்ற லேகன பாடவத்தால் குன்றத்திலிட்ட பெருஞ்சோதியாய் ஒளி குன்றுமலேதான் மிளிர்கின்ருர். இனி எந்த நோய் நொடியுமின்றி, திருப்பணிகளைச் செவ்வனே நிர்வஹித்துக்கொண்டு, பல்லாண்டு வாழ்ந்து இளைய தலைமுறையினர்க்கு நல்வழி காட்டிக்கொண்டு நூற்றுண்டு விழாவும் உரிய காலத்தில் இனிது கண்டு மகிழ வேணும்; நம்மையெல்லாம் மகிழ்விக்கவேணும் என்று நம் நாச்சியார்—பெருமாள் திருவடித் தாமரையிணைகளிலும், திருவெள்ளறை நெடுநோக்காளப்பெருமான் ஸ்ரீபுண்டரீகாக்ஷன் பாதாரவிந்தங்களிலும் பணிந்து பிரார்த்திக்கிறோம்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

    

**இ. ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி, ஸ்ரீரங்கம்**

**ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதியாய் எழுந்தருளியிருக்கும் கோயில் ஸ்ரீரங்க நாராயண ஜீயர் ஸ்வாமி, 9—12—2004 வியாழக்கிழமை மாலை ஸுதர்சனர் ஸ்வாமிக்கு சதாபிஷேக வைபவக் கமிட்டியினர் அளித்த பொற்கிழியை வழங்கி, அவருக்குப் பொன்னாடை போர்த்தி அருளிய பாராட்டுரை**



புத்தூர் ஸ்ரீ உ. வே வித்வான் கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் (ஸுதர்சனர்) கார்த்திகையில் ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் அவதரித்து இன்று சதாபிஷேகம் கண்டருளுகிறார். அந்த ஸ்வாமிக்கு அடியேன் பல்லாண்டு பாடுகிறேன்.

கார்த்திகை மாதம் கலியனும், நம்பிள்ளையும் அவதரித்த மாதம். அதனால் புத்தூர் ஸ்வாமி கலியனைப் போன்று ஸம்ப்ரதாய விஷயங்களில் "பரசமயப் பஞ்சுக்கு அனலின் பொறியாக"த் திகழ்கிறார். இதனால் இவர் வைஷ்ணவத்துக்கு ஒரு பாதுகாவலராக, அரணாக விளங்குகிறார் என்றே கூறலாம்.

நம்பிள்ளையைப் போன்று, அருளிச்செயல்களின் வ்யாக்யானங்களுக்கு அழகான, தெளிவான விவரணங்களை அளித்துள்ளார். அதனால் இவரை நம்பிள்ளையாகவே கொள்ளவேணும்.

ப்ரஹ்மஸூத்ர வ்யாக்யானங்கள், வேத உபநிஷத் வ்யாக்யானங்கள், கீதா வ்யாக்யானங்கள் ஆகியவற்றை எளியமுறையில் எழுதி வெளியிட்டதில் எம்பெருமானாரைப் போன்று பிரகாசிப்பதால், இவரை ராமாநுஜராகவே மதிக்கவேணும்.

ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் அவதரித்ததாலும், பெரியாழ்வாரைப் போல் பரதத்வநிர்ணயம் பண்ணும் ஸ்ரீவிஷ்ணுசித்தவிஜயம் என்ற

பல்லாயிரம் பக்கங்கள் கொண்ட க்ரந்தத்தை வெளியிட்டு வருவதாலும் இவரைப் பெரியாழ்வாராகவே போற்றவேணும்.

ஸ்ரீராமாயண பாரதாதி தனிச்லோகத்திற்கும், நாலாயிர திவ்ய ப்ரபந்தத்திற்கும் உள்ள பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம் அனைத்தையும் பாமரனும் தெரிந்து கொள்ளும்படி எளிய நடை விவரணம் எழுதி உபகாரம் செய்துள்ளதால், இவரைப் பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளையே என்று போற்றி மதிக்கவேணும்.

குருபரம்பரை நூல்களான ஆறுயிரப்படி, ப்ரபந்நாம்ருதம், ஆசார்ய வைபவ மஞ்ஜரி. வார்த்தாமாலை முதலிய நூல்கள் வெளியிட்டு, விளக்கங்கள் எழுதியுள்ளதால் இவரை ஸ்ரீமந்நாதமுனிகளாகவே கருதவேண்டும்.

பிராட்டியின் நிலையை அரண் செய்வதில், சதுःச்லோகியை அருளிச்செய்த ஆளவந்தாராகவே இவரைப் புகழவேண்டும்.

பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்துள்ள ரஹஸ்யக்ரந்தங்களையும், முமுக்ஷுப்படி முதலான ரஹஸ்யக்ரந்தங்களின் வ்யாக்யானங்களையும் விளக்கங்களோடு அச்சிட்டு உபகரித்துள்ள இந்த ஸ்வாமியை மணவாள மாமுனிகளாகவே வணங்கவேண்டும்.

இப்போது புத்தூரிலேயே இருந்துகொண்டு ஸம்ப்ரதாயத்தை வளர்ப்பதால் நம்மாழ்வாராகவே போற்றவேண்டும்.

ஆதியில், ஸுதர்சனத்தைப் பயன்படுத்தியவர் கிருஷ்ணனே; எனவே, இவரும் கிருஷ்ணனுக அவதரித்து, இப்போது ஸுதர்சனராகவே எங்கும் புகழப்படுகிறுர்.

பெரியாழ்வாரின் நட்சத்திரத்தில் அவதரித்து, விஷ்ணு பரத்வத்தை நிலைநாட்டி, பெருமாளுக்குப் பல்லாண்டு பாடிய பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டு வ்யாக்யானத்தை ஸ்வாமியின் சதாபிஷேக மஹோத்ஸவ வைபவத்தில் வெளியிடுவதைப் பரமபாக்யமாகக் கருதுகிறேன்.

இன்று நம்மிடையே நம்மாழ்வார், பெரியாழ்வார், கலியன், நாதமுனிகள், ஆளவந்தார், உடையவர், மாமுனிகள் ஆகிய அனைவரின் ஸ்வரூபமாகவே திகழும் புத்தூர் ஸ்வாமி, எம்பெருமானுரைப்போலே 120 வருஷங்கள் குடும்பத்துடன் திடகாத்திரமாக எழுந்தருளியிருந்து, நமது ஸம்ப்ரதாயத்தைக் கட்டிக் காத்து வளர்க்கப் பெரியபெருமாள், பெரியபிராட்டியார் திருவடிகளில் அடியேன் பிரார்த்திக்கிறேன்.

श्रीः

    

गोदायै नमः श्री वकुलभूषण भास्कराय नमः

श्रीमते रामानुजाय नमः श्रीमत्-वरवरमुनये नमः

உ. ஸ்ரீவரத யதிராஜ ஜீயர் ஸ்வாமி, ஸ்ரீபெரும்பூதூர்.



श्रीशैलेश दयापात्रं धीभक्त्यादि गुणार्णवं ।
यतीन्द्रप्रवणं वन्दे रम्यजामातरं मुनिम् ॥

लक्ष्मीनाथसमारम्भां नाथयामुन मध्यमां ।
अस्मदाचार्यपर्यन्तां वन्दे गुरुपरम्पराम् ॥

सत्यं सत्यं पुनः सत्यं यतिराजो जगद्गुरुः ।
स एव भुवि सर्वेषां उद्धर्त्ता न संशयः ॥

---

श्रीमदुभयवेदान्तप्रवर्तक श्री सुदर्शनस्वामीति प्रसिद्ध कृष्णस्वामिधीमतां शताभिषेक महोत्सवमहावैभवे कृतमिदं नवरत्नश्लोकमालिका मूल मङ्गलाशासनम्

---

१. शास्त्रार्थपत्रिका येन श्रीवैष्णवसुदर्शनम् ।
प्रकाश्यते स जयतात् कृष्णस्वामी महाशयः ॥

२. पित्रा प्रकाशितामेनां कुटुम्बस्वस्य मूलतः ।
मासिकां पत्रिकां पुत्रस्सोऽयं श्रेष्ठः प्रकाशते ॥

३. त्यक्तलौकिकभोगोऽसौ अकाषायधरो यतिः ।
वेदान्तोक्तसुमार्गेण कालं नयति सार्थकम् ॥ 1.

४. पुष्पकावर्तमेघोऽसौ विषयाणां प्रवर्षणे । 2.
लेखने वैदिकानां तु भानुर्हस्तसहस्रवान् ॥

3.

५. एवं सामर्थ्यवानस्ति मण्डितः पण्डितः शुचिः ।
आचारवान् यतिश्रेष्ठ-पादपद्मोपजीवितः ॥ 4.

६. दीपासज्ज्वालको दीपः तमिस्रां नाशयेद्यथा ।
स्वपित्राप्तमतिस्स्वामी जनानामान्तरं तमः ॥ 5.

७. नाम्ना कृष्णो गुणैर्भूमिनिर्वृतिं निरपायिनीम् ।
तन्वन् भक्त्या शतं शिष्यैरावृतो विलसेद्भुवि ॥ 6.

८. पूर्वं शिखावतां वंशदीपको मृदुवाग्गुणी ।
शिष्टेष्टः परमोदारः पूर्वाचार्यकृपालयः ॥ 7.

९. पुत्रपौत्रान्वितो बन्धुप्रियो विभ्राजताच्छतम् ।
समा वैष्णवकैङ्कर्यं कुर्वन्नाशास्महे प्रियात् ॥ 8.

॥ नित्यश्रीः नित्यमङ्गलम् ॥ 9.

**நவரத்ந ஶ்லோகமாலிகையின் பொருள்:**

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் எனும் சாஸ்த்ரார்த்த பத்திரிகையை வெளியிடும் கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் வெற்றியே பெறுவாராக.

தந்தையால் குடும்ப சொத்துக்களிலிருந்து வெளியிடப்பெற்ற இந்த மாதப் பத்திரிகையை அவரது மூத்த குமாரரான இவர் தொடர்ந்து வெளியிட்டு வருகிறார்.

லௌகிக போகங்களில் ஈடுபடாத இவர் காவியுடை அணியாத துறவியாயிருந்து கொண்டு வேதாந்தங்களில் சொல்லப்பட்ட நல்வழியில் பயனுடைய வாழ்க்கையை நடத்துகிறார்.

ப்ரளயகால மேகம்போல நல்ல விஷயங்களைப் பொழிந்து கொண்டு வேதமுறை தவறாத விஷயங்களை வெளிப்படுத்துவதில் ஆயிரம் கிரணங்கள் கொண்ட ஸூர்யன்போல் விளங்குகிறார்.

இவ்வண்ணம் பல திறமைகளையுடையவராய், உலகில் கொண்டாடப்படும் ஜ்ஞானியாய், யதிஶ்ரேஷ்டர்களின் திருவடிகளை ஆஶ்ரயித்தவராய் நல்லொழுக்கமுடையவராய் விளங்குகிறார்.

விளக்கில் கொளுத்திய தீப்பந்தம்போலே தம் தந்தையிடமிருந்து ஞானமடைந்த இவர் மக்களுடைய உள்ளிருளை நீக்குகிறார்.

கிருஷ்ணன் என்று பெயர் பெற்ற இவர் தம் குணங்களாலே உலகிற்கு அழியாத ஆனந்தத்தை விளைத்துக்கொண்டு பூமியில் நூற்றுக்கணக்கான சீடர்களோடு விளங்குவாராக.

பூர்வசிகைக் குலவிளக்கான இவர் மென்மையான வாக்கையும், நற்குணங்களையும் உடையவராய், நல்லோர்களுக்கு இனியவராய், வண்மைமிக்கவராய், பூர்வாசார்ய கருணைக்குப் பாத்திரராய் விளங்குகிறார்.

புத்ர பௌத்ரர்களோடு கூடியவராய், உறவினர்களுக்கு இனியவராய், வைஷ்ணவ கைங்கர்யத்தை இனிதாகச் செய்து கொண்டு நூறாண்டுகள் இவர் வாழ்வாராக.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

    

# ஸுதர்சனர் வைபவம்

அம்மாள் ஸ்ரீ திருவேங்கடாசார்யஸ்வாமி

கீழத்திருமாளிகை, திருவெள்ளறை.

[மணிவிழா மலரில் (யதிராஜ பாதுகா ஆசிரியர்) ஸ்ரீ உ வே V. V. ராமாநுஜய்யங்கார் ஸ்வாமி எழுதிய கட்டுரையைத் தழுவி எழுதப்பட்டது.]

## சோழியர்குடி

தமிழ்நாட்டு ஸ்ரீவைஷ்ணவர்களுள் பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவர், அபரசிக ஸ்ரீவைஷ்ணவர் என்று இருபிரிவினர் உள்ளனர். இவர்களுள் ஸாம்ப்ரதாயிகமான வேற்றுமை ஏதுமில்லை. முதல் சொன்ன வகுப்பினர் தங்கள் சிகையை (குடுமியை) தலையுச்சியில் முடிந்துகொள்வர். பிற்சொன்ன வகுப்பினர் தலையின் பின்புறத்தில் முடிந்து கொள்கின்றனர். ஆழ்வார்களுள் மதுரகவியாழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடிகள் மூவரும் பூர்வசிக வகுப்பைச் சிறப்பித்தவர்கள். நமது பூர்வாசார்யர்களுள் பலர் இக்குடியைச் சேர்ந்தவர்கள். வ்யாக்யான சக்ரவர்த்தியான பெரியவாச்சான்பிள்ளை, ஸ்ரீபாஷ்யத்தைத் "தினவடங்க"ச் சொல்லுமாற்றல் பெற்ற எங்களாழ்வான் (விஷ்ணுசித்தர்) முதலானோர் பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவர்களே. இவர்கள் "சோழியர்" என்று சிறப்பித்து அழைக்கப்படுகின்றனர். பெரும்பாலும் இவ்வகுப்பினர் சோழநாட்டையும், பாண்டிய நாட்டையுமே இடமாக உடையவர்களாகக் காணப்படுகிறார்கள்.

ஸுதர்சன ஸ்தாபகர் ஸ்ரீ ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி வைஷ்ணவ மாஸமான மார்கழியில் விஷ்ணு நக்ஷத்ரமான ச்ரவணத்தில் தனுர் மாஸாராதன காலமான விடியற்காலையில் 'மாரிமலை முழைஞ்சில்' பாசுர தினத்தில் (5—1—1897) "பூர்வஸந்த்யாயாம் ஆவிர்பூதம் மஹாத்மநா" என்ற கணக்கில் வந்து தோன்றினார். இவர் தாயார் பெயர் சேஷம்மாள் என்பது. இவர் தோன்றிய சுபவேளையை நோக்குங்கால் "ஆழிப்பாரிவன் நேரில்லைகாண்

திருவோணத்தான் உலகாளுமென்பார்களே'' என்ற ஆழ்வார் பாசுரத்துக்கேற்ப இவர் மிக்க புகழாளராய் வாழ்ந்திருந்தது அதிசயமல்ல.

## 'ஸுதர்சனர்' கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி

நற்குணப் பண்புகளுக்கு இருப்பிடமான ஸ்ரீநிவாஸ ஐயங்கார் ஸ்வாமியின் மூத்தகுமாரர் ஸ்ரீ உ வே எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார். இவரே இப்போது ''ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்'' பத்திரிகையை ஐம்பது வருடங்களுக்குமேல் ஆசிரியராக இருந்து நடத்தி வருபவர். பத்திரிகையின் பெயரே இவர் பெயராகிவிட்டது. ''ஸுதர்சனர்'' என்றே அழைக்கப்படுகிறார். இப்பெயரையிட்டே நாமும் ஸ்வாமியை அழைப்போம். ஸுதர்சனர் ஸ்வாமி பிறந்தது 24—11—1924-க்குச் சேர ரக்தாக்ஷி ஸ்ரீ கார்த்திகை-மீ 9-வ ஸ்வாதியில். ஸ்ரீரங்கம் மேலச்சித்திரை வீதியில் தமது மாதாமஹருடைய இல்லத்தில் இரண்டாவது குழந்தையாகப் பிறந்தவரெனினும், நோன்பு நோற்றுப் பெற்ற பிள்ளையாவர். 'என்ன நோன்பு நோற்றாள் கொலோ' என்பது இவரிடம் ஸார்த்தகமாயுள்ளது. திருவெள்ளறைப் புண்டரீகாக்ஷப் பெருமானுக்கு ''பன்னிரண்டு திருவோணமட்டேன்'' என்கிறபடி 12 திருவோண தினங்களில் (மாதந்தோறும்) தளிகை ஸமர்ப்பித்துத் ததீயாராதனம் நடத்தி, எம்பெருமான் அநுக்ரஹத்தால் இவர் பிறந்தவர்.

## இளமைக் கல்வி

முறையே ஜாதகர்ம நாமகரண சௌள அக்ஷராப்யாஸ ஸம்ஸ்காரங்களைப் பண்ணி வைத்த திருத்தகப்பனார் இவரை, தம் மாலேயே ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீராமகிருஷ்ண ஆரம்பப்பள்ளியில் படிக்கவைத்தார். அங்கு நான்கு வகுப்புகள் படித்துப் பிறகு திருச்சி நேஷனல் காலேஜைச் சேர்ந்த சேஷய்யங்கார் நினைவு உயர்நிலைப்பள்ளியில் பள்ளி முடிவுத் தேர்வு (S.S.L.C.) வரை படித்தார். இத்தேர்வில் இவர் பள்ளிக்கூடத்தில் முதலிடத்தில் (First Rank) தேர்ச்சி (Pass) பெற்றது குறிக்கத்தக்கது. பிறகு ஸெயின்ட் ஜோசப் கல்லூரியில் 1940 முதல் 1945 வரை படித்து இடைநிலை (Intermediate) பி.ஏ. ஆனர்ஸ் (B.A. Hons-Mathematics) தேர்வுகளில் கல்லூரியில் தலைமையிடத்தில் தேர்ச்சிபெற்றார். 1942-ல் ஸம்ஸ்க்ருதத்தில் முதல் மதிப்பெண் (Top Marks) வாங்கியதற்காகவும் முதலிடத்தில தேர்ச்சி பெற்றதற்காகவுமான பரிசை அந்த ஆண்டின் கல்லூரி ஆண்டு விழாத் தலைவர் Sri

C. V. ராமன் கையால் வாங்கியதை இவர் ஒரு பெருப்பேருகக் கருதுகிருர். திருச்சி ஸாஹித்ய பரிஷத்திலும் இவர் பல பரிசுகள் பெற்ருர்.

ஸம்ஸ்க்ருதத்தை நன்ருகப் பயின்று அம்மொழியையும் கணிதத்தையும் இஷ்டபாடமாகக் (Optional Subjects) கொண்டு ஸுதர்சனர் I. A. S. போட்டிப் பரீக்ஷை எழுதினுர். ஆனல் ஸ்ரீவைஷ்ணவ உலகின் நல்லகாலம் அத்தேர்வில் முதல் சில இடங்களுள் (First Few Rank) இவர் வரவில்லை. I. A. S. ஆபீசராய் அரசாங்கப் பதவியில் அமர்ந்திருந்தால் இவர் ஆற்றியுள்ள வைணவத்தொண்டு நமக்கு இல்லாமலே போயிருக்கும்.

1948-ல் சட்டக்கல்லூரியில் சேர்ந்து B.L. பட்டப்படிப்பை முடித்து 1951-ல் வழக்கறிஞராக (Advocate) உருவானுர் நம் ஸுதர்சனர் ஸ்வாமி. தந்தையார் தொடங்கின பத்திரிகையை நடத்துவதிலும் நீதிமன்ற வேலைகளிலும் தந்தையாருக்கு உதவி புரிந்து இரண்டு துறைகளிலும் நல்ல தேர்ச்சியடைந்தார். 1953-ல் தந்தையாரின் மறைவுக்குச் சில ஆண்டுகளுக்குப் பின்னர், அட்வொகேட்டாகப் பணிபுரிவதை அறவே துறந்து ஸம்ப்ரதாயப் பணியில் தம்மை முழுவதும் அர்ப்பணித்துக்கொண்டார். நீதிமன்றங்களுக்கு வெளியிலிருந்தே நமது ஸம்ப்ரதாயத்திற்கும் எம்பெருமானுக்கும் வழக்கறிஞராகப் பணியாற்றுகிருர். "பரை: பரிப₄வே ப்ராப்தே மத₃தீ₄நா தவ ஸ்தி₂தி:" [பிரானே! பிறர் உன்னை அவமதிக்கும்போது, என்னுலேயே நீ உளனுக வேண்டியுள்ளது.] என்று ஒரு பெரியவர் எம்பெருமானை நோக்கி விளித்ததாகக் கேட்டதுண்டு. விஷ்ணுத்வேஷிகள் எம்பெருமானைக் குறைத்துக் கூறும்போது அவனுடைய பெருமேன்மையை எடுத்துக் கூறவும், த்வேஷிகள் கூற்றைக் கண்டிக்கவும் நல்ல வழக்கறிஞர்கள் தேவையல்லவா? "ஸ்ரீமந் நாராயணனே முழு முதற் கடவுள்; அவனுக்கு ஒப்பு சொல்லக்கூடிய வேறு தெய்வமில்லை" என்று விஷ்ணு பாரம்யத்தை உலகுக்கு எடுத்துச் சொல்வது மிகவும் தேவையான பணியாயுள்ளது தற்காலத்தில். சிவனை உயர்ந்த தெய்வமாகக் கூறுவதற்காக நாராயணனைப் பற்றிக் குறைவாகக்கூறி, பரமப்ரமாணங்களாக எல்லா வைதிகர்களாலும் கொள்ளப்பட்ட நூல்களில் இல்லாதவைகளான பொய்க்கதைகளைத் திரும்பத்திரும்பக் கூசாமல் கூறி, தங்கள் பண பலத்தாலும் இதர காரணங்களாலும் மிகச் சலுகை பெற்ற ஒரு கூட்டம் உள்ளதை எல்லா வைஷ்ணவர்களுமறிவார்கள். இவர்களின்

ஆர்ஜவமற்ற கூற்றுக்களில் உள்ள பொய்களை, தக்க ப்ரமாணங்களைக் காட்டி அம்பலப்படுத்தி எம்பெருமானின் பரத்வத்தை அறியாதவர்கள் நன்ருக அறியும்படி எம்பெருமானின் வழக்கறிஞராகச் சீரிய முறையில் ஸுதர்சனர் கடந்த ஐம்பத்திரண்டு ஆண்டுகளாகப் பணியாற்றி வருவதை வைணவ உலகம் போற்றி வருகிறது.

## ஸ்வரூபக்ரந்தஸேவநம்

நமது கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி எங்களாழ்வான் வம்சஸ்தரான ஸ்ரீமத்பரமஹம்ஸ புண்டரீகாக்ஷ ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியிடம் ஸமாச்ரயணம் பெற்ருர். ஸாமான்ய சாஸ்த்ரங்களைத் தமது தந்தையாருக்குப் பரம ஆப்தரான ஸ்ரீ உ வே கோழியாலம் ரங்கநாதாசார்ய ஸ்வாமியிடம் அதிகரித்து, அந்த ஸ்வாமியிடமே வேதாந்த தேசிகருடைய க்ரந்தங்கள் பலவற்றையும் பயின்ருர். ஸம்ப்ரதாய க்ரந்தங்களை அதிகரித்தது ஸ்ரீ உ வே ஸ்ரீகாஞ்சீ திருமலை ஈச்சம்பாடி ஸ்ரீநிவாஸ ராகவாசார்ய ஸ்வாமியிடம். இந்த ஸ்வாமி உத்தமாச்ரமம் ஸ்வீகரித்து ஸ்ரீமத்பரமஹம்ஸ திருவேங்கட ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி என்ற திருநாமத்துடன் பல திவ்யதேசங்களிலும், சரமகாலத்தில் திருக்குறுங்குடியிலும் பெரும்புகழுடன் வாழ்ந்திருந்தார். ஸுதர்சனர் ஸ்வாமி தமது தந்தையாரான ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி, காரப்பங்காடு மஹாவித்வான் வேங்கடாசார்யஸ்வாமி, காஞ்சீ மஹாவித்வான் ப்ர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி, வேளுக்குடி வரதாசார்ய ஸ்வாமி, கோயில் சதாபிஷேகம் கோவிந்த நரசிம்மாசார்ய ஸ்வாமி முதலானேர்களிடம் பல ஸம்ப்ரதாயமான விஷயங்களைப் பெற்றுப் பயனுற்றதாக நன்றிப் பெருக்குடன் கூறுகிருர்.

## ஸுதர்சனரின் வைணவத் தொண்டு

தமது தந்தையாரின் நற்பண்புகள் யாவும் ஸுதர்சனரிடம் பிறப்பினுலும் பயிற்சியினுலும் குடிகொண்டுள்ளன. ப்ரமாணங்களுக்கொட்டி உண்மையைக் கூற என்றும் இவர் அஞ்சியதில்லை. தந்தையார் காலத்துக்குப்பின், ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனத்தைக் கடந்த 50 ஆண்டுகளுக்கு மேலாக, சீரிய முறையில் நடத்தி வருகிருர். முன்பு விஷ்ணுசித்தரான பெரியாழ்வார் பாண்டிய அரசனுடைய அவையில் பரதத்வ நிர்ணயம் பண்ணிக் கிழியறுத்துக் கொண்ட சரித்திரம் நாம் அறிந்ததே. நாராயணனே மேலான ஒப்பாரும் மிக்காருமில்லாத பரம்பொருள் என்பதை

ஶ்ருதி (வேதங்கள்) ஸ்ம்ருதி (வேதங்களை மனத்தில் கொண்டு ரிஷிகள் தந்துள்ள நூல்கள்) ஆகியவற்றை ப்ரமாணமாகக் கொண்டு ஸ்தாபிப்பதற்காக ''ஸ்ரீவிஷ்ணுசித்த விஜயம்'' என்ற பெரியதொரு நூலை ஸ்ரீ ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி எழுதலானார். இதில் ஒரு பாகமே முடிந்திருந்த தருவாயில் இந்த ஸ்வாமி பரமபதித்தபடியால் நமது ஸுதர்சனர் ஸ்வாமி இதைத் தொடர்ந்து எழுதலானார். இப்போது முதல் ஐந்து பாகங்கள் (சுமார் 2500 பக்கங்கள்) வெளிவந்துள்ளன. இன்னும் இதிஹாஸ புராணங்களைக்கொண்டு விஷ்ணு பரத்வத்தை விளக்கும் வகையில் இந்த நூல் தொடர்ந்து ஆயிரக்கணக்கான பக்கங்கள் வெளிவர இருக்கிறது.

'ஸ்ரீவிஷ்ணுசித்த விஜயத்தில்' பல நூல்கள் அடங்கியுள்ளன. ஸ்ரீஸூக்தம், புருஷஸூக்தம் முதலான பஞ்சஸூக்த வ்யாக்யானங்கள், பராசர விசிஷ்ட பரம தர்ம சாஸ்த்ரம், ஸாத்விக விஜயம் (மஹா விஷ்ணுவுக்குத் தமோ குணமுள்ளது என்ற ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதியின் கூற்றை மறுப்பது) முதலானவை இப்பெரிய நூலில் அடக்கம்.

'சங்கரரும் வைணவமும்' என்ற நூல் சிறந்த ஆராய்ச்சி நூலாகும். ஆதிசங்கர பகவத் பாதர் நாராயணனையே பரதத்வமாகக் கொண்டவர். மற்ற தெய்வங்களைப் பரதத்வமாகக் கொண்டவரல்லர் என்பதை அவர் நூல்களைக் கொண்டு ஐயும் திரிபற ஸ்தாபிப்பது இந்நூல்.

'சங்ககாலத் தமிழர் சமயம்' —ஒரு பேருபகாரமான நூலாகும். பழந்தமிழ் நூல்களில் மறைக்கொள்கைக்குச் சேர விஷ்ணுவே பரதெய்வமாகப் பேசப்பட்டுள்ளது. சிவன் முதலான இதர தெய்வங்கள் பரதெய்வமாகக் கொள்ளப்படவில்லை என்று பரிபாடல் முதலான சங்க நூல்களைக் கொண்டு மிகத்தெளிவாக நிலை நாட்டுவது. அக்காலத்திய தமிழர்கள் மாயோனாகிய கண்ணனையே பரம்பொருளாகக் கொண்டிருந்தனர். முக்கோலேந்திய துறவிகளே அக்காலத்திய தமிழ்நாட்டில் வாழ்ந்தனர் என்று திண்ணமாக அறியலாம். பல பரிபாடல்களின் விவரணமாக அமைந்தது ஸுதர்சனர் எழுதியுள்ள 'சாதிமத ஆராய்ச்சி' என்னும் நூல். இந்நூலின் இரண்டாவது பாகமும் வெளிவந்துள்ளது. முதல் பாகம் ''திருமால் பரிபாடல் விளக்கம்'' என்னும் தலைப்புடன் மறுபதிப்பும் வெளிவந்துள்ளது.

'கம்பனின் சமயம்' — இரண்டாம் பாகம் மணிவிழாவில் வெளி வந்தது. "கம்பநாட்டாழ்வார் என்று போற்றப்படும் தமிழ்க் கவிஞன்—இராமாயணத்தைத் தமிழ்க் காப்பியமாகப் பாடித்தந்த கவிஞர் பெருமான்—ராமபக்தியில் ஆழ்ந்த பரம வைஷ்ணவன்; ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யர்களின் நிர்வாஹங்கள் இவைகளில் தேர்ந்த அறிவுள்ளவன்; இவர்கள் அருளியுள்ள கருத்துக்களை ஆங்காங்கே தனது காப்பியத்தில் வைத்துப் பாடியுள்ளான். ஓர் அரசியல்வாதி (ம.பொ.சி.) தனது நூலில் கூறியுள்ளதுபோல சைவனல்லன்" என்று மறுத்து, தமது கொள்கையை ஆணித்தரமாக நிலைநாட்டியுள்ளார் ஸுதர்சனர் இந்நூலில். இராமபிரான் சிவலிங்கத்தை ராமேச்வரத்தில் ராவணனைக் கொன்ற பாபம் தொலைவதற்காக ப்ரதிஷ்டைபண்ணிப் பூசித்தான் என்பது சைவர்களின் வாதம். இது பெரும் பொய் என்று நிலைநாட்டுவது இவர் பதிப்பித்த 'இராமலிங்க ப்ரதிஷ்டை' என்னும் நூல்.

'அக்நிஹோத்ரியும் வைணவமும்' — கும்பகோணம் அக்நி ஹோத்ரம் ராமாநுஜ தாதாசார்யர் என்ற வித்வான் வைஷ்ணவ த்வேஷிகளான சைவக் கூட்டத்தினரால் தூண்டப்பட்டு எழுதி வெளியிட்ட "வரலாற்றில் பிறந்த வைணவம்" என்ற நூலில், "வைஷ்ணவ மதம் வேத காலத்துக்குப்பின் தோன்றியது; வேதத்தில் ஸூர்யனே விஷ்ணு எனப்படுகிறான்; விஷ்ணு என்று தனித் தெய்வம் வேதத்தில் சொல்லப்படவில்லை; வைஷ்ணவ ஆகமங்கள் விக்ரஹ வழிபாட்டை முக்கியமாகக் கொண்டவையல்ல; ஆழ்வார்கள் கூறும் பக்திநெறி உபநிஷத்தில் கூறப்படவில்லை. ராமாநுஜர் ப்ரபத்தியை மோக்ஷ உபாயமாகக் கூறவில்லை. கத்யத்ரயம் ராமாநுஜர் அருளிய நூலன்று; கைங்கர்யம் புருஷார்த்தமென்று ராமாநுஜர் கூறவில்லை. ஸ்ரீதேவிக்குப் புருஷகாரத்வம் உண்டென்று ஆழ்வார்கள் கூறவில்லை" என்றெல்லாம் மனம் போனபடி எழுதியுள்ளதைக் கண்டிப்பதற்காக வெளிவந்தது "அக்நிஹோத்ரியும் வைணவமும்" என்ற நூல்.

ஸுதர்சனர் பதில்கள் — ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனத்தில் தொடர்ந்து வெளிவருபவை. பத்திரிகை வாசகர்கள் கேட்கும் கேள்விகளுக்கு விடையும், பிற பத்திரிகைகளில் விஷமத்தனமாக நமது மதத்தைக் குறைகூறும் வகையில் எழுதப்பட்டவைகளுக்கு வாசகர்கள் வேண்டுகோளின்படி விமர்சனமும் இதில் இடம் பெறுகின்றன. பல ஜனரஞ்ஜக பத்திரிகைகளில் (Popular Magazines) குறிப்பாக சில சைவர்கள் வைணவத்தைக் குறைத்து

எழுதுவதை அவ்வப்போது கண்டித்து, உண்மையான ப்ராமாணிக நிலையை எடுத்துச் சொல்லுவது இக்கேள்வி—பதில்களின் முக்கியக் குறிக்கோளாக அமைந்துள்ளது. இதுவரை சுமார் 1500 கேள்விகளுக்குத் தினவடங்க விடையளித்துள்ளார் ஸுதர்சனர். சென்னை தியாகராய நகரில் உள்ள கலைஞன் பதிப்பகம் "ஸுதர்சனர் ஆயிரத்தெட்டு" என்னும் தலைப்பில் மூன்று பாகங்களில் ஸுதர்சனர் பதில்களில் முக்கியமானவற்றைத் தொகுத்து வெளியிட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**சீரியர் படை**—ஸ்ரீகள்ளழகர் தேவஸ்தானத்தின் முழு உரிமைச் சொத்தான திருமாலிருஞ்சோலைமலையில் ஒரு பாகத்தை ஆக்ரமித்து, 'பழமுதிர்சோலை' என்று முருகன் கோவிலமைத்ததை நீதிமன்றங்களில் கண்டித்து சென்னை உயர்நீதி மன்றத்தில், திருமாலிருஞ்சோலைமலையில் சைவர்களுக்கு உரிமை ஏதுமில்லை என்று தீர்ப்பு பெற்றிருந்தும் சைவர்கள் பழையபடி ஆக்ரமிக்கத் தொடங்கியதை (Encroachment) சட்டபூர்வமாகக் கண்டித்து வழக்கு நடத்துவதற்கென ஸுதர்சனர் முயற்சியால் சீரியர்படை அமைக்கப்பட்டு, நிதியும் திரட்டப்பட்டு விழிப்புடன் செயல்பட்டபடியால் ஆக்ரமிப்பு தடுத்து நிறுத்தப்பட்டுள்ளது.

'குருபரம்பராப்ரபாவ நூல்கள்' பின்பழகிய பெருமாள் ஜீயர் அருளிச்செய்த 6000-ப்படி குருபரம்பராப்ரபாவத்தை ப்ரமாணத் திரட்டுடன் (அர்த்தங்களுடன்) நேர்த்தியாக அச்சிட்டு வெளியிட்டுள்ளார். இந்நூலில் திவ்யப்ரபந்த ப்ராமாண்ய ஸமர்த்தனம், சரமோபாய நிர்ணயம், பெரிய திருமுடியடைவு ஆகிய நூல்கள் சேர்க்கப்பட்டுள்ளன.

'ப்ரபந்நாம்ருதம்' என்னும் ஸம்ஸ்க்ருத நூலைத் தமிழ் விவரணத்துடன் இரண்டு பாகங்கள் வெளியிட்டுள்ளார். பின்பழகிய பெருமாள் ஜீயர் சேர்த்தருளிய 'வார்த்தாமாலை' என்னும் நூலைத் தமிழ் விவரணத்துடன் அச்சிட்டு வெளியிட்டுள்ளார். வடுகநம்பி அருளிய 'யதிராஜ வைபவம்' என்ற வடமொழி நூலைத் தமிழ் விவரணத்துடன் வெளியிட்டுள்ளார். **'ஆசார்ய வைபவ மஞ்ஜரி'** என்னும் தொகுப்பு நூலும் இரண்டு பாகங்களாக வெளிவந்துள்ளது.

**'ரஹஸ்யக்ரந்தங்கள்'** — முமுக்ஷுப்படி திருமந்த்ரார்த்த நூலை ப்ரமாணத்திரட்டு (அர்த்தத்துடன்) வெளியிட்டதுடன், ஸ்ரீவசன பூஷணத்தை மணவாள மாமுனிகள் வ்யாக்யானத்துடனும் அதற்கு

நான்கு அரும்பதவுரைகளுடனும் வெளியிடத் தொடங்கி ஒரு பாகம் வெளிவந்துள்ளது. அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் 'அருளிச்செயல் ரஹஸ்யம்' ஸ்ரீ உ. வே. வேளுக்குடி கே. வரதாசார்ய ஸ்வாமியின் 'ரஹஸ்ய பூஷணம்' என்ற வ்யாக்யானத்துடன் வெளியிடப்பட்டுள்ளது. எறும்பியப்பா அருளிய 'சரமகுரு நிர்ணயம்' என்ற நூலை ப்ரமாணத்திரட்டுடன் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்.

'ஸ்தோத்ர வ்யாக்யானங்கள்'—ஜிதந்தே ஸ்தோத்ரம், ஸ்தோத்ர ரத்நம், சதுःச்லோகீ (இவற்றுக்குப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானங்களுடனும் ப்ரமாணத் திரட்டுகளுடனும்) வெளியிட்டுள்ளார். சதுःச்லோகீ (நாயனாராச்சான்பிள்ளை வ்யாக்யானம்), எம்பெருமானார் அருளிச்செய்த கத்யத்ரயத்தின் வ்யாக்யானங்கள் ஆகியவை ஸுதர்சனரால் தமது விவரணத்துடன் வெளியிடப்பட்டுள்ளன.

ஸ்ரீராமாயண தனிச்லோக வ்யாக்யானம் — பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த ஸ்ரீராமாயண தனிச்லோக வ்யாக்யானம், அபயப்ரதானஸாரம், பாரதாதி தனிச்லோக வ்யாக்யானம் இவற்றைத் தாம் எழுதிய தமிழ் விவரணத்துடனும் ப்ரமாண அட்டவணைகளுடனும் வெளியிட்டுள்ளார்.

'விசிஷ்டாத்வைத நூல்கள்' ஸ்ரீபாஷ்யத்தை ப்ரஹ்மஸூத்ரத்தை விவரிக்கும் சாரீரககாரிகாவளீ (ஸம்ஸ்க்ருத ச்லோகங்கள்) ஸுதர்சனரின் தமிழ் விவரணத்துடன், 'யதீந்த்ரமததீபிகை' ஸந்மத காரிகாவளி (தமிழ் விவரணத்துடன்) வெளியிட்டுள்ளார். விசிஷ்டாத்வைத மதத்தை நிலைநிறுத்தி ஸ்ரீ உ. வே. கோழியாலம் ரங்கநாதாசார்யஸ்வாமி எழுதிய 'விசிஷ்டாத்வைத விஜயம்' எனும் வடமொழி நூலுக்கு 'விசிஷ்டாத்வைத விஜய விவரணம்' என்ற தமிழ் விவரண நூல் ஸ்வாமியால் எழுதி வெளியிடப்பட்டது.

'பகவத்கீதை' — எம்பெருமானாரின் கீதாபாஷ்யம், அதற்கு ஸுதர்சனரின் தமிழ் விவரணம், கீதா ச்லோகத்துக்குச் சரியான வாதிகேஸரி ஜீயரின் தமிழ் வெண்பாக்கள் ஆகியவற்றுடன் 18 அத்யாயங்கள் முழுவதும் சுமார் 3000 பக்கங்கள் கொண்ட ஐந்து பாகங்களாக வெளியிடப்பட்டது.

'அருளிச்செயல் வ்யாக்யானங்கள்'—பகவத் விஷயம் திருவாய்மொழியின் எல்லா வ்யாக்யானங்கள் (6000, 9000, 12000, 24000, 36000), ஈட்டுக்குக் கிடைத்துள்ள இரண்டு அரும்பத

வுரைகள், ப்ரமாணத்திரட்டு முதலானவற்றுடன் முதல் மூன்று பத்துக்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன. முதல் பத்துடன் வாதிகேசரி ஜீயரின் 'உபயவேதாந்த ஜகுகண்டயம்' பதிப்பிக்கப்பட்டுள்ளது. 4 முதல் 10-ம் பத்து முடிய சே. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் பதிப்பு மறுபதிப்புச் செய்யப்பட்டுள்ளது. அண்மையில் நாலாம் பத்து அடையவளைந்தான் அரும்பதவுரையுடன் வெளியிடப்பட்டுள்ளது. மேல் பத்துக்களும் இவ்வண்ணமே விரைவில் வெளி வரும்.

'முதல், இரண்டாம், மூன்றும் திருவந்தாதிகள்' 'நான்முகன் திருவந்தாதி', 'திருவெழுகூற்றிருக்கை', 'சிறிய திருமடல்', 'பெரிய திருமடல்', 'திருமாலை', 'நாச்சியார் திருமொழி' முத லான திவ்யப்ரபந்தங்களுக்குப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யா னம், ஸுதர்சனரின் தமிழ் விவரணம், ப்ரமாணத்திரட்டு; முத லானவற்றுடன் வெளியிடப்பட்டுள்ளது.

நாலாயிர திவ்யப்ரபந்தம். முழுவதையும் மூன்று ஸம்புடமாகப் பல பதிப்புகள் நேர்த்தியாக அச்சிட்டு வெளியிட்டுள்ளார்.

'மோக்ஷோபாயப்ரதீபிகை'—என்னப்படும் வைகாநஸ ஸித்தாந்த ஸாரமான வடமொழி நூலைத் தமது தமிழ் விவரணத்துடன் வெளியிட்டுள்ளார்.

'திருப்பல்லாண்டு, திருப்பாவை, ஸந்த்யாவந்தனம்' இவற் றுக்கு ஸுதர்சனரின் திருத்தகப்பனார் எழுதிய தமிழ் விளக்கங்கள் ஸ்வாமியால் மறுபதிப்பு செய்து வெளியிடப்பட்டுள்ளன.

ஸ்ரீரங்கம் பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ ஸபையின் பொன் விழா மலரில் ஆழ்வார் ஆசார்யர்களின் வைபவங்களை ஸ்வாமி தாமே எளியநடையில் சுருக்கமாக எழுதி, அவதார ஸ்தல திவ்ய மங்கள விக்ரஹ போட்டோப் படங்களுடன் வெளியிட்டுள்ளார். இம்மலரில் இன்னும் பல கட்டுரைகள் உள்ளன.

ஸ்ரீ:

ஸ்ரீமதே நாராயணாய நம:    ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# செயற்கரிய செய்த சான்றோர்


கி. ஜகந்நாதன்

ஓ-9, மே மலர்த்தோட்டம், ஸ்ரீநிவாசா அவென்யூ சாலை,

இராஜா அண்ணாமலைபுரம், சென்னை-600 028.




நமது விலக்ஷணமான ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்துக்குப் பெருமையும், பொலிவையும் ஏற்படுத்தி, செயற்கரிய செய்த சான்றோராகத் திகழ்பவர் சதாபிஷேகம் கண்டருளும் நம் புத்தூர் ஸ்வாமி ஆவார். வைணவ ஸம்ப்ரதாயத்தில் அளவற்ற ஈடுபாடு, பூர்வாசார்யர்களிடம் பக்தி இவைகளோடு, வைணவ ஸம்ப்ரதாயத்தின் தனித் தன்மையை அனைவரும் உணரவேண்டும் என்னும் ஆர்வத்தோடு பல எளிய தமிழ் நூல்களை வெளியிட்டுப் பெரும் சாதனை படைத்தவர் புத்தூர் ஸ்வாமி ஆவார்.

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணமும், திராவிட வேதமாய்த் திகழும் திருவாய் மொழியும், வைணவத்துக்கு இரண்டு பெரிய மதில்களாகத் திகழ்பவை, ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில் உள்ள ஸாரார்த்தங்களையெல்லாம் பரம காருணிகரான பெரியவாச்சான் பிள்ளை தமது தனிஶ்லோக வ்யாக்யானத்திலும், திவ்யப்ரபந்த வ்யாக்யானங்களிலும் பரக்க அருளிச்செய்துள்ளார். பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம் இல்லையெனில் ஆழ்வார்களின் பாடல்களுக்கு உண்மையான உள்ளுறை பொருள்களை நாம் அறிய முடியாது. அவரது வ்யாக்யானங்கள் மிகுந்த ஆழமும், ரஸமும், நயமும் ஒருங்கே கொண்டு வைணவ ஸம்ப்ரதாயத்தின் ஸாரார்த்தங்களை வெளியிடும் சீரிய பொக்கிஷங்களாகத் திகழ்கின்றன. அவற்றை குருமுகமாகக் கேட்டாலொழிய, மேலெழுந்த வாரியாகப் படித்துப் பொருள் அறிய இயலாது. மணிப்ரவாள நடையில் அமைந்த இத்தகைய வ்யாக்யானங்களைப் பாமரர்களும் எளிதில் அறிந்து கொள்ளவேண்டும் என்னும் எண்ணத்திலேயே அனைத்து ஆழ்வார்களின் ப்ரபந்தத்தையும் பெரியவாச்சான்பிள்ளையின் வ்யாக்யானத்தோடு வெளியிட்டு, அதற்குக் கீழே புத்தூர் ஸ்வாமி எளியநடையில் உரை எழுதி வ்யாக்யானத்திற்கு மேலும் அழகையும் பெருமையையும் சேர்த்தவர் ஆவார். இவரது இத்தகைய சீரிய பணிக்கு வைணவ உலகமே கடமைப்பட்டுள்ளது.

சங்ககாலத் தமிழர் சமயம், சாதிமத ஆராய்ச்சி, கம்பனின் சமயம் போன்ற இவரது ஆராய்ச்சி நூல்கள் ஒப்பற்றவை. திருமாலின் ஒப்பற்ற பரத்வத்தைக் கூறும் பரிபாடல் பகுதிகளைத் தொகுத்து அதனை 'ஒப்பு நோக்கு' என்னும் முறையில் திருமழிசை ஆழ்வாரின் ப்ரபந்தமான திருச்சந்த விருத்தத்தில் ஒவ்வொரு பாடல் இறுதியிலும் மிக அழகாகத் தொகுத்துக் காட்டியுள்ளார். சென்னையில் ஒவ்வொரு வருடமும் கம்பன் விழா சிறப்பாகப் பட்டி மன்றத்துடன் நடைபெறும். ஆனால் அதில் பங்குபெறும் தமிழ் அறிஞர்கள் பெரும்பாலும் தங்கள் தங்கள் புலமையை வெளிப் படுத்தவேண்டும் என்ற ஒரே எண்ணத்தில் கம்பனின் பாடல் களுக்குத் தவறான பொருள் கொண்டு ராமனுடைய கல்யாண குணங்களை இல்லை செய்வர். ஆனால், கம்பனின் பாடல்களுக்கு உண்மையான பொருளைத் தமது 'கம்பனின் சமயம்' என்னும் நூலில் மிகத் திறம்படக் காட்டியுள்ளது புத்தூர் ஸ்வாமியின் தனிச்சிறப்பு.

இராமானுஜருடைய கீதாபாஷ்யத்துக்கு, ஆளவந்தாருடைய கீதார்த்த ஸங்க்ரஹத்தோடு வாதிகேஸரி ஜீயருடைய கீதை வெண்பா, வேதாந்த தேசிகனுடைய தாத்பர்ய சந்த்ரிகை வ்யாக் யானம் முதலியவற்றை அழகிய முறையில் விளக்கி, மிக அழகாக ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களையும் மேற்கோள்காட்டி, தமிழ் விரிவுரை எழுதிப் பேருபகாரம் செய்துள்ளார் நம் ஸ்வாமி. ஒவ்வொரு அத்தியாயத்தின் இறுதியிலும் ஶ்லோகத்தின் எண்களைக் குறிப்பிட்டு அந்தந்த ஶ்லோகங்களின் கருத்துக்களையும் தனியே காட்டியுள்ளார். இது அவருடைய மிகப்பெரும் சாதனை ஆகும். மூன்றாவது சதகத்தில் ஜீவனுக்கு முதல் முயற்சியில் ஸ்வா தந்த்ர்யம் உண்டா? இல்லையா? என்னும் விஷயத்தில் வேதாந்த தேசிகருக்கும் தென்னாசார்யர்களுக்கும் உள்ள கருத்து வேறு பாட்டை மிக அழகாக விளக்கி இதன் அடிப்படையில் இரண்டு ஸம்ப்ரதாயத்தின் உண்மை நிலையை நன்கு எடுத்துக் காட்டி உள்ளார்.

தவறு என்றால் அதனை அவர்கள் யாராக இருந்தாலும் சரி, தயவு, தாட்சிண்யம் பாராமல் சுட்டிக்காட்டும் தன்மையும், திறனும் படைத்தவர் ஸ்வாமி. ஸுதர்சனர் பதில் என்னும் பகுதியில் தொடர்ந்து பல சதகங்கள் (தற்போது 15-வது சதகம் தொடர் கிறது) வெளியிட்டு, திருமாலின் பரத்வத்தைத் தக்க ப்ரமாணங் களுடன் நிலைநாட்டி, பல பத்திரிகைகள், எழுத்தாளர்கள், பேச்

சாளர்கள் அனைவரையும் வாய்திறக்கவொண்ணுமல் செய்துவிடு வது இவரது ஆழ்ந்த சமயப் புலமைக்கு ஒரு சான்ருகும். இதே போல எம்பெருமானுக்கு அடுத்த ஸ்தானத்தில் விளங்கும் பெரிய பிராட்டியாரை, பேச நின்ற பிராட்டியாக்கி, அவருடைய இயல் பான சேஷத்வ பாரதந்த்ர்ய ஸ்வரூபத்தை இல்லை செய்து, பிராட்டியை ப்ரஹ்மம் என்றும், எம்பெருமானைப்போலவே துல்ய மான ஈச்வரத்வம் அவளுக்கும் உண்டு என்றும் பொருந்தா வாதம் செய்தனர் தேசிக ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த சிலர். இதனை "ஸ்ரீதத்வ ஸர்வஸ்வம்" "பஞ்சமபக்ஷ மத தூஷணீ" போன்ற நூல்கள் மூலம் பற்பல தேசிக ஸ்ரீஸூக்திகளை எடுத்துக்காட்டி, ஷெ வாதங்களின் பொருந்தாமையை விளக்கி அவைகளை நிர ஸித்து வெற்றிபெற்ருர். பெரியவாச்சான்பிள்ளையின தத்வத்ரய ஸங்க்ரஹம் என்னும் சிறிய நூலை எளிய தமிழ் விளக்கத்தோடு வெளியிட்டார். அந்நூலின் இறுதியில் நமது விசிஷ்டாத்வைத் ஸித்தாந்தத்துக்கு ஈச்வர தத்வம் ஒன்றே என்பதை மிக அழகாக; கடைசி சூர்ணையின் தமிழ் விளக்கத்தில் எடுத்துக்காட்டி, எம்பெரு மானை விட்டுப் பிரியாத நித்யாநபாயினியான பிராட்டிக்கும் எம் பெருமானைப்போல் தன்னைத்தவிர அனைத்து சேதநாசேதநங் களைத் தனக்கு ப்ரகாரமாகக் கொண்டுள்ள பெருமை, அவளுக்கு இல்லை என்பதை நன்கு நிலைநாட்டி 'பிராட்டியும் ப்ரஹ்மமே' என்று கூறும் வாதத்தை நிரஸித்தார். பட்டர் ஸ்ரீஸூக்திக்குத் தவருகப் பொருள் கொண்டு பிராட்டிக்கு இச்சையினுல் சேஷத்வம என்பது, பிராட்டிக்கு உண்டான சேஷத்வ பாரதந்த்ரியங்கள் உபய இச்சா ஸித்தம் என்பது போன்ற தவருன கருத்துக்கள் நிலவுகின்றன. தேசிக ஸம்ப்ரதாய நூல்களிலும் பட்டரின் ஸ்ரீகுண ரத்ன கோஶ ஶ்லோகங்களுக்குத் தவருன பொருளுடன் கூடிய உரையே காட்டப்பட்டுள்ளது. இக்கருத்துக்களை மறுத்து, ஸ்ரீபட்ட ரின் ஸ்ரீகுணரத்னகோஶ ஸ்ரீஸூக்திகளுக்கு உண்டான உண்மைப் பொருளை, புத்தூர் ஸ்வாமி எடுத்துக்காட்டியுள்ளார். உதாரணத் திற்கு இரண்டு இடங்களை மட்டும் குறிப்பிடுகின்றேன். "ஸ்வத: ஸ்ரீஸ்தவம் விஷ்ணோ:" என்று தொடங்கும் 31-வது ஶ்லோகத் திற்கு 'ஸ்வத:' என்னும் பதத்திற்கு உண்மையான பொருளான 'இயல்பாகவே' என்பதை விடுத்து 'இச்சையினுலேயே' என்று பொருள் கொள்வது, அதே ஶ்லோகத்தில் 'ஸ்வயா தீ₃ப்த்யா ரத்னம்"' என்று தொடங்கும பகுதியில் காட்டப்பட்ட ரத்னம், ஒளி ஆகிய த்ருஷ்டாந்தத்துடன் முரண்படும் என்பதை மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். அதேபோலே 34-வது ஶ்லோ

கத்தில் "யுவத்வாதெஸ துல்யே" என்னும் ஶ்லோகத்திற்கு இரு வருக்கும் உள்ள ஸ்வரூபத்தை வேறுபடுத்தி 'த்வயி க்ருத்வா' என்றும், 'பகவதி க்ருத்வா' என்றும் தனித்தனியே பதம் பிரித்துக் காட்டிப் பொருளை விளக்கியுள்ளது குறிப்பிடத்தக்கது. உண்மைக்கு மதிப்பளிப்பவர்கள் இதனை ஏற்று இனியாவது தங்களது தவற்றைத் திருத்திக் கொள்ளவேண்டும் என்பதே அடியேனுடைய விருப்பமாகும். இவரது வெற்றி நூல்களான ஸ்ரீதத்வ ஸர்வஸ்வம், பஞ்சமபக்ஷமத தூஷணி மற்றும் ஸ்ரீதத்வ விஜயம் ஆகியவை நடுநிலையாளர்களை உகப்பிக்கும் நூல்கள் என்பதில் ஐயமில்லை. இதற்குச் சான்றாக, புத்தூர் ஸ்வாமிக்கு வானமாமலை ஜீயர் ஸ்வாமி "ஸ்ரீதத்வ நிர்த்தாரகர்" "விசிஷ்டாத்வைத ஸம்ரக்ஷகர்" ஆகிய விருதுகளை அளித்து கௌரவித்தது குறிப்பிடத்தக்கது பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளை எளிய தமிழ் உரைகள் மூலம் வைணவ ஸம்ப்ரதாயத்தின் சீரிய அர்த்தங்களை உணர்த்தும் அவருக்கு ஸ்ரீகாஞ்சீ மஹா வித்வான் P. B. A. ஸ்வாமி அளித்த "திவ்யார்த்த ரத்ன நிதி" என்னும் விருதும் சாலப் பொருந்தும். "சங்கரரும் வைணவமும்" என்னும் நூல் மூலம் விஷ்ணு பரத்வத்தை நிலைநாட்டும் சங்கர பாஷ்ய வாக்யங்களை ஆங்காங்கே உதாஹரித்து 'சங்கரர் வைணவரே, ஷண்மதஸ்தாபகரல்ல' என நிலை நிறுத்தியதை அத்வைதிகளும் பாராட்டிக் கொடுத்த "வித்யா விஶாரத" என்னும் விருதையும் பெற்றார்

பூர்வாசார்யர்களின் வார்த்தைகள் அனைத்தையும் ஒருங்கே தொகுத்ததாய், பொருள் உணர அரியதான வார்த்தைகள் அனைத்திற்கும் மிக எளியதமிழ் உரை எழுதி "வார்த்தாமாலை" என்னும் நூலை நம் ஸம்ப்ரதாயத்துக்கு உபகரித்தவர் நம் புத்தூர் ஸ்வாமி ஆவார். அவரது 70-வது திருநக்ஷத்திர மலரில் "வாழ்வு தரும் வள்ளல்" என்னும் தலைப்பில் கட்டுரை எழுதிய அடியேன் தற்போது அவரது சதாபிஷேக மலரிலும் ஸ்வாமியின் பெருமையை இக்கட்டுரையில் எழுதுவதில் மகிழ்ச்சியும், பெருமையும் அடைகிறேன். எழுத வாய்ப்பளித்த ஸுதர்சனர் சதாபிஷேக வைபவக் கமிட்டிக்கு எனது நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

தம்முடைய வாழ்நாள் முழுவதையும், க்யாதி, லாப, பூஜைக்கு ஆசைப்படாமல் எம்பெருமானுடைய கைங்கர்யத்தையே உத்தேச்யமாகக்கொண்டு, செயல்பட்டுவரும் நம் புத்தூர் ஸ்வாமிக்கு, பூர்ண ஆயுளையும், ஆரோக்கியத்தையும் அளிக்க, திவ்ய தம்பதிகளான ஸ்ரீரங்கநாதனையும், ஸ்ரீரங்க நாச்சியாரையும் பிரார்த்தித்து இக்கட்டுரையினை நிறைவு செய்கிறேன்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமதே பாலதந்வி மஹாகுரவே நம:
ஸ்ரீமத் வரவரமுநயே நம: ஸ்ரீமத் வாநாசல மஹாமுநயே நம:

# அத்திகிரி அருளாளர்

ஸ்ரீ உ வே இளையவில்லி ஸ்ரீநிவாஸ பூவராஹாசார்ய ஸ்வாமி, M A., (Retd Prof. of Sanskrit)
ஆழ்வார் திருநகரி.



எம்பெருமான் கோயில் கொண்டெழுந்தருளி இருக்கக் கூடிய நான்கு முக்கிய திவ்யதேஶங்களில் அத்திகிரி அருளாளனை வரதராஜன் நம் ஸம்ப்ரதாயத்திற்குச் செய்தருளின உபகாரங்கள் போல் மற்ற திவ்யதேசத்து எம்பெருமான்கள் செய்தருளவில்லை என்பது ஆன்றோர் கண்ட உண்மை. ப்ரமாணத்தை ஆறு வார்த்தைகள் அருளிச்செய்தும், ப்ரமாதாவான எம்பெருமானாரை விந்த்யமலைக் காட்டிலிருந்து வழி நடத்தி ரக்ஷித்தும், அந்த ஆசார்ய ரத்நத்தை ப்ரமேய பூதரான பெரிய பெருமாளுக்குக் கொடுத்து "தென்னரங்கன் செல்வமுற்றும் திருத்தும்படியாகச்"செய்து அவரை (அரங்கரை) ரக்ஷித்தும் போந்தவர் பேரருளாளப் பெருமாள்.

அவரை அத்திகிரி அருளாளர், [திருவத்திமலையில் (ஸ்ரீகாஞ்சியில்) நின்று பேரருளைப்பொழிபவர்] என்று கொண்டாடுகிறோம். தற்பொழுது ஶதாபிஷேக மஹோத்ஸவம் கண்டருளும் நம் ஸ்வாமியும் அத்திகிரி அருளாளரே. அ—அழகிய, திகிரி—சக்கரத்தைக் கையில் கொண்டு. [அதாவது—ஸ்ரீஸுதர்சன பத்திரிகையைக் கையில் கொண்டு] அருளாலே ஸ்ரீவைஷ்ணவ உலகத்தை வாழ்வித்தருள்பவர். இவ்விடத்தில் இராமாநுச நூற்றந்தாதிப் பாசுரம் "தேரார் மறையின் திறமென்று" என்ற பாசுரத்தை அநுஸந்திப்பது. அதாவது எம்பெருமான் மிகவும் ஶ்ரமப்பட்டு ஸம்ஸாரிகளைத் திருத்

தப் பார்த்தவிடத்து அவர்கள் திருந்தாது போனவாறே அந்த ஆஸுரப்ரக்ருதிகளைத் தன் கூராழி கொண்டு சிதைக்கிறான், ஆனால் எம்பெருமானார் அவ்வெழில் மறையில் சேராதவரைச் சிதைப்பது அப்போதொரு சிந்தை செய்தே.

அதே போன்று நம் ஸ்வாமியும் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்திரிகையின் மூலம் அத்திகிரி அருளாளராய் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கே மறந்தும் புறந்தொழாமையைக் கற்பித்தும் எம்பெருமானுடைய பரத்வத்தை—பல ஆயிரக்கணக்கான பக்கங்களில் வேத வேதாந்த இதிஹாஸ புராணாதிகளிலும், அருளிச்செயல்களிலும் உத்கோஷிக்கப்பட்டதை—மிகவினிய எளிய தமிழ்நடையிலே பாமரமக்களும் புரிந்து கொள்ளும்படி எழுதி அவர்களை விண்ணுளாரிலும் சீரியவர்களாக ஆக்கியபெருமை இந்த நூற்றாண்டில் கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீ உ வே காஞ்சீ மஹாவித்வான் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியையும், இவ்வத்திகிரி அருளாளரையுமே சாரும்.

மஹர்ஷிகளில் பராஶரரும் அவர் குமாரரான வ்யாஸரும் போலும், ஆசார்யர்களில் ஸ்ரீகூரத்தாழ்வானும், ஸ்ரீபராசர பட்டரும் போலும் இவருடைய தந்தையும், இவரும் நம் ஸம்ப்ரதாயத்துக்குச் செய்த தொண்டுகள் அளவிடற்பாலதன்று. குத்ருஷ்டிகளுடைய வாதங்களையெல்லாம் "தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழை" போல் கண்டித்து எழுதி உலகுக்கு வெளிச்சத்தை உண்டாக்கினதீரர். இவருடைய க்ரந்தங்களில் ஸ்ரீகீதா வ்யாக்யானம், கைவல்ய ஸித்தாஞ்ஜநம், ஸ்ரீதத்வ ஸர்வஸ்வம், பஞ்சமபக்ஷ சததூஷணி ஆகிய அரும் பெரும் நூல்கள் என்றும் அழியாத பெருமையை இவருக்கு அளித்துள்ளன என்பது பற்றி, சிறுமதியோனான அடியேன்

எழுதவேண்டியதில்லை. வாதம் செய்யும் முறையைக் கற்பித்துக் கொடுத்தவர் இந்த ஸ்வாமி ஒருவரே என்று சொன்னால் அது அத்யுக்தியல்ல, அதிசயோக்தியல்ல. ஸுதர்சனர் கேள்வி—பதில்கள் பாருள்ளளவும், கடல் நீருள்ளளவும் நிலை நின்று இவருக்கு நீங்காப்புகழை அளித்துவரும் என்பதில் ஸந்தேக லவலேசமுமில்லை.

ஆத்ம குணங்களில் ப்ரதாநம் சமமும், தமமும். அவ்விரண்டும் நம் ஸ்வாமியிடம் அடைக்கலம் அடைந்துள்ளன. "உபமாநம் அசேஷாநாம் ஸாதூநாம் யஸ்ஸதாऽபவத்", "ப்ரஹ்லாதோ ஜந்ம வைஷ்ணவ:" என்கிற ப்ரமாணங்களை நாம் விஸ்வஸிப்பது இந்த ஸ்வாமியின் ஆசார அநுஷ்டாநங்களைக் கொண்டே. ஸ்ரீவைஷ்ணவ நெறியில் இக்கொடிய கலியுகத்திலும் ஒருவன் சிறிதும் வழுவாமல் உறுதியுடன் அன்பு பூண்டு ஒழுகமுடியும் என்பதை எடுத்துக்காட்டிக் கொண்டிருப்பவர் நம்ஸ்வாமி.

எத்தனையோ மடாதிபதிகளும், ஆசார்ய புருஷர்களும் சேர்ந்து சாதிக்கமுடியாத அரும்பெரும் செயல்களையெல்லாம் தனியொரு வீரராய், சாதித்து வருவதை அறியுமுலகெல்லாம் எம்பெருமானாரைப்போலே இந்த சதாபிஷேகம் தொடங்கி [120 + 80] நூற்றிருபது ஸம்வத்ஸரங்கள் "வையம் மன்னி வீற்றிருந்து விண்ணும் ஆளவேணும் மண்ணூடே" என்று ஆண்டாளைப் புருஷகாரமாகக் கொண்டு ஸ்ரீரங்கமன்னார் திருவடித் தாமரைகளில் ப்ரார்த்தித்து நிற்கிறேன் அடியேன்.

**பல்லாண்டு! பல்லாண்டு! பல்லாண்டு!**

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதநந்தாய மஹாகுரவே நம: ஸ்ரீமத் வரவர முநயே நம:

# கையார் சக்கரம்

**திருமலை அனந்தாழ்வான் பிள்ளை**

**அக்காரக்கனி ஸ்ரீநிதி ஸ்வாமி**

ஸ்ரிய: பதியான ஸர்வேஸ்வரன் அருளாலே ஓர் ஒப்பற்ற விழாவினைக் கொண்டாடும்படியான பேற்றைப் பெற்றிருக்கிறோம். ஆம் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனரின் சதாபிஷேக வைபவம் ஸ்ரீவைஷ்ணவ உலகின் ஒப்பற்ற உத்ஸவம் ஆகும். 'புத்தூர் ஸ்வாமி' என்றும், 'ஸுதர்சனர்' என்றும் அன்போடும் மதிப்போடும் அழைக்கப்படுகிற ஸ்ரீ உ. வே புத்தூர் கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி ஸ்ரீவைஷ்ணவ மதத்திற்கு ஆற்றியிருக்கிற பணிகள் அளவிடவொண்ணாதவையாகும்.

இச்சமயத்திலே வெளியிடப்படவிருக்கும் மலரிலே இவ்வெளியவனுடைய கட்டுரையும் வெளியிடப்பெறுவது அடியேனது பூர்வஜந்ம ஸுக்ருதத்தின் பயனாகும். ஸ்வாமியினுடைய சாதனைகளை விளக்கிட வயதிலும், ஞானத்திலும் அடியேன் ஸக்தனல்லன். ஆயினும் பெரியவர்கள் நியமனமடியாகச் சிலவற்றை இயம்புகிறேன்.

இந்த க்ரூரமான கலியுகத்திலே நமது தரிசனம் தன் தர்ஸநத்தை (கண்களை) இழந்து தவிக்கும் போதெல்லாம் கண் கொடுத்த பெரியார்களில் ஒப்பற்றவர் நமது ஸ்வாமி. ஸ்வாமி எம்பெருமானாரைப் பற்றி ஸ்வாமி வேதாந்தாசார்யர் தமது "யதிராஜ ஸப்ததி"யிலே தெரிவிக்கிறபொழுது பிற மதங்களாகிற சேற்றிலே அழுந்திக் கிடக்கிற எம்பெருமானைக் காக்க வேண்டிக் கை கொடுக்கிறவர் ஸ்வாமி எம்பெருமானார்—என்று தெரிவிக்கிறார்.

அவ்வழகை நாம் ப்ரத்யக்ஷமாக அநுபவித்தது நம் ஸ்வாமி பக்கலில் தான். குயுக்தி வாதங்களாலும், கொடூரப் பேச்சுக்களாலும் மற்றையோர் நமது ஸம்ப்ரதாயத்தைப் பழிக்கும் போதெல்லாம் அஞ்சாது குரல் கொடுத்து ஒடுக்கியவர் நமது ஸ்வாமி.

வழக்கறிஞரான நமது ஸ்வாமி ஸ்ரீவைஷ்ணவ சமயத்தின் "வழக்கு" அறிந்தவராகையால் அவருக்கு மேற்சொன்ன

பெருமை உண்டாயிற்று எனலாம். ப்ரமாணங்களை நிலை நாட்டி வெற்றிபெறும் நியாயமும், வாதிடத்தகுந்த தைரியமும் ஒருங்கே பெற்றிருப்பது ஆஶ்சர்யமான விஷயம்.

எம்பெருமானுடைய திருக்கையை அலங்கரிக்கிற திருவாழி கை கழலாத தன்மையை உடையது. "கை கழலா நேமியான்" என்று பெயர் பெற்றிருக்கிறான் அவன். "வெறுங் கையிலே ஆலத்தி வழிக்கவேண்டும்படியான திருக்கையிலே திருவாழியை தரித்தாளுயிற்று" என்று ஈடு வ்யாக்யானம். [கையார் சக்கரத்து—ப்ரவேஶம்] அத்திருவாழிதான் அவனை அனுபவிப்பார்க்கு ஆபரணமுமாய், வினைத்தலையில் ஆயுதமுமாயிறே இருப்பது. அதேபோல் ஸ்வாமியின் வாக்கும், எழுத்தும் நமக்கு நன்மை பயக்கும்; மற்றையோர்க்கு பயத்தை உண்டாக்கும்.

ஈஶ்வரனுக்குக் கையிலாழி, நமது ஸ்வாமிக்குக் கையே ஆழி. எம்பெருமானுடைய ஆழியின் பெருமையை நாரதாதிகளும் சொல்லத்தக்கவரல்லர் என்பது ஸுதர்சந ஶதகத்தில் ப்ரஸித்தம். "வாணீ பௌராணிகீயம்...துஸ்தராமஸ்த்ரராஜ:" காண்க. எப்படி பெரிய பிராட்டியார் ஸர்வாவஸ்தைகளிலும் ஈஶ்வரனோடுகூடத் திருவவதாரம் செய்கிறாளோ அப்படியே ஸ்ரீஸுதர்ஶநாழ்வானும் எல்லா அவதாரங்களிலும் வழுவிலா அடிமை செய்யத் துணை வருவது உண்டு. இது அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையிலும், "ஶக்திர் யஸ்யேஷு தம்ஷ்ட்ரா நக பரஶு முக வ்யாபிநீ தத் விபூத்யாம்" என்ற ஸ்ரீஸுதர்ஶந ஶதக ஶ்லோகத்திலும், "சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய சக்கரக்கையன்" என்ற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியிலும் விவக்ஷிதம்.

ஆக விபவத்தில் குறையில்லா அடிமை செய்தாற்போலே அர்ச்சையிலும் செய்ய விருப்பப்பட்டிருக்க வேண்டும். அதனாலேயே "பின்னானார் வணங்கும் சோதியாய்" அவன் உகந்து கோயில் கொண்டிருக்கும் அர்ச்சை நிலையைக் கொண்டாடுகிற இக்காலத்திலே ஸ்ரீஸுதர்சனன் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனராய்த் திருவவதரித்தான் போலும். எம்பெருமானுடைய ஸுதர்சனத்திற்கு நம்மை ரக்ஷிக்கிற பெருமை மட்டுமே உண்டு. ஆனால் நம் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனருக்கோ நம்மை ரக்ஷிக்கிற பெரு

மானையும் (தமது க்ரந்த ப்ரகாஶந கைங்கர்யங்களினாலே) ரக்ஷிக்கிற பெருமையும் உண்டு. அதடியாக நமது 'ஸு'தர்சனத்தை ரக்ஷிக்கிற பெருமையும் உண்டு. அதனால் சக்கரத்தாழ்வானாகிற ஸுதர்சனரிலும் சீரியர் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனர்.

ஸ்ரீஸுதர்சனாழ்வான் இருக்கிற இடத்தில் அந்தகாரம் நில்லாது. அதுபோல் ஸ்வாமியும் தமது க்ரந்த ப்ரகாஶந கார்யங்களால் நமது ஞானத்தை மறைத்திருக்கிற அந்தகாரத்தைப் போக்குகிறவர். அஜ்ஞாநத்தை விலக்குபவர் என்றபடி. "அந்தம் தம இவாஜ்ஞாநம்" என்னப்படுகிறதிறே.

ஸம்ப்ரதாயத்திலே "பிரான்" என்றால் உபகாரகன் என்று பொருள். திருவவதாரம் முதலாக உபதேசம் ஈறாக எம்பெருமான் பண்ணின க்ருபையை அநுஸந்தித்து அவன் பிரான் எனப் புகழப்பட்டான். "ஆதிபிரான்" என்றனர் ஆழ்வார்கள்.

நமது ஸ்வாமியின் இயற்பெயர் கிருஷ்ணஸ்வாமி என்பது. ஸ்வாமி என்றால்—யஜமானர், தலைவர் என்றபடி. பிரான் என்ற பதத்திற்கு ஸ்வாமி—தலைவர் என்ற பொருளும் பொருந்தும். ஸ்வாமி திருமழிசையாழ்வாரை "திருமழிசைப்பிரான்" என்பதும் திருக்குடந்தை ஆராவமுதனை "ஆராவமுதாழ்வார்" என்பதும் குருபரம்பரைகளில் ப்ரஸித்தம். ஆக, ஸ்வாமியும் உபகாரகரே. ஸ்வாமியினுடைய திருநாமத்தால் லோகோபகாரகனான கிருஷ்ணனுக்கும் உபகாரகர் நம் ஸ்வாமி என்பது தேறுகிறது.

அவனருளிச்செய்த கீதையின் செம்மைப்பொருள் தெரிய வ்யாக்யானம் பணித்தருளின எம்பெருமானாருக்கும் உபகாரகர். கீதா வ்யாக்யானத்தை செந்தமிழில், கீதார்த்த ஸங்க்ரஹத்தோடும், பகவத் கீதை வெண்பாவோடும், கீதார்த்த ஸங்கிரகத்தோடும் சேர்த்து, அவற்றைத் தழுவி எழுதியருளின "கீதார்த்த விவரணம்" ஸ்வாமியினுடைய சாதனைகளுக்கு இட்ட மணி விளக்காகும்.

இதனால் எம்பெருமானுக்கும், எம்பெருமானாருக்கும் இவர் உபகாரகராவார் என்பதை முன்னமே அறிந்திருந்த நம் ஸ்வாமியின் தந்தையார் இவருக்கு க்ருஷ்ணஸ்வாமி என்று பெயரிட்டது சாலப்பொருந்தும்.

க்ருஷ்ணஸ்வாமி எனும்பொழுது க்ருஷ்ணனுக்கு ஸ்வாமி என்கிற பொருளும் கிடைக்கும். கிருஷ்ணனுக்கு ஸ்வாமியாகிற பெருமை திருநாராயணபுரம் ஸம்பத்குமாரனுக்கு உண்டு. பலராம க்ருஷ்ணர்கள் மேல்கோட்டையில் அவனை ப்ரதிஷ்டை பண்ணினதாகப் புராண சரித்ரம் மூலம் நாம் அறிகிறோம்.

அந்த எம்பெருமான் செல்வப்பிள்ளை எனப்பெயர் பெற்றிருக்கிறான். யாருக்கு செல்வப்பிள்ளை எனின்—யதிராஜராம் நம்மிராமானுசனுக்கு செல்வப்பிள்ளை. அதேபோல் நம் ஸ்வாமியும் எம்பெருமானாருடைய செல்வப்பிள்ளையே. ஆம். ராமானுசனது கைங்கர்யச் செல்வத்தை உயர்த்த வந்த பிள்ளை.

யதீந்த்ரமததீபிகை, சாரீரககாரிகாவளி, ப்ரபந்நாம்ருதம், கத்ய வ்யாக்யானங்கள் போன்ற க்ரந்த ப்ரகாஶந கார்யங்கள் எம்பெருமானார் திருவுள்ளத்தைக் குளிர்விக்கப் பிறந்தவை. தந்தை தன் மகனை, தன்னை குளிர்விக்கப் பிறந்தவனாகவே கருதுவன். ஆக, கிருஷ்ணஸ்வாமி என்கிற திருநாமத்தால் ஸம்பத் குமாரனோடு ஸாம்யத்தைப்பெற்று அதனடியாக எம்பெருமானாருக்கும் ப்ரியராக அமைந்திருக்கிறார் நம் ஸ்வாமி. ஸ்வாமியின் பெருமைகளை விவரிக்க வார்த்தைகளும், பக்கங்களும் போதா. "நிறை ஞானத்தொரு மூர்த்தி" என்று இவ்வளவே தெரிவித்து தெண்டன் ஸமர்ப்பித்து நிற்கிறேன்.

இதேபோல் நாமனைவரும் இணைந்து ஶதாப்தி மஹோத்ஸவத்தையும் ஸ்வாமியினுடைய தலைமையிலே கொண்டாடி ஸத்தை பெறவும், அதற்குத்தக்க ஶக்தியை எம்பெருமானும் பிராட்டியும் அருளவேணுமாய் "துயரறு சுடரடி"களில் பிரார்த்தித்து அமைகிறேன்.

அடியேனது புன்சொற்களும் மலரில் இடம்பெற வழி செய்தருளின ஸ்வாமிக்கும், கமிட்டியாருக்கும் காலமுள்ளவரை நன்றி நவிலக் கடமைப்பட்டுள்ளேன்.

**நித்ய ஶ்ரீர் நித்யமங்களம்!**

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# மூட நம்பிக்கைகளைத் தகர்த்தவர்

Dr ஸ்ரீ A. திருவேங்கடத்தான், M.A., Ph.D.,
அரும்பாக்கம், சென்னை-600 106.



ஸ்ரீ உ வே ஸுதர்சன் பத்ராதிப ஸ்வாமி சதாபிஷேகம் கண்டருளவிருப்பது ஒரு விதத்தில் ஸந்தோஷகரமானாலும் ஸத்ஸம்ப்ரதாய ரக்ஷகரான ஸ்ரீஸுதர்சனர் இந்த க்ஷணம் தொடங்கி பிரதிஸம்வத்ஸரம் ஒரு பிராயம் குறைந்தவராக எழுந்தருளியிருக்கத்தக்கவர். "வயோ஽ஸ்யா ஹ்யதிவர்த்ததே" என்ற ரீதியில் மனம் க்லேசமடைகிறது.

காஞ்சீ ப்ர. அண்ணாஸ்வாமி சில வருஷங்களாக நம்மிடையே இல்லாத குறையை நீக்கியவர் நம் ஸ்வாமி. 'ஸுதர்சனர்' என்ற அடைமொழிக்கேற்ப ஜ்ஞான ஜ்வாலையினால் துர்தர்சனங்கள் நடுங்கும்படி செய்தவர். கீர்த்தி மூர்த்தியான சதாபிஷேகம் ஸ்வாமி ஸுதர்சனரது ஜ்ஞானத்தின் ஆழத்தையும் பரப்பையும் கண்டு விஸ்மயப்பட்டுப் பல தடவை அடியேனிடம் பேசியுள்ளார். "ஆபாதாலநிமக்நபீவரதநு: ஜாநாதி மந்தாசல:" என்று முராரி மார்த்தட்டிக் கொள்ளும் க்ரமம் நம் ஸ்வாமிக்கும் பொருந்தும்.

காஞ்சீ ஸ்வாமி ஸம்ப்ரதாய ஸம்பந்தமான வாத—ப்ரதிவாதங்களை "ஸ்ரீராமாநுஜன்" மூலமாகவும், மற்றும் சிறு புத்தகங்கள் வடிவிலும் ஸம்ப்ரதாய க்ரந்தங்களைத் தனியே நூல்களாகவும் பதிப்பித்து ஸம்ப்ரதாயத்துக்கு அரணாகத் திகழ்ந்தார். நம் ஸ்வாமி பரபக்ஷ ப்ரதிக்ஷேப—ஸ்வபக்ஷ ப்ரதி பாத

ணங்களை மாதப் பத்திரிகையான 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன'த்தில் வெளியிட்டு, ததநந்தரம் அவைகளில் பகுதி பகுதியாக வெளிவந்த மூலக்ரந்தங்களையும் அவைகளின் விளக்கவுரைகளையும் தொகுத்து வெளியிட்டு ப்ரமாண ரக்ஷணத்தைச் செய்து வருகிறார். இது இவரது சைலி. இதனால் பத்திரிகையைத் தவறாமல் பெற்றவர்கள் தனியாக க்ரந்தங்கள் சேகரிக்க வேண்டியதில்லை.

தானறி தெய்வங்களும் அவைகளின் பூசனைகளும், எல்லாவற்றையும் குழப்பி ஓர் அத்வைதப் பிரசாரம் பெருகி வருகிற இந்நாட்டில் உண்மையான உயர்ந்த வேதாந்தப் பொருள்கள் பாமரமக்களின் காதுகளில் விழாதது ஆச்சர்யமல்ல. ஆஸ்திகர்கள் என்று பறை சாற்றிக் கொள்கிறவர்கள் மத்தியில்தான் மூடநம்பிக்கைகள் அதிகமாயுள்ளன. இவைகளையெல்லாம் எம்பெருமான் ஸங்கல்பித்தாலல்லது நீக்கப் போகாது. ஆனாலும் ஸதாசார்யர்களின் கர்த்தவ்யம் ஸத் விஷயங்களை ஆணித்தரமாக நிலைநாட்டுவதும் க்ஷுத்ர விஷயங்கள் பரவாமல் தடுப்பதும்தான். அப்படிப்பட்ட பெரும் பிரயத்னத்தில் ஈடுபட்டுள்ள ஸ்ரீஸுதர்சனஸ்வாமி, **"சரீரமாத்₃யம் க₂லு த₄ர்மஸாத₄ந"** மாகையாலே திருமேனியைப் பேணிக்கொண்டு நம்மிடையே பலகாலம் வாழ்ந்து இன்னுமொரு சதாபிஷேகம் கண்டருள அரங்கநகரப்பன், ஆதிநாதர், ஆழ்வார் அருள்பாலிக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

இதுவே ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரது பிரார்த்தனையாக இருக்கும் என்பதில் ஸந்தேஹமில்லை.

சதாபிஷேக வைபவத்திற்கு அடியேனுடைய கிஞ்சித்காரத்தை ஏற்றுக்கொள்ளும்படி பிரார்த்தித்து நிற்கிறேன்.

ஸ்ரீ:

ஸ்ரீமத்யை கோதாயை நம:

# வைணவச் சுடராழி—ஸுதர்சனர் ஸ்வாமி

**வேதப்பிரான் பட்டர்**

**ஸ்ரீ உ. வே. கோவிந்தராஜ ஐயங்கார் ஸ்வாமி**

**ஆண்டாள் ஸந்நிதித் தெரு, ஸ்ரீவில்லிபுத்தூர் - 626 125.**



பெரியாழ்வார் தமது திருமொழியில் 'திசை விளக்காய் நிற்கின்ற திருவரங்கமே' என்று ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தைப் பாடியிருந்தாலும், அந்தப் பெருமை ஸ்வாமிக்கே பொருந்தும். சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் பத்திரிகை மூலமாகவும், ஆழ்வார் ஆசார்யாள் க்ரந்தங்களைப் பதிப்பித்தும், எளியமுறையில் வானொலி, தொலைக்காட்சி மூலமாக உரையாற்றியும், உண்மைக்கு மாறு நேரும் போதெல்லாம் துணிவுடன் வேதாந்தக் கருத்துக்களை விரித்துரைத்து, பொய்ம்மையைக் கண்டித்தும் வைணவத்தை நிலைநாட்டியும் ஸ்வாமி ஆற்றிவரும் அரும்பணியை நன்குணரும் யாவரும் அவரை 'அபிநவ ராமாநுஜர்' என்றே அறுதியிடுவர். அம்முறையில் அடியேனும் பொலிக! பொலிக! என்று பல்லாண்டு பாடுகின்றேன்.

கோதாரங்கநாதர் திருவருளால் 'ஸ்வாமியே இன்னுமொரு நூற்றாண்டிரும்' என்று மங்களாசாஸனம் செய்கிறேன்.

**வேதப்பிரான் பட்டர் திருவடிகளே சரணம்.**

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# குணம் திகழ் கொண்டல்

[கல்விக்கடல் ஸ்ரீ தி. வே. கோபாலய்யர் திருவையாறு]

❋ ❋ ❋

1940-ல் திருவையாற்று அரசர் கல்லூரியில் மாணாக்கனாகச் சேர்ந்து, 1945-ல் வித்வான் தேர்வில் தேர்ச்சிபெற்று வித்துவான் என்ற பட்டத்துடன் வெளியேறினேன். தேர்வுக்கு வரையறுக்கப்பட்ட இலக்கண இலக்கியங்களைப் பயிற்றுவித்த ஆசிரியர்கள் சைவத்திருமுறை, நாலாயிர திவ்யப்ரபந்தம் இவற்றிலிருந்து மேற்கோள்கள் கூறி எதனையும் விளக்கியதாக எனக்கு நினைவு ஏதும் இல்லை. மெய்கண்ட சிவம், ஆளவந்தார் முதலிய பெயர்களையுடைய மாணாக்கர்கள் அக்கல்லூரியில் பயின்று வந்தனர். ஆனால் அப்பெயர்களுக்கு உரிய சான்றோர்கள் யாவர் என்பது கூட அறிந்துகொள்ள என் கல்லூரி வாழ்க்கையில் எனக்கு வாய்ப்பில்லை.

1946-ல் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் ஆசிரியராக அமர்த்தப்பட்ட பின்னர் மாணாக்கர்களுக்குப் பாடம் சொல்லப் பாடம் தயாரிப்பதிலேயே பெரும் பொழுதினைச் செலவழிக்க வேண்டியதாயிற்று. இடையிடையே பகவத் விஷயம், பெரிய திருமொழி வ்யாக்யானம் இவற்றைப் புரட்டிப் பார்த்து ஏதோ ஓரளவு பொருள் அறிந்து மகிழ்ந்தேன். இவற்றை வடமொழியறிவு இல்லாதவரும் சுவைக்கும் வண்ணம் தெளிவாகத் தமிழில் வரைந்து கொடுக்கும் சான்றோர்கள் கிட்டமாட்டார்களா என்று ஏங்கினேன். அக்காலத்தில் பெரியவர்களை அணுகுதலும் அரிது. அப்படி அணுகினாலும் அவர்களிடமிருந்து சமயத் தொடர்பான நூற்செய்திகளை அறிதல் அரிதினும் அரிது. சமயத் தொடர்பான நூல்களின் பதிப்புகளும் அரியன. அவற்றை எங்கிருந்து வாங்கலாம் என்று அறிந்தவர்களும் சிலரே.

இத்தகைய சூழ்நிலையில் புத்தூரில் வாழ்ந்த ஸ்ரீநிவாஸய்யங்கார் என்ற வழக்கறிஞர் அருளிச்செயல்களின் சில பகுதிகளுக்கு உரிய பழைய வ்யாக்யானங்களை அருமையாகப் பதிப்பித்து வெளியிட்டார்.

அருளிச்செயல்கள் முதலியவற்றின் அருமை [illegible] மக்களும் அறியவேண்டும் என்ற உயரிய எண்ணத்தில் '[illegible]' என்ற மாத இதழையும் தொடங்கினார். [illegible] மேற்கொண்ட அக்கறைப்பணியில் [illegible] இருவரும் வழக்கறிஞர் [illegible] ஈட்டும் தகுதி [illegible] ஸ்வாமியைக் [illegible] தொண்டு [illegible] பலவும் [illegible] நல்வினையாலே பெரும் பொருள் திரட்டக் கூடிய வழக்கறிஞர் தொழிலை விடுத்து ஸுதர்சனப் பத்திரிகையைத் தொடர்ந்து நடத்துவதிலும் வைணவ நூல்களைப் பிழையறப் பதிப்பித்து நியாயமான விலைக்கு விற்பதிலுமே முழு நேரத்தையும் செலவிடும் நல்லுள்ளம் உடையவராயினர்.

பழைய உரைகள் யாவும் வடசொற்களும் அக்கால வழக்காற்றுச் சொற்களும் கலந்து வரையப்பட்டவை. அவற்றை எம்போன்ற தமிழ்ப் புலவர்கள் அறிவது அரிய செயலாகும். இதனை மனம் கொண்டு ஸுதர்சன ஆசிரியர் ஸ்ரீ உ. வே. எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் அருளிச்செயலிலுள்ள 24 பிரபந்தங்களில் முதலாயிரத்தில் உள்ள நாச்சியார் திருமொழி தொடங்கி, கண்ணிநுண் சிறுத்தாம்பு ஈருகிய பிரபந்தங்களுக்கும், மூன்றும் ஆயிரத்திலுள்ள பத்துப் பிரபந்தங்களுள் திருவிருத்தம் நீங்கலான ஏனையவற்றிற்கும், இரண்டாம் ஆயிரத்தி லுள்ள திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் என்பனவற்றிற் கும் பழைய வ்யாக்யானங்களோடு அவற்றை எளிதில் உணர்வதற்கு உதவும் வகையில் அவற்றின் விவரணங்களாக இனிய தமிழ் உரையை யும் வழங்கியுள்ளார். இப்பொழுது முதலாயிரத்தில் உள்ள பெருமாள் திருமொழி பழைய உரைக்கு விவரணம் எழுதத் தொடங்கியுள்ளார். பெரிய திருமொழியின் பெரியவாச்சான்பிள்ளை உரையின் விவரணம் மூன்று பத்துக்கு நிறையும் நிலையில் உள்ளது. அடியேனைப் போன்ற வர்களுக்கு இந்த விவரணம் ஸுதர்சனர் காலத்தால் செய்துவரும்

இணைக்கப்பட்டு உள்ளது. அருளிச்செயல்களில் ஆழங்காற்பட்டு ஆராய்ச்சி முறையாகக் கற்பதற்கு, பழைய உரையோடு விவரணம் எழுதி வெளியிடும் ஸுதர்சனம் போல் தமிழ் ஒன்றே அறிந்தவர்களுக்குக் கிட்டும் வாய்ப்பு அரிதாகும். வடமொழிச் சொற்களை உரிய ஒலியோடு உச்சரிப்பதற்கு ஏற்ப க ச ட த ப என்ற ஐந்து வருக்கங்களிலும் உள்ள இரண்டாம் மூன்றாம் நான்காம் ஒலிகளை அடியில் எண்ணிட்டு அறிவுறுத்தும் சிறப்பு இப்பத்திரிகையின் பதிப்பிலேயே உள்ளது.

ஸம்ப்ரதாயத்தின் ஆராய்ச்சியாளர்களுக்கு உதவும் அடிப்படை நூல்களாகிய குருபரம்பரா ப்ரபாவம் ஆறாயிரப்படி, ப்ரபந்நாம்ருத வடமொழி ஸ்லோகங்களுக்கு உரிய தமிழ் உரை, வார்த்தாமாலையின் விவரணத்துடன் கூடிய பதிப்பு, இராமாயண பாரதாதி தனிச்லோக விளக்கம், ரஹஸ்யத்ரயத்தின் பழைய உரைக்கு விவரணம் என்பன ப்ரமாணத்திரட்டுடன் வெளியிட்டுள்ள பேருபகாரம்; எம்போன்றவர்களுக்குச் சேம வைப்பாக உதவுகிறது.

ஸ்ரீகீதை முழுமைக்கும் எம்பெருமானார் பாஷ்யத்தை அடியொற்றி மிக விரிவாக 3000 பக்க அளவில் ஸுதர்சனர் வரைந்துள்ள விளக்கம் போற்றிப் பாதுகாக்க வேண்டிய அருநிதியாகும். ஸுதர்சனர் இயற்றியுள்ள திருமால் தொடர்பான பரிபாடல்களின் உரையும், கம்பனின் சமயம் என்னும் நூலும் அவருக்குத் தமிழிலும் போதிய புலமை உள்ள செய்தியைத் தெரிவிப்பதனால் தமிழ் ஒன்றே வல்ல சான்றோர்க்கும் பிரமாண நூல்களாகக் கொள்ளும் தகுதியுடையனவாகவும் உள்ளன. அருளிச்செயல்களின் பழைய உரைகளுக்கு இவர் விவரணம் எழுதுமிடத்தில் பொருத்தமான சங்கப் பாடல் அடிகளை மேற்கோளாகக் காட்டுவதனையும் கண்டு மகிழலாம். இவர் இயற்றிய 'சங்கரரும் வைணவமும்' போன்ற நூல்கள் ஓரளவு வடமொழி அறிவும் உடைய நடுநிலையாளர்களுக்குப் பெருவிருந்தாகும்.

ஸுதர்சனத்தில் விவரணம் வெளியிடப்பட்ட நூல்களே பெரும்பாலும் தனி நூல்களாக வெளிவந்துள்ளன. மற்ற இதழ்கள் தொடர் பக்கங்கள் இடப்பட்டு அப்பக்கங்கள் அந்த இதழோடு நிறைவுறும். ஸுதர்சனத்தில் ஒவ்வோரிதழிலும் பல நூல்கள் பகுதிபகுதியாக வெளிவரும். ஒவ்வோரிதழிலும் அவ்வந்நூற்பகுதிகள் அவ்வந்நூல்

களின் பக்கங்களாகத் தனித்தனியாகத் தொடர்ந்து எண்ணிடப்படும். பகுதிபகுதியாக ஸுதர்சனத்தில் வெளியிடப்படும் நூல்கள் நிறைவடைந்தவுடன் ஸுதர்சன இதழ்களிலிருந்து அவ்வந்நூல்களின் பகுதிகளைப் பிரித்தெடுத்து இணைத்துத் தொடர்ந்து [illegible] தனி நூல்களாக இணைத்துக் கொள்ளலாம். இச்சிறப்பு இந்த இதழுக்கே உரியதாகும்.

ஸுதர்சனத்தில் வெளியார் விளம்பரங்கள் [illegible]. புதியனவாக வெளிவரும் வைணவ நூல்கள் அவற்றின் சிறப்பு, சிறப்பின்மைகளோடு விமர்சிக்கப்படும். வைணவச் சான்றோர்கள் தொடர்பான செய்திகளும், திவ்யதேசங்களில் நிகழும் திருவிழாக்கள், உபந்யாஸங்கள் போன்ற செய்திகளும் தவறாது இதழ் தோறும் வெளியிடப்படும். வைணவ முன்னேற்றத்துக்கு ஆக்கபூர்வமாகச் செய்யப்பட்ட, செய்யப்பட வேண்டிய செய்திகளும், வைணவ சமயத்திற்கும் திவ்யதேசங்களுக்கும் நன்மக்கள் அல்லாதவரால் நிகழ்த்தப்பட்ட, நிகழ்த்தப்படும் தீங்குகளும் அவற்றை எதிர்த்து வெற்றிபெற உடனடியாகச் செய்யவேண்டிய கடமைகளுமே பெரும்பாலும் ஒவ்வோரிதழிலும் ஆசிரியர் உரையாக வெளிவரும். பொது அரசியல் செய்திகள் இவ்விதழில் இடம்பெறமாட்டா.

ஒவ்வோரிதழிலும் ஸுதர்சனர் பதில் என்ற பகுதி இடம்பெறும். இப்பகுதியில் வினவப்படும் வினாக்களில் முக்கால் பகுதி அரைத்த மாவை அரைக்கும் செயலாகத் தம் பெயரும் ஸுதர்சன இதழில் இடம்பெறவேண்டும் என்ற கருத்துடன் அமைந்திருக்கும். அவ்வினாக்களுக்கு உரிய விடை முன்னர்ப் பல இதழ்களிலும் பல்வேறு வகைகளில் விளக்கப்பட்டிருந்தாலும், வாசகர்களுக்கு வைணவத்தின் தத்த்வங்களை ஒரு முறைக்குப் பன்முறை கூறுதல் கூறியது கூறல் என்னும் குற்றமாகாது என்ற கருத்தால் ஸுதர்சனர் பொறுமையோடு முன் கூறியவற்றையே மீண்டும் மீண்டும் எடுத்துரைக்கும் செயல் அவர் மாமனிதர் என்பதனை நிலைநாட்டும்.

தமிழோடு வடமொழியிலும் சாத்திர ஞானத்திலும் தொடர்புடையவரே முழுமையாகத் தெளிவாக அறியும் வகையில் வெளி வருவது 'விஷ்ணுசித்த விஜயம்' என்னும் மாபெரு நூலாகும். இது நான்கு அத்தியாயங்களையும் அத்தியாயந்தோறும் நான்கு பாதங்களையும் உடையது. விஷ்ணு பரத்துவத்தை விளக்கும் இந்நூலின் முதல் அத்தியாயத்தில் வேத வேதாந்த நிர்ணயம் நிறுவப்பட அது நூலாக

வெளிவந்துள்ளது. இரண்டாம் அத்யாயத்தின் 'ஸ்ம்ருதி நிர்ணயம்' அச்சாக வெளிவந்துள்ளது. 'ஸ்ரீராமாயண நிர்ணயம்' முக்கால் பகுதி நிறைவுற்ற நிலையிலே உள்ளது. [illegible] எஞ்சிய பகுதியைப் பற்றி ஸுதர்சனம் 678-679-ல் [illegible] பரத்வ நிர்ணயம் [illegible] காணலாம்.

சான்றோர் வழங்கிய சொற்றொடர்களுக்குத் தவறாகப் பொருள் செய்துகொண்டு, மாயாவாதிகள் எதிர்வாதங்களுக்கு மாறு விளக்கும் விதண்டாவாதிகளின் கட்சிகளுக்கு ஸுதர்சனர் வழங்கும் மறுப்புக் கட்டுரைகள் சிறந்து வல்ல சான்றோர்களுக்கு வாய்த்த மாநிதியாகும். ஸுதர்சனர் தொடக்கத்தில் தம் கருத்துக்களுக்கு அரணாகும் சான்றோர் உரைகளைத் தொகுத்துக் கொள்வார். மற்றவர் தம் கூற்றுக்கு அரணாகக் கொள்ளும் செய்திகளையும் தொகுத்துக் கொள்வார். அவர்கள் முன்னவர் சொற்றொடர்களுக்குத் தவறாகப் பொருள் செய்துள்ளமையை அம்முன்னவர்களின் பிற சொற்றொடர்களைக் கொண்டே நிறுவுவார். பின் தம் கருத்துக்களைப் பல சான்றுகளைக் காட்டி நிறுவுவார். விவாதிக்கவேண்டிய செய்திகளை நிரல்பட அமைத்து, பிறன் கோள் மறுத்துத் தம் கோள் நிறுவுவதற்கு இவர் பயின்ற சட்டக்கல்வி பெரிதும் உதவுகின்றது. இறுதியில் இவர் சில வினாக்களை அமைத்து அவற்றிற்கு மற்றவர் விடைகூற இயலுமா என்று வினவுவார். இன்று வரை இவர் வினவிய வினாக்கள் விடை பெறாமலேயே உள்ளன. வடமொழியிலும், சாஸ்த்ர ஞானத்திலும் வல்லவர்களே இவர் கூறும் மறுப்புரைகளை முழுமையாகச் சுவைக்க முடியும். இவருடைய மறுப்புரைகளில் உடன்படல், மறுத்தல், பிறர் தம் மதம் மேற்கொண்டு களைதல், தான் நாட்டித்தவறாது நிறுத்தல், இருவர் மாறுகோள் ஒருதலை துணிவு, பிறர் நூல் குற்றம் காட்டல், பிறிதொரு படாகன் தன் மதம் கொளல் என்ற எழுவகை மதங்களும் ஏற்ற பெற்றி கையாளப்படும்.

ஸுதர்சனர் பதிலில் 'பிறர் நூல் குற்றம் காட்டல், பிறிதொரு படாகன் தன் மதம் கொளல்' என்பனவே மிகுதியும் காணப்படும். ஸுதர்சனருடைய பெருமைகள் பெருமாள் இராமாநுசர் இயற்றிய 'முன்னிலைப் பரவல்' என்ற ஆசிரியப்பாவில் (ஸுதர்சனம் 678—679-ல்) நிரல்படக் கூறப்பட்டுள்ளன. ஸுதர்சனருக்குத் தொண்டு செய்ய அவர் தேவியாரும் பல்லாண்டு நோய்நொடி நோன் தொடையுடன் வாழ அரங்க நாச்சியாருடனுறை அரங்கப் பெருமான் அருளைப் பரவுகிறேன்.

ஸ்ரீ:

# மெய்ம்மதிக் கடல்

[திருமலை அனந்தாண்பிள்ளை, வானமாமலை வித்வான்
N. S. கிருஷ்ணய்யங்கார் ஸ்வாமி]



"கன்றெறிந்த தோளான் கனைகழலே காண்பதற்கு
நன்கறிந்த நாவலஞ்சூழ் நாடு"

என்கிறபடி புண்ணிய பூமியான பாரத தேசத்தில் கிடைத்தற்கரிய மானிடப்பிறவியை அடைந்திருக்கும் நமக்குச் சான்றோர்கள் பல அரிய பொருள்களை அருளியுள்ளார்கள். ஒரு ஞானி எம்பெருமானிடத்தில் எம்பெருமானை அடையத் தடையாயிருக்கும் இந்த சரீரத்தைப் போக்கித்தரப் பிரார்த்திக்கிறான். ஆனால் ஆராயுமிடத்தில் "குணம்போலே தோஷ நிவ்ருத்தி" என்று பகவான் ஞானியை விரும்புவதும், ஞானி பகவானை விரும்புவதும் ஆகிய இத்தகைய பரிமாற்றம் இருவருக்கும் உண்டு. எம்பெருமானும் ஜீவனும் தேஹாத்மாபிமானிகள். "பொய்கலவாது என் மெய் கலந்தானே" என்று நம்மாழ்வார் அருளியபடி, எம்பெருமானும் ஆழ்வாரையிட்டு அவருடைய தேஹத்தை ஆசைப்படுகிறான். அவன் விரும்பியுறையும் இந்த உடலைக் கழிக்கவேண்டும என்பது, எம்பெருமானுடைய திருவுள்ளத்துக்குச் சேராது; ஒரு வித்வானுடைய உள்ளத்தின் வாஸத்தை ஆசைப்பட்டு எம்பெருமான் பல திவ்ய தேசங்களில் எழுந்தருளியுள்ளான் என்பது ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தம்.

"நாகத்தணைக் குடந்தை வெஃகா திருவெவ்வுள்
நாகத்தணை யரங்கம் பேர் அன்பில் நாகத்
தணைப்பாற் கடல் கிடக்கும் ஆதி நெடுமால்
அணைப்பார் கருத்தனாவான்" என்ற திருமழிசைப்பிரானின்

பாசுரத்தால் இதை அறியலாம்.

"மலைமேல்தான் நின்று என் மனத்துளிருந்தானை நிலை
பேர்க்கலாகாமை நிச்சித் திருந்தேனே" என்றும்,

"திருப்பேர் நகரான் திருமாலிருஞ்சோலைப்
பொருப்பேயுறைகின்ற பிரான் இன்று வந்து
இருப்பேன் என்று என் நெஞ்சு நிறையப் புகுந்தான்"

"திருமாலிருஞ்சோலைமலை என்றேனென்ன,
திருமால் வந்து என்நெஞ்சு நிறையப்புகுந்தான்" என்றும்

நம்மாழ்வாரும்,

"டனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடிவந்து என் மனக் கடலில் வாழவல்ல மாயமணாள நம்பீ!"

என்று பெரியாழ்வாரும் அருளியதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இப்பாடலில் 'பழகவிட்டு', 'ஓடிவந்து' 'மனக்கடலில் வாழ' என்று அருளிய சொற்களை நாம் சிந்திக்கும்போது, திவ்ய தேசங்களைக் காட்டிலும் எம்பெருமான், ஆழ்வார் போன்ற ஜ்ஞானிகளுடைய திருமேனியிலும், உள்ளத்திலும் உறைவதை மிகவும் விரும்புவது தெளிவாகிறது. இதைத்தான் ஸ்ரீவசநபூஷண திவ்ய சாஸ்த்ரத்தில் பிள்ளை உலகாரியர் "அங்குத்தை வாஸம் ஸாதநம்; இங்குத்தை வாஸம் ஸாத்₄யம்" என்று அருளிச்செய்தார். ஜ்ஞானியினுடைய உள்ளத்தை விரும்புவதைக் கண்டால், திவ்யதேசங்களில் எம்பெருமானுடைய ஆதரவு குறைவாகவே தோன்றும்.

"கல்லும் கனைகடலும் வைகுந்த வானாடும்
புல்லென் றொழிந்தனகொல் ஏபாவம் — வெல்ல
நெடியான் நிறம்கரியான் உட்புகுந்து நீங்கான்
அடியேன துள்ளத் தகம்" என்று நம்மாழ்வார் அருளியது

காணத்தக்கது. ஆகையால் விடவேண்டிய சரீரமே "ஞானியுடையது" என்னும் காரணத்தால் எம்பெருமானுக்கு விரும்பத்தக்கதாயுள்ளது. ஆகையால், இந்தச் சரீரத்தோடே இவனை இவ்வுலகிலேயே வைத்து நாம் அநுபவிக்கவேணும் என்று எம்பெருமான் ஆசைப்படுகிறான் என்று தெளிவாகிறது.

"ஏறடர்த்ததும் ஏனமாய் நிலம் கீண்டதும் முன்னிராமனாய்
மாறடர்த்ததும் மண்ணளந்ததும் சொல்லிப்பாடி வண்பொன்னிப்
ஆறு போல்வருங் கண்ணநீர் கொண்டு அரங்கன் பேர்
கோயில் திருமுற்றம்
சேறுசெய் தொண்டர் சேவடிச் செழுஞ்சேறு என்சென்னிக்
கணிவனே"

என்று குலசேகரப் பெருமாள் ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் கூறுகிறார்.

"ஆஹ்லாத₃ ஶீத நேத்ராம்பு₃: புளகீக்ருத கா₃த்ரவாந் ।
ஸதா₃ பரகு₃ணாவிஷ்ட: த்₃ரஷ்டவ்ய: ஸர்வ தே₃ஹிபி₄: ॥

என்கிறபடி எம்பெருமானின் கல்யாண குணங்களையும், அதற்கு வாசகமான திருநாமங்களையும், சரிதங்களையும் பாடி, கண்ணும் கண்ணீருமாயிருப்பவனே ஸ்ரீவைஷ்ணவன் என்பர். ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் ஸ்ரீபராசர பட்டர் "ருத்₃ர" என்ற திருநாமத்துக்கு வ்யாக்யானம் செய்யும்போது, "ரோத₃யதீதி ருத்₃ர:" என்று, "அடியார்களை அழவைப்பவன்" என்று விளக்கினார். ஆகையால் எம்பெருமானுடைய குணங்களில் ஈடுபட்டுக் கண்ணும் கண்ணீரு

மாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவரைக் காண்பதே பேறு என்று தேறிற்று ஆகையால் ஜ்ஞாநிகளான அடியார்களை வணங்கி, அவர்களுக்குப் பல்லாண்டு பாடுவதே நாம் செய்யவேண்டியது. இத்தகைய ஸ்ரீவைஷ்ணவர்களுள் மிகச்சிறந்தவராய் விளங்கும் புத்தூர் ஸ்வாமிக்குப் பல்லாண்டு பாடுவதே புருஷார்த்தமாகும். புத்தூர் ஸ்வாமி சொல்லார் தமிழ் ஒரு மூன்றும் கற்றவர். அதற்குச் சான்றாக "சங்ககாலத் தமிழர் சமயம்" "கம்பனின்சமயம்" முதலிய நூல்கள் விளங்குகின்றன. ஸ்ருதிகள் நான்கும் எல்லையில்லா அறநெறியாவும் தெரிந்தவர் என்பதை வெளியிட்டுக்கொண்டு "ஸ்ரீவிஷ்ணுசித்த விஜயம்", "சங்கரரும் வைணவமும்", "பகவத் கீதை விவரணம்", "சாரீரககாரிகாவளி விவரணம்" ஆகியவை இவருடைய வேத இதிஹாஸ புராண ஸ்ரீபாஷ்யாதி நூல்களில் உள்ள புலமைக்குச் சான்றாக விளங்குகின்றன. தவறு கண்ட விடத்து யாராயினும் எவ்வளவு உயர்ந்த பதவியில் இருப்பவராயினும் அஞ்சாது இடித்துரைக்கும் மனவலிமை படைத்தவர். பெரிய மதத் தலைவராயினும் சரி, அவர்களுடைய பேச்சில், உரையில் குற்றம் கண்டால், தக்கச் சான்றுகளுடன் மறுத்துரைக்கும் நுண்மாண் நுழைபுலம் படைத்தவர். ஸ்வாமி ராமாநுசர், சங்கரர், பாஸ்கரர், யாதவப்ரகாசர், பாட்டப்ரபாகரர் முதலானோருடைய அல்லலையெல்லாம் வாதில் வென்றார். அவ்வல்லலை எல்லாம் இராமாநுசர் வெல்வதற்குக் காரணமாயிருந்தது மெய்ம்மதிக்கடலாயிருந்ததலே ஆகும். மெய்ம்மதிக்கடல் - தத்வ ஜ்ஞானத்திற்குக் கடலாயிருத்தல், கடல் குன்றாது நிலைத்து இருத்தல் போலே, மெய்யுணர்வு - தத்வ ஜ்ஞானம் குன்றாது நிலைபெற்று இருந்தது. அத்தகைய மெய்மதிக்கடலாக விளங்குபவர் நம் புத்தூர் ஸ்வாமி என்றால் மிகையாகாது. சில சமயங்களில் பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யான பங்க்திகளுக்குப் பொருள் சரியாக விளங்கவில்லையெனில் ஸ்ரீஸ்வாமி சிறிது நேரம் கண்ணை மூடிக் கொண்டு பெரியவாச்சான்பிள்ளையை தியானிப்பார்: உடன் பொருள் விளங்கும். இதை அடியேன் நேரில் கண்டு அநுபவித்திருக்கிறேன்.

இத்தகைய மெய்ம்மதிக்கடலாகிய நம் புத்தூர் ஸ்வாமி சதாப்தி கண்டருளி ஸம்ப்ரதாய ஸம்ரக்ஷணம் பண்ண நீண்ட ஆயுளையும், வலிமையான உடலையும் அருளப் பெரிய பெருமாள், பெரிய பிராட்டியார், ஸ்ரீராமாநுசர், ஸ்வாமி மணவாள மாமுனிகள் ஆகியோருடைய திருவடித்தாமரைகளைப் பிரார்த்திக்கிறேன்.

ஸ்ரீ:

ஸ்ரீமத்3 யதீந்த்3ர வரயோகி3 பதா3ப்3ஜ ப்4ருங்க3ம்
ஸ்ரீவிஷ்ணுசித்த குருவர்ய த3யைக பாத்ரம் |
த்3ராவிட3 ஸம்ஸ்க்ருத நிக3மாந்த விசார ப்ரவீணம்
ஸ்ரீக்ருஷ்ணஸ்வாம்யார்யம் அநக4ம் ப்ரணமாமி நித்யம் ||

[ஸ்வாமி எம்பெருமானார், ஸ்வாமி மணவாள மாமுனிகள் ஆகியோரின் திருவடித் தாமரைகளில் வண்டுபோல் விளங்குபவரும், எங்களாழ்வானென்கிற சிறந்த ஆசார்யருடைய கிருபைக்கு ஒரே கொள்கலமானவரும், ஸம்ஸ்க்ருத த்ராவிட வேதாந்தார்த்தங்களை விளக்குவதில் ஸமர்த்தரும், குற்றமற்றவருமாகிற க்ருஷ்ணஸ்வாமி ஆர்யரை நான் எப்போதும் வணங்குகிறேன்.]

# ஒரு சைவரின் கடிதம்

[அறிஞர் [illegible], ஹைதராபாத்-47.]

அடியேனின் பணிவுநிறைந்த வணக்கங்கள்; நலமறிய நாட்டம்.

தங்களது 'சதாபிஷேகப் பெருவிழா' மிகச்சிறப்பான முறையில் கொண்டாடப்பட இருப்பதனை அறிந்து சிந்தையெல்லாம் நிறைந்த மகிழ்வுறுகின்றோம். குறிப்பாக, ஸ்ரீரங்கம் வைஷ்ணவஸ்ரீ அன்பர்கள் பெரு முயற்சியெடுத்து யாவரையும் அரவணைத்து அற்புதமான முறையில் நூல் வெளியிட்டு விழா பாராட்டரங்கம் என அமைத்து ஏற்பாடு செய்துள்ளமை பாராட்டத்தக்கது.

நிகழ்ச்சியில் நேரிடையாகப் பங்கேற்றிட, பார்வைக்குறைவு தடையாக இருப்பினும் அகக்கண்களால் கண்டு மகிழ்ந்திடுகிறேன். விருதுகளும், பட்டங்களும் தங்களை வந்தடைவதன் மூலம் அதன் சீர்த்தியைப் பெறுகின்றன. தொடர்ந்து அறுபதாண்டுகாலமாக வைணவ ஸம்ப்ரதாய அறநெறிகளுக்கு மட்டுமே தம்மை அர்ப்பணித்துவரும் தங்களது திருத்தொண்டினை எண்ணி வியக்காதோர் இப்பூவுலகில் எவரும் இலர்.

பத்திரிகை நடத்திடுவதிலும் ஒழுங்குமுறையைக் கடைப்பிடித்து வருவதும், பதிலளிப்பதில் பக்குவமான பாங்கு, மாற்றார் எழுதும் மனம் நோகக்கூடிய கருத்துக்களுக்கும் மதிப்பளித்திடும் மகோன்னதச்செயல், அதிக எச்சரிக்கையுடன் பிழைதிருத்துதல், அழகிய அச்சுப்பணி என இதழாளர்கள் பின்பற்றவேண்டிய வழிமுறைகளின் வழிகாட்டியாகத் திகழும் தாங்கள் நூறாண்டுகளுக்கும் மேலாக வாழ்ந்திட இறையருளை வேண்டுகிறேன்.

உடல் நலத்துடன், உளஉறுதியுடன், ஊக்க உணர்வுடன், எழுச்சி மனோபாவத்துடன் என்றென்றும் வளமுற வாழ்ந்திட, வாயார, மனதார வாழ்த்துகின்றேன். தங்களின் திருவடிகளைப் போற்றி வணங்குகின்றேன். ஆசீர்வதிப்பீராக!

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸுதர்சனர் வாழ்க!

[பாரதி நாதன்

சிறப்பாசிரியர். ஆலயதரிசனம், புவனகிரி]

என்றைக்கும் உள்ள மதம் ஸ்ரீவைஷ்ணவமதம். அதற்கு ஓர் நலிவோ, இடரோ வருகின்ற காலத்தில் அவ்வப்போது எம்பெருமானின் சங்கல்பத்தின்படி மகான்கள் அவ தரித்துப்பாதுகாத்து வந்திருக்கிறார்கள். கலியுகத்திலும் அப்படிப் பல நலிவுகள் நம் ஸம்ப்ரதாயத்திற்கு வந்திருக்கின் றன. புறச்சமய இருட்டு வந்து கவிந்த நேரத்தில் 'வையம் தகளியா' என்று ஆரம்பித்து, தமிழ் வேதமான பிரபந்த ஒளியில் 'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்' என்று எம்பெருமான் திவ்ய தரிசனத்தை உலகமுய்யக் காண வைத் தார்கள் ஆழ்வார்கள்.

அடுத்து "அறுசமயச் சூறாவளி" எனும் ஓர் புயல் [illegible] வணவ ஆன்மிக உலகைத் தாக்கியபோது, ஸ்ரீ. எம்பெருமா ஞர் அதனை அடியோடு அடக்கிக் காத்தருளினார். அந்த எம் பெருமானார் தரிசனம் ஸ்ரீ. மணவாள மாமுனிகள் காலம் வரை [illegible]த்தோங்கி நின்றிருந்தது. பின்பு பாரதத்தின் வரலாறு [illegible] ஓர் நெருக்கடிக்கு உள்ளானது. அந்நிய மதத்தவர், அந்நிய நாட்டவர் என்றிருவரு படையெடுப்பு, அதனால் தேசபக்தி [illegible] விட்டெரிந்தது. வைதிக மதம் இந்து மதமாகி [illegible]. [illegible], ஆழ்வார் ஆசார்யர்கள் காலம்போல் [illegible] என்று நினைத்தபோது, 'ஒற்றுமை'ப் [illegible]. [illegible] வாதம் எனும் சந்தர்ப்ப வாதத் தில் [illegible]. சொந்த சமயத்தைக் காப் [illegible] ஆற்றல்.

'[illegible]' என்று [illegible] வைண வத்தின் [illegible] முயற்சி [illegible]. [illegible] என்றால்

நிலை குலைந்து போவதே தெரியாமல் தடுமாறியது வைணவம். மேலோட்டமாகப் பார்த்தால் வைணவ சமயத்துக்கு நல்லதுபோல் தெரியும். ஆனால் ஆணிச் சலவை சுவடே தெரியாமல் செய்யப்பட்டது. எம்பெருமானின் பரத்துவம் கேள்விக் குறியாகியது. சட்டையப்பர் சந்நிதிகளும், சரபேசுவரர் சந்நிதிகளும் தோன்றின. அதற்கு மேலே ராமருக்கு பிரம்மஹத்தி தோஷம் உண்டானது என்று வைணவனே நம்பும்படிக்குப் பிரசாரம் செய்யப்பட்டது.

இது நீடித்திருந்தால் என்னவாகியிருக்கும்? கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்! ஆம்! இறைவன் தனது திருவாழியை நோக்கினார். ஸுதர்சனம் கிளர்ந்து எழுந்தது. பகவான் கிருஷ்ணர் கையில் ஸுதர்சனம். 'ஸுதர்சனர்' கரங்களிலும் 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' இரண்டும் செய்த காரியம் ஒன்று தான். தாட்சிண்யம் இன்றி, உண்மையைத் தவிர பொய்யுரை எங்கே, எப்படிப்பட்டவர்களிடமிருந்து புறப்பட்டாலும், விட்டு வைத்ததில்லை ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம். இவர் திராவகத்தில் தோய்த்து எழுதுகிறார் என்றார் கண்ணதாசன். உண்மைதான். ஸ்வாமியின் எழுத்து அந்த அளவுக்கு, செல்வாக்கும், சாதாரணத் தாக்குதல்களைப் பற்றிக் கவலைப்படாத மனப்பான்மையையும் உடைய அவரையும் சுட்டெரித்து இருக்கவேண்டும்.

'பெரியவர்கள் கியாதி, லாப பூஜைகளைப்பற்றிக் கவலைப் படுவதேயில்லை' என்பதை மெய்யாக்கியவர் ஸுதர்சனர்ஸ்வாமி. அவருடைய எழுத்துப் பணிக்கு சாகித்ய அகாடமி முதல் இந்தியாவில் உள்ள அத்தனை விருதுகளும் தகும், தகும்; ஓர் பல்கலைக்கழகம் லட்சக்கணக்கான ரூபாய் மானியம்பெற்றுச் செய்யவேண்டிய பதிப்புப் பணிகளை தாம் ஒருவரே, ஒரு பைசா மானியம், வசூல் என்று இல்லாமல் வெளியிடுகிறார் என்றால் அவர் பணியை எப்படிப் பாராட்டாமல் இருக்க முடியும்?

ஆனால், பொருள் முதல் வாதமும் அரசியலும் கலந்த நம் பல்கலைக் கழகங்களும் கல்வியாளர்களும் (அவர் நூல்களை

Bibliography or Reference-ல் காண்பிக்காத வைணவத் தலைப்பிலுள்ள Doctorate Thesis ஒன்று கூட அநேகமாக இருக்க முடியாது!) கண்டு கொள்ளவில்லை என்றால், நம தேசம், தேச பக்தி, பெரியவர்களை கௌரவித்தல் போன்ற விஷயங்களைப் பற்றி என்ன சொல்வது! இதுதான் இன்றைய தேசத்தின் நிலை!!

ஸ்வாமியை எளியேன் சந்தித்திருக்கிறேன். சென்னை வைணவப் பேரவை மாநாட்டில் பொன்னுடை அடியேனுக்கு அணிவித்திருக்கிறார். மென்மையாகவும், எளிமையாகவும் பேசக் கூடியவர். பரம ஸௌலப்பியமானவர். பொழுதுபோக்குப் பேச்சு, வீண் ஆடம்பரம், நேர விரயம் என்றில்லாமல் ஒவ்வொரு நொடியும், ஓர் வைணவ அடியாராக இருந்து வைணவத்தைக் காத்து வருபவர் ஸ்ரீஸ்வாமிகள்.

பிற சமயங்களைக் கடுமையாக நிந்திக்கிறார் என்று என்னிடமே பலர் சொல்லியிருக்கிறார்கள். அவர்களிடம் நான் விளக்கம் தந்திருக்கிறேன். "ஸ்வாமி அந்தந்தச் சமய நெறிகளை அவரவர்கள் முரண்பாடின்றிக் கைக்கொள்ளவேண்டும் என்ற உறுதியுடையவர்கள். சமயம் விலைச்சரக்கல்ல; ஆன்ம உய்வுக்கு வழி என்று உணர்ந்தால் எந்தக் குழப்பமும் வராது. ஆனால் நீங்கள் சமரசம் என்றோ, திருமால் பரத்துவத்துக்குக் களங்கம் கற்பித்தோ எழுதும்போது அவரால் எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும்! முடிந்தால் உங்கள் வாதங்களை நிரூபிக்கத்தானே சொல்கிறார். நிரூபித்து நிலை நாட்டுங்களேன்" என்பேன்.

எப்படி நிலைநாட்ட முடியும்? உண்மை என்ற ஒளிச் சக்கரம் ஸ்ரீஸுதர்சனமாய் நம் ஸ்வாமி திருக்கரங்களில் சுழன்று கொண்டிருக்கும்போது வெற்று வாதங்கள் விட்டில் பூச்சியாய், தானே விழுந்து மடியத்தானே செய்யும்.

ஸ்வாமி இன்னும் ஒரு நூற்றாண்டிருந்து வைணவத்தைக் காத்தருள வேண்டும்.

வாழ்க ஸுதர்சனர்! வளர்க அவர் தொண்டு!!

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# வாழ்க! ஸுதர்சனர்!!

[V. ஸ்ரீதரன், B.E., M B.A., மதுரை-11]

"அதிவாதீ₃ பூ₄வ" [ஸாந்தோ₃க்யம் 1-1-4] என்றது வேதம். [பரம புருஷனே பெரியோன் என்று வாதம் செய்வாயாக என்பது இதன் பொருள்.] இதனை அநுஷ்டித்துக் காட்டினார்கள் ஆழ்வார்கள். அதனை அடியொற்றினார்கள் ஆசார்யர்கள். "ஶ்ருதிஶிரஸி விதீ₃ப்தே ப்₃ரஹ்மணி ஸ்ரீநிவாஸே" என்று பகவத் ராமாநுஜர் 'திருவேங்கடத்துறை செல்வனே பரம் பொருள்' என்பதை ஸ்ரீபாஷ்ய மங்கள ஶ்லோகத்தில் வெளியிட்டார். நாராயணனே முத்தொழிலும் செய்யும் மூழு முதலவன் என்பதை ஸ்ரீவல்லப பாண்டியனின் அரசவையில் நிர்ணயித்தார் பெரியாழ்வார். "நின்பால் பொறுப்பரியனகள் பேசில்........ அறுப்பதே கருமங்கண்டாய் அரங்கமாநகருளானே" என்றார் தொண்டரடிப்பொடியாழ்வார். "த்₃ரோணமஸ்தி தத: பரம்" என்று சோழன் அவையில் பரதத்வ நிர்ணயம் செய்தார் கூரத்தாழ்வான். இவர்கள் காட்டிய வழியில் இன்றும் இப்பணியினை எவ்வித க்₂யாதி, லாப₄ பூஜைகளை எதிர்பாராமல், பலரிடம் ஏற்படக்கூடிய வெறுப்பையும் கணிசியாமல் செய்து வருபவர்தான் புத்தூர் ஸுதர்சனர் ஸ்ரீ உ வே எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், M.A., B.L., அவர்கள் என்பதை வைணவ உலகம் நன்கறியும். தாரண-ஸூ கார்த்திகை-மீ ஸ்வாதி நக்ஷத்ரம் ஸ்வாமியின் 80-வது திருநக்ஷத்ர பூர்த்தியை முன்னிட்டு, ஸ்வாமியுடைய தன்னலமற்ற பணிகளையும், எழுத்துப் பணிகளையும் சுருக்கமாக எடுத்துரைப்பதே இச்சிறு கட்டுரையின் நோக்கம். முதலில் ஸ்வாமி ஆசிரியராக இருந்து நடத்திவரும் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் பத்திரிகையில் ஸ்வாமியால் எழுதப்பட்ட சில நூல்களை நோக்குவோம்.

1. **ஸ்ரீவிஷ்ணுசித்த விஜயம்.** ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள் என்பதை வேத₃ உபநிஷத், இதிஹாஸ, புராண,

உபபுராணங்களைக் கொண்டும், வைதிகர்களின் வாக்கியைக் கொண்டும் நிர்ணயிப்பதற்காக ஸ்வாமியின் தந்தையாரால் தொடங்கப்பட்டு, பின்னர் ஸுதர்சனரால் தொடரப்பட்டு, தற்போது ஸ்ரீராமாயண நிர்ணயம் வெளிவந்து கொண்டுள்ளது.

**2. கீதா வ்யாக்யானம்.** "மாயன் அன்று ஓதிய வாக்"கான பகவத் கீதைக்கு பகவத் ராமாநுஜரின் பாஷ்யத்தின் அடிப்படையிலும், வாதிகேசரி அழகிய மணவாள ஜீயர் அருளிச்செய்த பகவத்கீதை வெண்பாவும், ஆளவந்தாரின் கீதார்த்த ஸங்க்ரஹமும் உரையுடனும், ஸ்வாமி தேசிகனின் கீதார்த்த சங்கிரகத் தமிழ்ப்பாக்களின் பொருளுடன் கூடிய ஸுதர்சனரின் கீதா வ்யாக்யானம் மிகவும் அருமையான நூல் என்பதைப் படித்தவர்கள் உணரலாம்.

**3. சாதீம்த ஆராய்ச்சி.** சங்ககாலத்தில் தமிழர்களின் வாழ்க்கை முறை அவர்களின் கடவுட் கொள்கை முதலியவற்றைப் பரிபாடலில் திருமாலுக்குரிய பாட்டல்களைக்கொண்டு விளக்கியுள்ளார். அக்காலத்தில் "நூலே கரகம் முக்கோல் மணையே ஆயும் காலை அந்தணர்க்குரிய" [தொல்காப்பியம்] என்று வைணவ யதிகளே போற்றப்பட்டிருப்பதையும், கௌபீனம், யஜ்ஞோபவீத வர்ஜனம் முதலியனவுடைய அத்வைத ஸந்யாசிகளைக் குறித்து' ' எக்குறிப்பும் இல்லை என்பதையும் மேலும் "நாற்றிணர்த்துழாயோன் நல்கின் அல்லதை ஏறுதல் எளிதோ வீறு பெறு துறக்கம்" [பரிபாடல்] [துறக்கம் எனப்படும் மோக்ஷத்தைத் துழாய் மாலையணிந்த திருமால் ஒருவனாலேயே வழங்க முடியும்] என்று சங்கத் தமிழர்கள் கருதினர்கள் என்பதையும் இந்நூலில் காணலாம். தமிழ் மொழியில் ஸ்வாமியின் நுண்மாண் நுழை புலம் எத்தகையது என்பதை அறியலாம்.

**4. கைவல்ய ஸித்தாஞ்ஜனம்** "சிறு வீடு" என்று (ஸ்வாபதேசத்தில்) ஆண்டாளும், "குறுகாநீளா" [திருவாய் 6-9-10] என்று நம்மாழ்வாரும் குறிப்பிட்ட கைவல்ய மோக்ஷம் எது? அதனுடைய ஸ்தானம் என்ன? "ந ச புனராவர்த்ததே" என்ற மோக்ஷ லக்ஷணம் கைவல்யத்திற்குப்

பொருந்துமா? என்பன போன்ற கைவல்ய மோக்ஷத்தைப் பற்றிய விஷயங்களில் சில நூற்றாண்டுகளாக வைணவப் பெரியோர்களிடையே இருந்த கருத்து வேற்றுமைகளைத் தொகுத்துக் கைவல்ய மோக்ஷத்தைப் பற்றிய தெளிவான விளக்கத்தை அறிய விரும்புவோர் அவசியம் படிக்கவேண்டிய நூல்.

**5. சங்கரரும் வைணவமும்.** நாராயணனே ஸகுண ப்ரஹ்மம் என்று கொண்டவர் சங்கரர். அவர் கீதாபாஷ்யத்திற்கும், மஹாபாரத அந்தர்கதமான, பீஷ்ம-யுதிஷ்டிர ஸம்வாத ரூபமான ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கும் வேத வ்யாசரின் ப்ரஹ்ம ஸூத்ரத்திற்கும் உரையிட்டார். காபாலிகர்களால் அபாயம் நேரிட்டபோது "ந்ருஸிம்ஹ கராவலம்ப ஸ்தோத்ரம்" செய்தார் சங்கரர். பாஞ்சராத்ர ஆகமத்தில் உள்ள விஷ்ணு பரத்வத்தை ஏற்றுக்கொண்டு, ஜீவனுக்கு உத்பத்தி சொல்லப்பட்டுள்ளதாக ப்ரமித்து, பாஞ்சராத்ரம் ப்ரமாணமல்ல என்று கொண்டார் என்று பல விஷயங்கள் இந்நூலில் ஸுதர்சனரால் விவரிக்கப்பட்டுள்ளது. "நாராயண ஸ்ம்ருதி" என்று கையெழுத்திடும் அத்வைதிகள் நாராயண பராயணர்களாக இருக்க வேண்டியவர்கள். பஸ்மதாரணம் சந்த்ர மௌளீச்வர பூஜை முதலானவற்றைப் பிடித்துக்கொண்டு அத்வைதிகர்களாக மாறியது கலி கோலாஹலம் போலும்.

**6. சங்ககாலத் தமிழர் சமயமே கம்பனின் சமயம்.** காலஞ்சென்ற ம. பொ. சி. அவர்கள் தமது "செங்கோல்" பத்திரிகையில் கம்பனைச் சைவனாகச் சித்திரித்தபோது, கம்பன் சங்ககாலத் தமிழர் சமயமான வைணவத்தையே கைக்கொண்டவன் என்பதனை உணர்த்தி எழுதிய நூல்.

**7. மோக்ஷோபாய ப்ரதீபிகை விவரணம். (வைகானஸ ஸித்தாந்த ஸாரம்).** வைணவக் கோயில்களில் வழிபாடு ஸ்ரீபாஞ்சராத்ரம் மற்றும் வைகானஸம் ஆகிய இரு ஆகமங்களின் அடிப்படையில் நடைபெறுகிறது. விகனஸரால் தோற்றுவிக்கப்பட்டது. ஆகையால் வைகானஸம் எனப்படும் வைகானஸ ஸித்தாந்த ஸாரம் தமிழில் எளிமையாக ஸுதர்சனரால் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது.

**8. சாரீரககாரிகாவளீ விவரணம்.** கோழியாலம் ஸ்ரீநி வாஸாசார்யர் எழுதிய நூலின் விவரணையான இந்நூல் ஸ்ரீபாஷ்யத்தின் அர்த்தத்தைச் சுருக்கமாக அறியத் தமிழில் விளக்குவது.

**9. தனிச்லோக வ்யாக்யானங்கள்.** இருபெரும் இதிஹாஸங்களான ஸ்ரீராமாயணம் மற்றும் மஹாபாரதம் முதலியவற்றில் மிக முக்யமான ஸ்லோகங்களுக்குப் பெரியவாச்சான் பிள்ளை அருளியுள்ள ரஸகனமான விரிவுரைகளுக்கு மிகவும் எளிய முறையில் நம் போன்றோர் புரிந்து கொள்ளும்படி தமிழில் அருளிய விவரண நூல்.

*10.* இவையன்றி, திருமாலை முதலிய திவ்யப்ரபந்தங்களுக்கும், வார்த்தாமாலை முமுக்ஷுப்படி முதலிய ரஹஸ்ய நூல்களுக்கும் ஸ்வாமி அருளியுள்ள அருளிவரும் விரிவுரைகள் மிகவும் அநுபவிக்கத்தக்க முறையில் அமைந்துள்ளன.

*11.* இவைபோக, திருவாய்மொழிக்கு ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி, இருபத்து நாலாயிரப்படி மற்றும் ஈடு ஆகிய வ்யாக்யானங்களை ஸ்வாமி பதிப்பித்துள்ளது வைணவ உலகம் நன்கறியும்.

*12.* மேலும் சைவர்களாகவும் சாக்தர்களாகவும் மாறிவிட்ட அத்வைதிகள் "விஷ்ணுவுக்குத் தமோகுணமுண்டு" என்றும் "உபநிஷத்துக்கள் 108" என்றும், "ராமபிரான் லிங்கப் பிரதிஷ்டை செய்தார்", "திருமால் தனது கண்ணைப் பிடுங்கி சிவனுக்கு அர்ச்சனை செய்தார்". "ராமன் ராவணனைக் கொன்றதால் பெருமானுக்கு ப்ரஹ்மஹத்தி தோஷம், வீரஹத்தி தோஷம் மற்றும் சாயாஹத்தி தோஷம் வந்தது" முதலான பெரும் பொய்களைக் கிளப்பிவிட, அவற்றைத் தனி நூல்கள் மூலமும் "ஸ்ரீஸுதர்சனர் பதில்" மூலமும் அவ்வப்போது கண்டித்துள்ளார்.

சாஸ்த்ர விரோதமாக விஷ்ணுவைத் தாழ்த்திக் கூறும் திருவெம்பாவையை விஷ்ணு கோயில்களில் பாடச்செய்ய அத்வைதிகள் செய்த முயற்சி ஸ்வாமியின் "திருச்சந்த

விருத்த—நான்முகன் திருவந்தாதி மாநாடுகள்'' மூலம் ஸ்வாமி யால் தகர்த்தெறியப்பட்டன என்பதை வைணவ உலகம் நன்கறியும்.

சாஸ்த்ர விரோதமாக எவர் பேசினாலும் எழுதினாலும் அதனை மிகவும் கண்ணியமாகவும் நேர்மையாகவும் ஸ்வாமி கண்டிக்கும் அழகும், எதிர் சாரார் வாதவிவாதங்களை விடுத்து வ்யக்தி தூஷணம் எனப்படும் தனி மனிதத் தாக்கு தல் ஆரம்பிக்கும்போது, ஸ்வாமியிடம் இருந்து உடனடியாகக் கிளம்பும் ஸுதர்சன ப்ரயோகத்தில் ராமபிரானின் சுடுசரம் போன்ற கேள்விகளுக்கு பதிலிறுக்க முடியாமலே பலர் விவா தத்தை நிறுத்தினார்கள் என்றால் மிகையாகாது.

திரௌபதி ப்ரபத்தி விமர்சத்தில் மஹாவித்வான் ஸ்வாமி யும், கம்பனின் சமயத்தில் ம. பொ. சி.-யும் ஸ்ரீவைஷ்ணவ விஜயத்வஜத்தில் பி. மா. சோமசுந்தரமும், சமீப காலத்தில் ஸ்ரீதத்வ ஸர்வஸ்வத்தில் V. S. கருணாகரன் ஸ்வாமியும் புத்தூர் ஸுதர்சனரின் கேள்விக்கணைகளுக்கு இலக்கானவர்கள் என் பதை ஸுதர்சனம் வாசகர்கள் நன்கறிவர்.

ஸ்வாமியின் திவ்யதேச ப்ராவண்யம் அளப்பரியது. ஆஸேது ஹிமாசல பர்யந்தம் திருப்பிரி, சாளக்கிராமம் நீங்க லாகப் பலமுறை யாத்திரை மேற்கொண்டுள்ளார்.

ஆயிரம் வருடங்களுக்குமுன் திருவேங்கடமுடையானை முருகன் என்றும், சிவன் என்றும், காளி என்றும் பலர் பல விதமாகப் பிதற்ற, பகவத் ராமாநுஜர் காலத்தில் திருவேங்கட வன் திருமாலே என்பதை நிலை நிறுத்தினார். ஆகையால் தெய்வ வடமலை தப்பியது. ஆனால் தென்னன் உயர் பொருப் பாம் தெற்குத் திருமலையான அழகர் கோயிலில் மலைக்குமேல் நூபுர கங்கை அருகே அழகர் எழுந்தருளும் மண்டபம் இர வோடு இரவாக 1959-ல் முருகன் கோயிலாக மாற்றப்பட்

1 ஆ. மேலும் முருகனின் படை வீடான பழமுதிர்சோலை என்றும் பிரசாரம் செய்யப்பட்டது. வைணவர்களின் திவ்யதேசமான மாலிருங்குன்றம் எனும் திருமாலிருஞ்சோலையை "பழமுதிர் சோலை" என அழைக்கலாகாது என உயர்நீதி மன்றம் 1967ல் தீர்ப்பளித்தது. 20 வருடத்திற்குப்பின் மீண்டும் சைவர்கள் மலையில் "மான் பூங்கா" என்ற பெயரில் புதிய முருகன் கோயிலைக் கட்ட முயற்சித்தபோது அழகர் மலையைக் காப்பாற்ற "சீரியர் படையை" ஸுதர்சனர் திரட்டி அழகர்மலை அழகருக்கே உரிமையானது எனத் தீர்ப்புப்பெறுவதற்காகப் பல முறை மேலூர் மதுரை நீதிமன்றங்களுக்குச் சென்று சாக்ஷியம் அளித்துள்ளார். இச்செயல்கள் மூலம் தெற்குத் திருமலையான திருமாலிருஞ்சோலையின் மீதும் அழகர் மீதும் ஸ்வாமிக்குள்ள அளப்பரிய திவ்யதேச ஸம்ரக்ஷண ப்ரதிபத்தியும் வெளிப்படுகிறது.

ஸ்வாமி வெளியிட்ட நூல்களைக் கொண்டு பலர் இன்று டாக்டர் பட்டம் பெற்றுள்ளனர். எனவே புத்தூர் ஸுதர்சனராம் நம் ஸ்வாமியை "வைணவப் பேரறிஞர்" என்றால் அது மிகையாகாது.

"பக்தானுக்ராஹகம் புண்யம் ப்ரதிபக்ஷ நிராஸகம்
ஜீயாதாசந்த்ர நக்ஷத்ரம் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்ஸனம்"

என்கிற மங்களஶ்லோகத்தின்படியே ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனமும் வாழி! ஆசிரியரான புத்தூர் ஸ்வாமியும், அவருக்கு நித்ய கைங்கர்யம் செய்துவரும் அவருடைய தேவிகளும், ஸ்வாமி எம்பெருமானாரைப்போலே 120 வருடங்கள் "விண்ணுமாள்வார் மண்ணூடே" என்கிற ஆழ்வாரின் அருளிச்செயல்படி அரோக திடகாத்ரராய் எழுந்தருளியிருந்து, பெரிய திருமொழி வ்யாக்யானம் முதலான பல வ்யாக்யானங்களை நிறைவுறுத்தி வைணவர்களை வாழ்விக்கத் திருமலையப்பன் ஸ்ரீநிவாஸன் திருவடி பணிந்து 'ஸுதர்சனர் வாழ்க!' என்று இக்கட்டுரையை நிறைவுறுத்துகிறேன்.

ஸ்ரீ:

ஸ்ரீமத்யை கோதாயை நம: ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பாகவதாபிமானம்

[வித்வான் ஸ்ரீ உ வே R. கண்ணன் ஸ்வாமி,
ஸ்ரீவில்லிபுத்தூர்.]



ஒரூருக்குச் செல்வதற்குப் பல மார்க்கங்கள் இருப்பதுபோல ஸ்ரீமந்நாராயணன் திருவருளைப் பெறுவதற்கும் விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தில் பலவழிகள் கூறப்பட்டுள்ளன. கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம், ப்ரபத்தியோகம் இவற்றைப் போன்று பாகவதாபிமானமும் அவனருளைப் பெறுவதற்குச் சுலபமான உபாயமாகும். பகவத் கைங்கர்யத்திலும் பாகவத கைங்கர்யம் ஶ்லாக்யமானது. பாகவத கைங்கர்யத்தினால் பகவான் திருவுள்ள முகக்கிறான் என்று வேதமே முழங்குகிறது. "யாவத்₃பி₄ர்வா ராஜாநுசரைராக₃ச்ச₂தி ஸர்வேப்₄யோ வை தேப்₄ய ஆதித்₂யம் க்ரியதே" [யஜுர் வேதம்] என்று. ஸ்ரீராமாயணத்தில் ஸ்ரீசத்ருக்னாழ்வானே இதற்கு எடுத்துக்காட்டாவார். கும்பகர்ணனின் தம்பி பரமஹிம்ஸகனாக இருந்தபோதிலும் பாகவதாபிமானத்தால் முக்தி பெற்றானன்றோ. பாகவதபசாரத்தைக் காட்டிலும் பாகவதாபசாரம் பொல்லாதது "பகவதபசாரப்பட்ட சிசுபாலன் வாழ்ந்து போனான்; ஆசார்யாபராதப்பட்ட நாலூரானும் நற்கதி பெற்றான்; பாகவதாபசாரப்பட்டார் வாழ்ந்து போனாரென்று இதுகாறும் கேட்டிலமால்" என்பது பூர்வர்கள் வசனம்.

மத்₃ப₄க்தம் ஶ்வபசம் வாபி நிந்தா₃ம் குர்வந்தி யே நரா: |
பத்₃மகோடி ஶதேநாபி ந க்ஷமாமி வஸுந்த₄ரே ||

என்பது வராஹ நாயனார் வாக்கு.

ஸ்ரீராமாயணத்தில் ஸ்ரீராமசுக்ரீவர் நட்பு ஏற்பட்ட பிறகு போருக்குச் சென்ற சுக்ரீவன் வாலி பக்கல் செம்மையாக உதை வாங்கித் திரும்பினான். இருவருக்கும் வேறுபாடு தெரியாததால் ஸ்ரீராமன் பாணப்ரயோகம் பண்ணவில்லை என்கிறார். உண்மைக் காரணம் அதுவல்ல. இருவருக்கும் நட்புச்செய்வித்த ஆசார்யனாகிய லக்ஷ்மணனுக்கு ஆஸனம் கொடாது அபசாரப்பட்டுவிட்டான் சுக்ரீவன். அவ்வபசாரத்திற்குப் பரிஹாரமாகத்தான் வெள்ளவொத்திப் பூவினால் தொடுக்கப்பெற்ற மாலையை ராமன் இலக்குவனையிட்டு அணிவிக்கச் சொன்னார். அம்மாலையை அவன் குனிந்து

வாங்கிக்கொண்டான். அதனை அவன் வணங்கியதாகக் கருதிப் பெருமாள் அவன் செய்த பிழையை மன்னித்து அவனுக்கு அருள் புரிந்தார்.

தசக்ரீவனுல் நாடு கடத்தப்பட்ட விபீஷணன், மந்திரிகள் நால்வர் புடைசூழ வானத்தில் நின்றவாறே வானர வீரர்களை நோக்கித் தான் ஸ்ரீராமனைச் சரண் புகுந்ததாகத் தெரிவிக்குமாறு கதறினுன். பகைவன் பக்கலிலிருந்து வந்தவனும், ராவணனின் தம்பியுமாகிய விபீஷணனைக் கொல்வதற்காக மலைகளையும், மரங்களையும் தாங்கி நின்றது வானரசேனை. தங்கூரம் பாய்ச்சிய கப்பல் போன்று விபீஷணன் வானத்திலேயே நின்றுகொண்டு வானர முதலிகளிடம் தான் மனைவி, மக்கள், ராஜ்யம் அனைத்தையும் விட்டுவிட்டு ராமனைச் சரண்புகுந்ததாக ஸ்ரீராமனிடம் தெரிவிக்குமாறு கதறுகிறுன். இதனை அறிந்த சுக்ரீவன், "உடலையும் உயிரையும் பிரித்தாற்போன்று ஸீதையைப் பிரித்த பாவியாகிய ராவணனின் தம்பி இவன். நண்பன்போல நடித்து நம்மைக் கொல்ல வந்துள்ளான். எக்காரணத்தைக் கொண்டும் இவனைச் சேர்த்துக் கொள்ளக்கூடாது" என வாதாடுகிறுன். அடுத்து அங்கதன், சரபன், ஜாம்பவான், மைந்தன் ஆகிய நால்வரும் சுக்ரீவனை அடியொற்றி விபீஷணனைச் சேர்த்துக்கொள்ளக்கூடாது என்கின்றனர். அனுமன் மட்டும் தக்க காரணங்களைக்கூறிச் சேர்த்துக் கொள்ளலாம் என்கிருன். சுக்ரீவன் பலவாறு தடுத்துச் சொல்லியும் ஸ்ரீராமர், "'சரணம்' என்று வந்தவனுக்கு அடைக்கலம் கொடுத்தே தீருவேன்" என்று உறுதியாகச் சொல்லிவிட்டார். மேலும் "எந்த விபீஷணனை சேர்த்துக்கொள்ளக்கூடாது என்று தடுத்தாயோ சுக்ரீவா! நீயே போய் அவனைக் கைலாக்குக் கொடுத்து அழைத்து வா" என ஆணையிட்டுவிட்டார். சுக்ரீவனும் உடன் சமாளித்து "எனக்கும் விபீஷணன் நல்லவன் என்று தெரியும்; இருப்பினும் அடியார்களைக் காப்பதிலே தேவரீருக்குண்டான ஆர்வத்தை உலகுக்கு அறிவிப்பதற்காக வாதிட்டேன்" என்று விபீஷணனுக்கு அருள்பாடிட்டு அவனை ஸ்ரீராமனிடம் அழைத்து வந்தான். ஸ்ரீராமனும், "தாழ்கடல் இலங்கைச் செல்வம் நின்னதே தந்தேன்" என்று லங்கா ஸாம்ராஜ்யத்திற்கு அவனை முடிசூட்டினர்.

விபீஷணனைச் சேர்த்துக்கொள்ளக்கூடாது என வாதிட்ட அங்கதன், சரபன், ஜாம்பவான், மைந்தன் ஆகிய நால்வருக்கும்

அச்சம் வந்துவிட்டது. "பரமபாகவதேசாத்தமனுகிய விபீஷணனைச் சேர்த்துக் கொள்ளக்கூடாது என வாதிட்டு ஸ்ரீராமன் திருவுள்ளத்துக்கு மாருக பாகவதாபசாரப்பட்டு விட்டோமே; சுக்ரீவன் விபீஷணனுக்கு அருளப்பாடிட்டு அழைத்து வந்து அவ்வபசாரத்துக்குக் கழுவாய் தேடிக்கொண்டு விட்டான். பெருமான் திருவுள்ளத்துக்குச் சேர இவ்வபசாரத்துக்கு நாம் என்ன பிராயச்சித்தம் பண்ணுவது" என ஆராய்ந்து கொண்டிருந்தனர். ஸ்ரீராமரது ஆணையினுல் இலங்கை அரசனுக முடிசூட்டப்பெற்ற விபீஷணனுக்கு, வானர சேனைகள் அணிவகுத்து ராணுவ மரியாதை செலுத்தும் வண்ணம் சந்தன விமானம் செய்து அதில் பவனி வருமாறு ஏற்பாடு செய்தார். பாகவதாபசாரப்பட்ட அங்கதன் முதலிய நான்கு வானர வீரர்களும் ஓடிச்சென்று அச்சந்தன விமானத்தைத் தாங்கினர். "விபீஷணன் பக்கல் அபசாரப்பட்ட நாம் இவருக்குப் பல்லக்குச் சுமந்து பாகவத கைங்கர்யம் செய்து அவ்வபசாரத்தைப் போக்கிக் கொள்வோம்" என்றெண்ணினர். அதுகண்டு பெருமாள் திருவுள்ளம் பெரிதும் மகிழ்ந்தது.

"அந்தமில் குணத்தினனை அடியிணை முடியினேடும்
சந்தன விமானமேற்றி வானரத்தலைவர் தாங்க
இந்திரற்கரிய செல்வம் எய்தினன் இவனென்றேத்தி
மந்தரத் தடந்தோள் வீரர் வலம்செய்தார் தானை வைப்பை"

என்று கம்பர் இந்நிகழ்ச்சியை அழகுறச் சித்திரித்துள்ளார்.

பல்லாண்டு காலமாக ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் என்ற பத்திரிகையின் மூலமாக அஞ்சாநெஞ்சினராய், ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய ஸம்ரக்ஷணம் செய்துவரும் ஸ்ரீ உ வே எஸ். கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி இன்று சதாபிஷேகம் காண இருக்கிருர். ஆயிரம் பிறைகண்ட இவர் இன்னம் பல்லாண்டுக்காலம் வையம் மன்னி வீற்றிருந்து ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்துக்கு அருந்தொண்டாற்றி வருமாறு ஸ்ரீரங்க திவ்ய தம்பதிகளைப் பிரார்த்திப்போமாக. ஸம்ப்ரதாய ஸம்ரக்ஷகரான இவரது அபிமானத்தைப் பெற்று நாமெல்லாரும் நல்வாழ்வு பெறுவோமாக.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

[ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீ S. T. ரங்கராஜன், ஸ்ரீரங்கம்]

ஸ்ரீமத் வேத மார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யராய் உபயவேதாந்தா சார்யராய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமியின் எண்பதாம் ஆண்டு நிறைவு விழாவிலே அடியேனுக்கும் ஒரு சிறு அந்வயம் ஏற்படவேணும் என்ற பேராசையாலே இக்கட்டுரையை ஸமர்ப்பிக்கிறேன்.

யோ த$_{3}$த்$_{3}$யாத் ப$_{4}$க$_{3}$வத்$_{3}$ ஜ்ஞாநம்
குர்யாத்$_{3}$வா த$_{4}$ர்ம த$_{3}$ர்சநம் |
க்ருத்ஸ்நாம் வா ப்ருதி$_{2}$வீம் த$_{3}$த்$_{3}$யாத்
ந தத்துல்யம் கதா$_{2}$சந || [விஷ்ணு தர்மம்]

[பகவானைப் பற்றிய அறிவை எவன் அளிக்கிறானோ, பகவானை அடைய உபாயத்தை எவன் அறிவிக்கிறானோ, பூமி முழுவதையும் அவனுக்கு அளிக்கவேண்டும்; அது அவன் அளித்ததற்கு ஒரு படியாலும் ஒப்பாகாது.] எனும் ப்ரமாணம் ஸ்வாமி விஷயத்தில் சாலப் பொருந்தும்.

**பகவத் ஜ்ஞானம் :** எம்பெருமானார் தர்சனத்தைச் சார்ந்த ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உபய வேதாந்த ப்ரவர்த்தக ஆசார்யர் என்கிற விருது அஸாதாரணமாகும். இவ்விருதுக்கு ஏற்ப ஜ்ஞானமும் பக்தியும் ஸ்வாமியிடம் பரிபூர்ணமாக விளங்குகின்றன. "உபயவேதாந்தங்களான ப்ரஹ்மஸூத்ரமும் திவ்யப்ரபந்த ஸ்ரீஸூக்திகளுக்கும் பாஷை வேறுபாடு தானொழிய ஒன்று சொன்னதை மற்றொன்று சொல்லாதோ" என்று ப்ரமிக்கக்கூடும். ப்ரஹ்ம ஸூத்ரத்தில் ஆதியோடந்தம் பகவானை ப்ரஹ்ம என்று உரைக்கப்படுவதேயல்லாது ஓரிடத்திலும் நாராயண, வாஸுதேவ, விஷ்ணு பதங்களையிட்டுக் கூறியதில்லை. அன்னது கல்யாண குணங்களையோ ராமக்ருஷ்ணாத்யவதாரங்களையோ விஸ்தாரமாகச் சொல்லவில்லை. இவைகளையெல்லாம் ஸுஸ்பஷ்டமாகத் தெரிவிப்பவை ஆழ்வார்களுடைய ஸ்ரீஸூக்திகளேயாம். இவற்றைப் பெரும்பாலும் ஸ்வாமி எம்பெருமானார் அருளிச்செய்த கத்யத்ரயத்திற்கு, புத்தூர் ஸ்வாமியின் விவரணம் மந்தமதிகளும் எளிதாகப் புரிந்து கொள்ளும்படி அமைந்துள்ளது. பூர்வாசார்யர்களின் வ்யாக்யானங்களைக் காலக்ஷேபரீதியில் கேட்டாலொழிய க்ரஹிப்பது கடினமாகும். நமது ஸ்வாமியின் விவரணங்கள் உள்ள க்ரந்தங்கள் எல்லாமே காலக்ஷேபம் கேட்க வாய்ப்பில்லாத ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்திற்கே பெரும் பயனை அளிக்கவல்லவை. உபந்யஸிக்க ஆசைப்படும் ஆரம்ப நிலையிலுள்ள அதிகாரிகளுக்கும் இது வரப்ரஸாதமாகும். கீழ்ச்சொன்ன ச்லோகத்தில் பகவத் ஜ்ஞானத்தை மக்களுக்கு அளிப்பவர் என்பது ஸ்வாமி விஷயத்தில் சாலப் பொருந்தும் என்பதற்கு ஒருதுளி எடுத்துச் சொன்னபடி.

**தர்மதர்சனம்:** (ஸம்ப்ரதாயத்தைப் பற்றிய உண்மை அறிவு—எம்பெருமானை அடையும் உபாயம்)

**மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஶ்சித் யததி ஸித்தயே |**
**யததாமபி ஸித்தாநாம் கஶ்சிந் மாம் வேத்தி தத்த்வத: ||**
[ஸ்ரீமத் கீதை 7-3]

[சாஸ்த்ராதிகாரிகளுக்குள்ளே ஆயிரக்கணக்கானவர்களில் ஒருவனே ஸித்தியடையும் வரை முயல்கிறான். அப்படி ஸித்தியடையும் வரை முயல்கின்றவர்களுக்குள் (ஆயிரக்கணக்கானவர்களில்) ஒருவனே என்னை உள்ளபடி அறிகிறான்.]

மனுஷ்யாணாம் என்பதற்கு ஸ்வாமி எம்பெருமானார் கீதாபாஷ்யத்தில் மனுஷ்யா: (சாஸ்த்ராதிகாரயோக்யா:) அதாவது— சாஸ்த்ரங்களையொட்டி வைதிக கர்மங்களை அனுஷ்டிக்கத் தகுதி பெற்றவர்கள் என்று வ்யாக்யானம் செய்துள்ளார். புத்தூர் ஸ்வாமி எழுதியிருக்கும் விவரணத்தில் "தேவதாதிகரணம்" முதலியவற்றில் தேவதைகள் முதலானோர்க்கும் மோக்ஷஸித்தியின் பொருட்டு முயல அதிகாரமுண்டு என்று நிரூபித்திருக்கையால் இங்கு மனுஷ்ய சப்தம் சாஸ்த்ர விஹிதமான "மோக்ஷஸாதனங்களில் அதிகாரமுடைய அனைவரையும் காட்டுகிறது" என்கிறார். மனுஷ்ய சப்தத்தில் **தேவதைகளும்** இப்பிரகாரத்தையொட்டி உட்படுவர் என்பது **ஸ்வாமி தமிழ்** விவரணத்தில் எடுத்துக்காட்டியதால் நமக்கு விளங்குகிறது.

இதேபோல கீழ்ச்சொன்ன ச்லோகத்தில் 'வேத்தி தத்த்வத:' என்ற இடத்தில் ஸ்வாமி எம்பெருமானார் 'யதாவஸ்திதம் மாம் வேத்தி' (என்னை உள்ளபடியறிகிறான்) என்று, பாஷ்யமிட்டருளியுள்ளார். இவ்விடத்தில் புத்தூர் ஸ்வாமி 'உபேயமான என்னையே உபாயமாகவும் அறிகிறான்' என்று விளக்கிக் காட்டுகிறார். எம்பெருமானே அவனை அடைய உபாயம் என்கிற ஸித்தாந்தம் பலருக்கும் தெரிந்திருக்குமானாலும் இந்த இடத்தில் தத்த்வத: வேத்தி— உள்ளபடி அறிகிறான் என்பதற்கு எம்பெருமானையே உபாயமாகவும் அறிகிறான் என்று பொருள் கொள்ளவேண்டும் என்று ஸ்புரிக்காது. ஆக எந்த இடத்தில் வைஷ்ணவ ஸித்தாந்தத்தின் உண்மைப்பொருளை எல்லோருக்கும் புரியும்படி விளக்கவேண்டுமோ அங்கு எல்லாம் புத்தூர் ஸ்வாமி நமக்கு தேசிகராக விளங்குகிறார்; தர்மதர்சனம் இதுவே.

ஸ்வாமி பல்லாண்டு வாழ்ந்து நம் தர்சனத்தைப் பாதுகாக்க வேணும் என்று பிரார்த்திப்போமாக.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமானுஜாய நம:

கே. சி. ஏ. வரதன், இ. ஆ. ப. (ஓய்வு).
4-A, டைமண்ட் கிதாஞ்சலி,
புது எண். 17, கலாக்ஷேத்ரா ரோடு,
திருவான்மியூர், சென்னை-600 041.



தேவரீரின் 80-வது திருநக்ஷத்ரத்தையொட்டி தேவரீர் சிஷ்யர்கள் சிறந்தமுறையில் வேத, அருளிச்செயல் பாராயணங்கள் முதலியதோடு கூடிய நல்ல கொண்டாட்டங்களை ஏற்படுத்தியிருக்கிறார்கள் என்று அறிந்து மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.

விசிஷ்டாத்வைத மதத்திற்கும் ஸ்ரீவைஷ்ணவ ஸத்ஸம்ப்ரதாயத்திற்கும் ஸ்வாமி ஆற்றியிருக்கும் உபகாரம் மிகப்பெரியதும் ஒரு அரிய பொக்கிஷம் போன்றதுமாகும். ஸ்வாமியால் எழுதப்பட்ட புத்தகங்களெல்லாம் நம் ஸம்ப்ரதாயத்தில் ஒரு முக்கியமான தேவையைப் பூர்த்தி செய்வனவாய் அமைந்திருக்கின்றன. பூர்வர்களால் அநுக்ரஹிக்கப்பட்ட அர்த்தங்களுக்குக் குறையில்லாமலும், ஆனால் நவீனகாலக் கல்வி முறையால் உருவாக்கப்பட்டவர்கள் நன்றாகப் புரிந்துகொள்ளலாம்படியும் அமைந்துள்ளது தேவரீருடைய எழுத்துத்திறன். "க்ரந்த சதுஷ்டயம்" என்று சொல்லப்படும் நம்மதத்தின் நான்கு கிளைகளிலும் பல க்ரந்தங்களை, மொழி பெயர்ப்பு, விரிவுரை, ப்ரமாணத்திரட்டு இவைகளோடு வெளியிட்டு, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் (நம் மதத்தின் ஸாரத்தை அறிய ஆவலாக இருக்கும் இதரர்களுக்கும்) ஸ்வாமி பெறும் க்ருபையைச் செய்திருக்கிறீர்கள்.

தங்களுக்கு நீண்ட ஆயுளையும், நல்ல உடல்நலத்தையும் கொடுத்து, தாங்கள் ஆற்றும் தொண்டு இன்னும் பல காலம் தொடர்ந்து நடைபெற ஸ்ரீமந்நாராயணன் திருவுள்ளம் செய்யவேண்டும் என்று ப்ரார்த்தித்துக் கொள்கிறேன்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம:

# ஞானச்சூரியன்

['ஸ்வாமி' N. R. ஸம்பத், வேளச்சேரி, சென்னை]



இன்றொரு நூற்றுண்டிலும் ஸ்ரீமந் நாராயணனை நெஞ்சில் நிறுத்தி, ஞானச்சூரியன் நமது ஸ்ரீ ஸுதர்சனர் ஸ்வாமிகளைப் போற்றுகிறேன்; அதேசமயம் அவராசியையும் அகமகிழ்ந்து வேண்டுகிறேன்.

சூரியன் இல்லையேல் உலகம் ஓர் உயிருள்ள கோளாக இல்லாமல், இறந்த கோளமாகிவிடும். நம் ஸ்வாமி ஸுதர்சனர் இல்லை என்றாலும் வைணவ உலகமும் அப்படியே, உலர்ந்து உயிரற்றுப் போயிருக்கும். அன்னாருக்குப் பிராயம் என்பது என்கிறார்கள். எனக்கென்னமோ அவருக்குக் குறிப்பிட்ட வயது எனக் கூறிட முடியாது என்றே படுகிறது. ஒரு விவசாயி எப்படி உழுவதும் விதைப்பதும் அறுப்பதும் சுமப்பதுமாக இருந்து வருகிறானோ அப்படியே இறைவனும் உலகைப் படைப்பதும் காப்பதும் கலைப்பதுமாக என்றென்றும் இடைவிடாமல் இதே காரியமாக இருக்கிறான் என்பர். அப்படி, என்றென்றும் இருந்துவரும் உலகில் இறைவனடியாருக்கும் இறைவனைப்போல ஓய்வு கிடையாதன்றோ! ஆகவே ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமிகளும் இறைவன் தொண்டைப் புரிந்துகொண்டு ஞானச்சூரியனாக என்றென்றும் இருந்து வருகிறார் என்றே தோன்றுகிறது. நித்ய ஸூரிகளாக மோட்ச உலகில் இருந்து கொண்டு இருப்பதைவிட இந்த உலகிற்கு இறைத் தொண்டராக வந்து போவது மிகுந்த பேறு அன்றோ! மேலும் நியமன சக்தியில் பிசகாத பேரருளாளனும் இவர் போன்ற சிறப்பாகச் செயல்படுகிற ஞானியை விட்டுவிட மாட்டானல்லவா?

ஆகவே படைப்பு தொடரும்வரை இந்தப் பண்பாளரும் இருந்து கொண்டிருக்கிறார்; இருப்பார் என்று துணிந்து நம்பலாம். இப்படிப்பட்ட பெருங்கருணை உள்ள பெரியவரை வாழ்த்த வயதில்லை என்னாமல் வாழ்த்த மனமிருந்தால் போதும் என வாழ்த்துகிறேன்; "இன்னுமொரு நூற்றாண்டு வாழ்க!" என்று. தொலைவிலுள்ள வண்டு பெரியாழ்வார் பிஞ்சுப் பாதங்களைப்

பார்த்துவிட்டுப் பெருமாளுக்கே "பல்லாண்டு" பாடவில்லையா? அடியேன் இவரின் கொஞ்சும் தமிழையும், மிஞ்சும் வேதாந்தத்தையும் கண்டேன். வாழ்த்துகிறேன்!

அடியாராக இருப்பதைவிட, அடியார்க்கு அடியாராக இருப்பது பெருமை. எனவே சுட்டெரிக்கும் சூரியனாக இல்லாமல் வேதாந்தத்தைச் சொல்லித்தரும் ஞானச்சூரியனாகத் திகழும் ஸுதர்சனர் ஸ்வாமிகளின் அடியான் என்ற பெருமைக்கு ஆசைப்படுகிறேன். 'நம்பையல்" என்று இவரால் நினைக்கப்பட்டாலும் போதுமே! துரோணரிடம் ஆசிபெற்ற ஏகலைவன், அவர் சொல்லித் தராமலே வில்வித்தையைப் பெற்றதுபோல, அருகிலமர்ந்து கேட்காமலேயே அவர் தத்துவக் கருத்தை அறிந்து கொண்டவன் அடியேன். தூரத்தே நெருப்பை வைத்துச் சாரத்தைக் கொடுப்பவன் சூரியன் அல்லவா? உலகில் பஞ்ச பூதங்களுள்ளன. தண்ணீர் கடலாகப் பரந்து கிடக்கிறது. காற்று நம்மைச் சுற்றிச் சூழ்ந்துள்ளது. பூமி விரிந்து இருக்கிறது. ஆகாயமும் அப்படியே. ஆனால் நெருப்பு அப்படிக் கடல்போல, பாலைவனம் போல, ஆகாயம் போலக் கொட்டிக் கிடந்தால் என்னாகும்? பக்கத்தில் போகமுடியுமா? பார்த்து ரசிக்க இயலுமா? கையில் எடுத்துப் பயன்படுத்தலாகுமா?

அதனால்தான் தூரத்தில் சூரியக்கோளத்தை வைத்து ஒரு ஜீவனைச் சூரிய பகவானாக்கி அவனுக்கும் உள்ளே பகவான், உள்ளுறைபவனாக இருந்து வெளியில் நிற்கும் பிராணன் என்று வேதம் சொல்வதுபோல கருணை செய்திருக்கிறான். அதேபோல, அருகில் சென்றால் 'அபசாரப்பட்டுவிட நேருமோ' என அஞ்சியே, தொலைவிலிருந்தே ஸ்ரீஸ்வாமிகளைப் படித்தவன் அடியேன்! அருகிலிருக்கும் தவளையைவிட தொலைவிலிருந்து வரும் வண்டன்றோ தாமரையின் தேனைப் பருகுகிறது!

**கேள்வி—பதில்கள்:**

ஸுதர்சனர் ஸ்வாமி கேள்வி-பதில்கள் 15 சதகங்கள் வந்துள்ளன. பத்திரிகைகளில் கேள்வி-பதில் பகுதி முக்கியமாகி விட்டது இன்று. ஆனால் மிகப் பழங்காலத்திலேயே அப்படி ஒரு பகுதியைத் தொடங்கி, அதையும் மிகப் பயனுள்ள வேதாந்த சந்தேகம் நீங்க, தத்துவம் விளங்க, ஸம்பிரதாயக் கருத்துக்களில் தெளிவு உண்டாகும்படியான முறையில் கையாண்டது அவரின் கருணையே. இதனால் 'தமிழகத்தில் பெருவாரியானோர் வேதாந்த அறிவு பெற்றனர். கேள்வி-பதில் அமைப்பில் எந்த

சிக்கலான செய்தியும் எளிதில் விளங்கும்படிச் சொல்லப்படலாம் என்ற யுக்தியைக் கையாண்டு, பிராசீன நூல்கள், சாஸ்த்திரங்களைப் படித்து மட்டுமே தெரிந்துகொள்ளக்கூடிய சங்கதிகளையும் சாமானியனும் அறியும்படி செய்தவர் நம் ஸுதர்சனர் ஸ்வாமிகளே. இல்லையேல், வேதாந்த சாஸ்திரங்களில் கரை கண்டவன்போல அடியேனைப் போன்றவனும் நம் தரிசனத்தை (வேதாந்தத்தை) அறிந்து நூலெழுதிக் கொண்டிருக்கும் அளவிற்கு வளர்ந்திருக்க முடியாது.

இது முற்றிலும் உண்மை! ஸுதர்சனர் ஸ்வாமிகளின் நூல்களில், ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனத்தில் வரும் கட்டுரைகளில், கேள்வி-பதில்களில் அவர் தரும் சாத்திர, ஶ்ருதி எடுத்துக்காட்டு (பிரமாண) வாக்கியங்களைப் படித்து நினைவில் நிறுத்திக்கொண்டாலேயே போதும், நாமும் சாத்திரம் படித்தவர்களாகி விடலாம். நமக்கு எளிதில் கிடைக்காத அத்தனை பிரமாண நூல்களின் வாக்கியங்கள் அவற்றின் பொருள்கள் நம்மால் அறியப்பட்டுவிடும். அதை வெளியில் பேசினாலேயே, 'இவன் சங்கதி தெரிந்தவன், சரக்கு உள்ளவன்' என்று நம்மைப் பிறர் நினைக்கும்படியாகும்.

தவிர, ஸ்வாமிகளின் தர்க்கம் அவர் படித்த வக்கீல் படிப்பால், பட்டை தீட்டப்பட்ட வைரம் போல, நுண் பொருளையும் உணர்த்தும். அவரால் கண்டிக்கப்படுவோரின் மடத்தனத்தையும், எதிராளியின் வாதத்திலுள்ள பலவீனத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோலக் காட்டிவிடும்.

உதாரணத்திற்கு, 'ஷண்மதஸ்தாபநம் ஆதி சங்கராசார்யரால் செய்யப்படவில்லை' என்ற நிரூபணமே போதும், மேலும் 'கம்பனின் சமயம்', உபநிடதங்கள் 108 ஆ?, தொல்காப்பியப்பாடலின் நானிலக் கடவுள்கள் பற்றியதன் பொருள் போன்றவை அநேகம்.

**கண்டனம் பெற்றோர் பலர்:**

மடாதிபதி முதல் மகுடாதிபதி வரை ஸுதர்சனரால் கண்டிக்கப்பட்டோர் பலர். பிறரைக் கண்டிப்பானேன்? அவர்கள் எதையோ பேசிவிட்டுப் போகட்டுமே! எழுதிக்கொண்டிருக்கட்டுமே! நாம் சரியானதைச் சொல்லிக் கொண்டிருந்தால் போதாதா? கண்டவரிடமெல்லாம் விவாதம் தேவையா? உரிய முறையில் பணிந்து கேட்டால் மட்டுமே கற்றுத்தரவேண்டியதை

அவர்களைக் கண்டனம் செய்யும்போது சும்மா சொல்லிக் கொடுப்ப தாகாதா? இது தேவையா? கருத்து மோதல் ஏற்படுகையில் அவர்கள் கண்டபடி ஏசுவார்களே? அந்த அவமரியாதை எதற்கு? வீண் வம்புதானே இதெல்லாம்; இது எதற்கு? என்று பலர் கேட்டுள்ளனர். நினைத்திருப்பர். ஆனால் ஸுதர்சனர் அப்படி எண்ணாமல், சோர்வடையாமல் பிறர் தினவடங்கச்சொல்லி எல்லாருக்கும் அறியாமை இருள் நீக்கும் ஞானச்சூரியனாகவே இருந்து வருகிறார்.

கீதையில் கண்ணபிரான் "அர்ஜுனா, நீ பிரபலமானவன், உன்னைப் பின்பற்றுவோர் இருப்பர். எனவே தகுதி உள்ளதால் நீ ஞானயோகம் செய்தாலும், தகுதியில்லாதோரும் அதைச் செய்யப் புகுவர். அதனால் தோல்வியுற்று சிரமப்படுவர். ஆகவே தகுதியிருந்தாலும் பிறரை எண்ணி நீயும் கருமயோகமே செய்" என்கிறார். இதன்படி, பிரபலமான சிலர் தவறாகத் தத்துவம் கூறி, தப்பாக மதத்தைச் சொல்லி, ஸம்ப்ரதாயங்களை அறியா மல் உளறினால், அதைக் கேட்கும் பலர் அதையே உண்மை, சரி என நம்பிக்கேடுறுவரே என்று அதைத் தவிர்க்கவே, சரி யானதை அந்தப் பிரபலமானோரும் உணரவே பிறர் தவறாகப் பேசினால், எழுதினால் ஸுதர்சனர் விடாமல் கண்டனம் செய் கிறார். மனம் சோராமல் கண்டிக்கிறார். மற்றபடித் தம் புலமை யைக் காட்டவோ, பிறரைக் குறைவு செய்யவோ இல்லை. முறை தவறாமல் அந்தக் கண்டனங்கள் அமைவதிலிருந்து இதை உணரலாம்.

இம்முறையிலேயே, பிரபலக் கவிஞர் திரு. கண்ணதாசனும் கலைஞர் திரு. கருணாநிதியும் இவர்களைப் போன்றோரும் தவறான கருத்துக்களுக்காகக் கண்டனம் பெற்றனர். மாற்றுமத மடாதி பதிகளும், உள்மதப் பிரிவுக்காரரும் கூடக் கண்டிக்கப்பட்டுள்ள னர். ஸம்ப்ரதாயத் தவறு இருந்தால் கண்டனம் உண்டு. இந் தக் கண்டனமெல்லாம் வேதமத இலக்கணம் கெடுக்கப்படாதி ருக்கவும், பொய்ப்பிரசாரத்தால், நமது வேத வைணவமான விசிஷ்டாத்வைத மதம் புல்லுருவிகளால், புண்பட்டுப் புரை யோடிக் கெடாதிருக்கவும்தான்.

**நெற்றிக் கண்ணைக் காட்டினாலும்:**

தருமிக்குக் கவிதை எழுதித்தந்து, நக்கீரனோடு பாண்டியன் சபையில் வாதாடித் திருவிளையாடல் புரிந்து சிவபிரான் கண்ட பயனென்ன? ஏழைத்தருமி அவமானப்பட்டதும்; நேர்மைக்

கவிஞர் நக்கீரர் வெப்ப நோயால் வெந்ததும்தான் மிச்சம்! வேறென்ன வேதாந்தக் கருத்து அங்கே வெளிப்படுத்தப்பட்டது? ஆனால் தம் ஆசார்யர் பிரதிவாதி பயங்கரம் அண்ணாவுடன் ஸ்வாமி ஸுதர்சனர் செய்த அந்த திரௌபதி சரணாகதி வாதம், சரணாகதி பற்றிய தெளிவைத் தந்த தர்க்கமன்றோ! இதுவன்றோ 'நெற்றிக் கண்ணைக் காட்டினாலும் நேர்மையையே சொல்வேன்' என்பது!

**முரணற்ற பொருள்:**

''வடநாட்டிலிருந்து தமிழ்நாட்டிற்கு வந்த ஏமநாத பாகவதர் மதுரைக்குச் சவால் விட்டார். என்போலப் பாடுவார் யார்? என்றார். ஒருவரும் முன்வந்து போட்டியிடவில்லை. சிவபிரானே வந்து பாட பாணபத்திரர் சீடர் என்றுகூற அந்த ஏமநாதர். சோமநாதரிசைக்குப் பயந்து இரவோடிரவாக ஓடினார். மதுரை வென்றது'' எனப்பட்டது. சரி; சோமநாதர் கயிலைபுரிக்காரரல்லவா? இதுவும் வடநாடுதானே? ஆகவே, மதுரைத் தமிழனின் வெற்றியாக அது எப்படியாகும்? இப்படி எல்லாம் முரண்பாடு இல்லாமல், எக்கேள்வியும் எழுப்பமுடியாமல் தத்துவ விளக்கம் தருபவர்தாம் நம் ஸுதர்சனர் ஸ்வாமி, மேலும் அன்னாரின் தர்க்கம் படித்தால் இப்படியெல்லாம் முரண்பாடுகளைக் கண்டறிந்து கேள்வியும் கேட்க முடியும். தக்கதை ஏற்றுத் தகாததைத் தள்ளவும் முடியும்.

**சாதாரண நிலை:**

சாதாரணமாக நம் மக்களின் நிலை ஏதோ கோவிலுக்குப் போனோம். சாமியைக் கும்பிட்டோம், 'பெண்ணுக்குக் கல்யாணம் ஆகவேண்டும், பிள்ளைக்கு வேலை கிடைக்கவேண்டும், வியாதி போகவேண்டும்' இப்படித்தான் நம் ஆன்மிகநிலை இருக்கிறது. இது ஆன்மிகமா? 'எத்தைத் தின்றால் பித்தம் தீரும்?' என சுயநல நாட்டம் கொண்டு சிவலோக சுகப்பொருள் தேவைக்கு அலைந்தால் அது ஆன்மிகமா? ஒருவரை நான் மிக நேசிக்கிறேன். ஏனெனில் மாதம் பத்தாயிரம் ரூபாய் அவரால் வரும்படி கிடைக்கிறது. அப்படியெனில் என் நேசம், பிரியம் எல்லாம் பத்தாயிரத்திலா, அல்லது அந்த நண்பர் மீதா? இதுபோலவே உடல் சார்ந்த வாழ்க்கை நலம் விரும்பி சாமியைக் கும்பிடுவது லௌகிகமே. ஆன்மிகமில்லை. சரி; இது ஏன்? சரியான அறிவு இல்லாததால். மதம், தத்துவம் பற்றிச் சரியான அறிவே, உடல், ஆன்மா எனப் பிரித்துணர்ந்து ஆன்மநாட்டமாக ஆன்மிகத்தில் ஈடுபடச்செய்யும்!

ஆன்மாவை விடும்; சௌக்கியமாக வாழ நினைப்பது தப்பா? என்று கேட்பவரே அநேகர், தப்பில்லை; ஆனால் அது சாதாரண நிலை. "இருக்கட்டுமே!" என்பவரும் அதிகம் உளர், அதனால் தான் லௌகிக சௌக்யத் தேட்டத்தால் எம்பெருமானை மறந்து பலவற்றைத் தேடி கண்டவரிடமெல்லாம் ஓடிப் போலிகளிடம் மக்கள் மாட்டிக் கொள்கின்றனர். புலனடக்கம் இல்லாத சாமியார்களிடம் சிக்கிச் சீரழிகின்றனர். கண்ணை மூடினால் தியானம்; காவியணிந்தால் துறவி, என்று நம்பி ஆராயாமல் ஆன்மிகமின்றி, தவறான கருத்துள்ள தத்துவமறியாதவரையெல்லாம் 'பெரியவராக' எண்ணி, பரமாத்மா யார், இவ்வுலக வாழ்வு மோட்சம் என்று எதையும் அறியாமல் ஏமாறுகிறோம்.

ஸுதர்சனர் ஸ்வாமியின் நூல்களை, பத்திரிகையை வாசித்தால் அப்படி நேராது; ஏனெனில்—ஜீவன், இயற்கை, இறைவன் பற்றிய உண்மையை உணர்ந்து உலக வாழ்க்கை எப்படி நடத்தப்படவேண்டும் என்றறிந்து வாழத் தெரிந்தவராவோம். சாதாரண நிலையில் சாமி கும்பிடுவதல்லாமல் தத்துவ அறிவோடு பரமாத்மாவைச் சரமணமடைந்து வைதிகமத நடத்தை உள்ளவராக உயர்ந்திடுவோம். எப்படியெனில், ஸ்வாமி எழுத்தில் தத்துவமே மிளிரும். "இந்தக் கோவிலுக்குப்போ, இது நடக்கும், அந்தக் கோவிலுக்குப்போ, இது கிடைக்கும். பணக்காரனாக ஆகலாம், சுகமாக வாழலாம்" என்ற ரீதியில் எதுவும் அவர் நூலில் காண முடியாது. மூடநம்பிக்கைகள், அர்த்தமற்ற சடங்குகள், கோரிக்கைகள் அவர் நூலில் இடம்பெறாது. அல்வா காட்டி ஆள் சேர்க்கும் சொந்த முயற்சி சுதந்திரத்தால், அல்ப சங்கதிகளை அடைவிக்கும் மதிமயக்களிக்கும் எச்செய்தியும் அவரால் எழுதப்பட்டதில்லை. இன்றைய பல ஆன்மிகப் பத்திரிகைகள் மேற்படி லௌகிகச் செய்திகளிலேயே உழலுகின்றன. பகுத்தறிவும், புலமையும் பகவானை மகிழ்விக்க நம் கடமையைச் செய்ய வேண்டுவதும் தத்துவ விளக்கமாகவே ஸுதர்சனரால் அறிவுறுத்தப்படும். சாதாரண நிலையில் உள்ள நம்மை இது எம்பெருமானிடம் சேர்க்க உதவும் ஞானஒளியைத் தரும். இதனாலேயே ஸுதர்சனர் ஸ்வாமிகளை ஞானச்சூரியன் என்றேன்.

**மாட்டிக்கொள்வது ஏன்?**

இன்று செய்தித்தாளையும், தொலைக்காட்சியையும் பார்த்தால் தினம் ஒரு துறவியின் கைதுப்படலம் தெரிகிறது. இறைவன் பற்றியும், பூஜை பற்றியும் பேசினாலேயே சாமியார் என்று கூறி விடுகின்றனர். மைவித்தை, பில்லி, ஏவல், சூனியம் எனப்

பிழைக்க ஏதோ ஒரு சமாசாரத்தைக் கைக்கொண்டவரையும் சாமியார் என்று சொல்லிவிடுகின்றனர். வெள்ளுடை, காவி, பலரால் வேறுபடுத்திப் பார்க்கப்படுவதில்லை. முறைப்படி காவி வாங்கித் துறவேற்றவரா? என்றும் யாரும் பார்ப்பதில்லை. இதனால் ஆன்மீகம் இறைவாழ்க்கை, மடம், துறவி என்ற எல்லாமே ஐயப்படுகிறது. ஏனெனில் தத்துவ அறிவுக்குறைவு, சரியான தத்துவ அறிவின்றியே பல மடாதிபதிகளும் மாட்டிக்கொண்டு விடுகின்றனர். சாத்திரப்படிப்பு, ஒழுக்கம் தரும் சரியான தத்துவ அறிவே மனமடங்கச் செய்யும். இது இல்லாமலே எல்லாரும் கெடுகின்றனர். அதாவது சாமியார்களும், அவர்களைச் சார்ந்தவர்களும் அழிகின்றனர். சைவம் உண்டு. வைணவம் உண்டு. ஒன்று ஆகமப்படி, அடுத்தது வேதப்படி, இரண்டையும் 'இந்துமத'க் கணக்கில் வைத்தாலும்கூட இரண்டும் கலந்த ஒரு மதம் புதிதாக உண்டாகி இருக்கிறதே இதையல்லவா, இந்துமதப் பிரதிநிதித்துவம் வகிப்பதாகக் கருதுபவர் பெருகிவிட்டனர்! ஒரே சமயத்தில் சைவராகவும் வைணவராகவும் எப்படி ஒரு மடாதிபதி இருக்க முடியும்? நாயன்மார்கள் விஷ்ணுவை வழிபட்டதில்லை. ஆழ்வார்கள் சிவனைத் தொழுததில்லை. இரு தெய்வங்களையுமே பரமாத்வாகக் கும்பிடும் ஒரு கலப்படமதத் தத்துவம் தவறன்றோ!

இதை ஸுதர்சனர் ஸ்வாமியைப்போல விளக்கியவர் யார்? இப்படித் தவறான தத்துவம் உள்ள மதம் எப்படி உண்மையாகும்? அதைச்சார்ந்த மடம் எப்படிச் சரியானதாகும்? ஆகவே தான் இந்துமதப் பிரதிநிதித்துவம் அதற்கு எப்படி ஏற்றதாகும்? எனக்கேட்கிறேன். சரியான தத்துவம், சரியான மதக் கருத்து இல்லாததால் அந்த சாமியார்கள் மாட்டிக் கொள்கிறார்கள். நம் ஸ்வாமியின் நூல்கள் நமக்கு உண்மையான வேத அடிப்படை உள்ள வைணவ மதத்தைச் சரியாக போதிப்பதால் நாம் ஒரு போதும் புலனடங்காமலோ, சினமடங்காமலோ சிக்கிக்கொள்ள மாட்டோம் என்கிறேன்.

**அபசாரம்!**

நாம் எங்கேனும் எதிலேனும் சிக்கிக்கொள்ள நேருவது இரண்டு காரணத்தால், ஒன்று பகவதபசாரம். இரண்டு பாகவதாபசாரமாகும். திருப்பதிப் பெருமாளைத் திரைக்குப்பின் தொட்டுத் தடவிப்பார்ப்பது, வெளியில் வந்து 'அம்பாள்சிலை' என வதந்தியைப் பரப்புவது, புராதனமண்டபத்தை இடிக்க, வாஸ்து அமைப்பை மாற்ற கீலகத்தனம் செய்வது பகவதபசாரமாகாதோ? ஸ்ரீமந்நாராயணனே உபாயம், உபேயம் என்றிருக்கும் ஹைதரா

பாத் த்ரிதண்டி ஜீயரை 'வழிப்போக்கர், திருப்பதிக்குத் தொடர்பில்லாதவர்' என்பது பாகவத அபசாரமில்லையோ!

"வியாழக்கிழமை திருப்பதிப் பெருமானுக்கு திருஷ்டி கழிப்பர். 'கண் திறந்து விடல்' என்பர். அன்றைக்குத் தவறு செய்பவரைப் பெருமாள் பிடித்துக்கொடுத்து விடுவார்' என்று சொல்லக் கேட்டுள்ளேன். ஸ்ரீமந் நாராயண சின்ன ஜீயரிடம் அபசாரப்பட்டவர் மாட்டிக்கொண்டார். பகவத் பாகவத அபசாரப்பட்டவரும் வியாழக்கிழமை சிக்கியதைப் பார்த்தால் தெய்வச்செயலாகவேபடுகிறது. தெய்வக்குரலில் ஒரு மூந்தையப் பெரியவர், ராமானுஜர் அரசியலில் தலையிட்டார். ராஜசிட்சைக்கு இலக்கானர் என்று அபஸ்வரமாக ஒலித்தார். இன்று இந்தப் பெரியவர் மாட்டிக்கொண்டது எப்படி? இவர்களின் போக்கும், மதமும், தத்துவமும் சரியில்லை என்பதை 50 ஆண்டுகளுக்கும் முன்பிருந்தே துணிச்சலுடன் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் சுட்டிக்காட்டி வந்துள்ளது. ஸுதர்சனரின் சுபமான தரிசனம் அன்றோ! ஞானச்சூரியனை அவர் எவ்வளவு காலம் இவர்களின் அஞ்ஞானத்தை எடுத்துக்காட்டியும் பொதுஜன வெகுஜனப் பத்திரிகைகளுக்குப் புத்தி வரவில்லையல்லவா? இன்று மாட்டிக் கொண்டவரின் அந்தரங்க நடவடிக்கைகளையும் மாய்ந்து மாய்ந்து எழுதுகிறார்கள்! அபசாரம் ஆபத்தாகி விட்டது!

**போலிகளின் காரணம்:**

"இரக்கப்படத் தகாதவரிடம் இரக்கப்படாதே அர்ஜுனா!" என்கிறார் கீதாசார்யன். 'தெரிந்தும் தப்புச்செய்கிறவன் பேதை!" என்கிறார் வள்ளுவர். பேதையாகவும் வைதிக மதத்துரோகியாகவும் இருப்பவரை எடுத்துக்காட்டிப் போலிகளின் முகத்திரையைக் கிழித்து வரும் நம் ஸுதர்சனர் முழு வாழ்க்கை வாழ்ந்து முழுப்பயனை நம் தரிசனத்திற்கு அளிக்க வேண்டுமென்றால், பகவத் செயலால் பறக்கவும் விடப்பட்டுப் பிடிக்கவும் பட்டிருக்கும் பாஷண்டிகளிடம் இரக்கம் கூடாது. பரமத கண்டனமிட்ட தேசிகர் திருவுள்ளப்படி பகவத், பாகவதாபசாரத்தைத் தொடர்ந்து செய்யும் துரோகிகளுக்குப் பரிந்து பேசக்கூடாது. 'இந்துமதம்' என்ற சொல் எந்த வேத, இதிஹாச, புராணசாத்திரங்களிலுமில்லை. அந்தப்பெயரை ஏற்றதால் தான் கண்டவரும் உள்மதக் காரனாகி, 'இந்துமதத்திற்கே நானே பாதுகாவலன்' என்றாகிவிட நேர்ந்தது. வேத அடிப்படையான இந்து மதத்தில் (இப்பெயரையே ஏற்றாலும்) வேதப்புறம்பான கொள்கையுடையோர் எப்படி முதன்மை வகிக்கமுடியும்?

சாத்விகம் என்ற பெயரில் ஏமாளித்தனத்தால் விட்டுவிட்டோம்! அதனால் போலித்துறவிகள் மாட்டிக்கொண்டால் நம் மதத்திற்கு இழுக்கு என எண்ணி உணர்ச்சிவசப்படத் தேவையில்லை. 'அஹிம்சை' என்பது கையாலாகாத் தனமில்லை. விதி வேலை செய்கிறது என விட்டு விடுங்கள்; பகவத் செயல் என்று பார்த்துக் கொண்டிருங்கள். குற்றவாளிகள் தண்டிக்கப்படட்டும். இங்கே போலித்தனம் புகுந்த காரணமே, ஷண்மத ஸ்தாபனம் தான். ஆதிசங்கரர் செய்யாத இதனால், 'ஏகப்பட்ட தெய்வங்கள் இந்து மதத்தில்' என்ற நிலை ஏற்பட்டது. தத்துவம் தெரியாதோர் மத அடிப்படையான வேதாந்தம் புரியாதோர் அதிகப்பட்டனர். போலித்துறவிகள் காவிப்போர்வையிலே புறப்பட்டு விட்டனர். இது ஸுதர்சனரை நன்கு படிப்பதால் மட்டுமே புரியும். புரிந்து கொண்டால் மட்டும் அன்னாரின் தொண்டு பயனுறாது. நாமும் ஸுதர்சனர் போலே உண்மை விளங்க, உயர உழைத்தாகவேண்டும். ஒரு பூனை இருந்தது. அது ருத்திராட்ச மாலையணிந்து ''இன்று முதல் தவம் செய்யப்போகிறேன்'' என்றது. ஓர் ஆற்றங்கரையில் போய்க் கைகளைத் தூக்கிக்கொண்டு நின்றது. பறவைகளைப் பிடிக்கவில்லை. மீன்களைச் சாப்பிடவில்லை. உடனே, 'இந்தப்பூனை நல்லவர், இவர் ஆதரவிலிருந்தால் மற்ற பூனைகளிடமிருந்து தப்பலாம்' என்றெண்ணிய எலிகள் அந்த ருத்திராட்சப் பூனையிடம் ஒப்பந்தம் செய்து கொண்டன. ''எலிகளே! நான் உங்களைப் பார்த்துக்கொள்கிறேன்'' என்று பூனையும் அபயப்பிரதானம் செய்தது. ''ஆனால் என்னைத் தினமும் ஆற்றங்கரைக்குக் கொண்டு போய்விடுவது உங்கள் பொறுப்பு; ஏனெனில் நான் வயதானவன்'' என்றது. எலிகள் சம்மதித்தன. தினமும் அப்படியே நடக்க, தினமும் எலிகள் குறையலாயிற்று. பூனை அவற்றைப் பிறர் அறியாமல் தின்றதுதான் காரணம். இதை யோசித்த டிண்டிகன் என்ற எலி அதை அறிய தினமும் பூனையுடன் சென்றது. அடுத்தநாள் அதுவும் கபளீகரமாகிவிட்டது. சிந்தித்த எலிக்கூட்டத்தலைவன் கோலிகன் ''எலிகளே! இனி, பூனையின் பின் போகாதீர். அது தவசியன்று, ஏனெனில் தவசியின் மலத்தில் மயிர் இருக்காது'' என்றது. எலிகள் வராத போலித் தவசிப் பூனை மீண்டும் கைகளைத் தூக்கியபடி ஆற்றங்கரையில் நின்றது.

இதுபோன்ற மனிதர்களையும், போலிமதக் கருத்துக்களையும் புரியவைத்து அதுவே புருஷோத்தமன் தொண்டு என வாழ்ந்து வரும் ஸுதர்சனர் ஸ்வாமிகளே உண்மைப் பெரியவர். பாலை

யும் தண்ணீரையும் பிரித்தருந்தும் அன்னப்பறவை போன்று, இன்று இருக்கும் மதக்கருத்துக்கள், சடங்குகள், வழிபாடுகள், தெய்வங்கள் எனக் கருதப்படுபவையும், மூட நம்பிக்கைகளும், மடக்கருத்துகளும், ரகசியப் பூஜைகளும், மட்டமான சடங்குகளும், தெய்வமல்லாதவையும் சேர்ந்ததான இந்துமதத் தொகுப்பிலிருந்து விசிட்டாத்வைதத்தைப் பால் போன்று பிரித்துத்தரும் பரம ஹம்ஸராகவே ஸுதர்சனரை நான் பார்க்கிறேன், இல்லாவிடில் 'இந்துமதம்' என்ற பெயரில் எல்லா மடத்தனத்தையுமன்றோ, நாமும் ஏற்றுப் புகழ்ந்து உணர்ச்சிவசப்பட்டுப் பேசிக்கொண்டிருப்போம்?

**ஆறு வழிபாடுகள் :**

'ஷண்மதம்' என்ற பெயரில் உள்ளவை குட்டி தேவதை வழிபாடுகளே, எவருக்குப் பிரியமோ செய்து கொள்ளட்டும்.

**ஆறு தரிசனம் :**

ஆறு தரிசனம் எனப்படுகிறவை நியாய, வைசேஷிக, சாங்கிய, யோக, பூர்வ, உத்தர மீமாம்சைகளாகும், இதை மோசடி செய்து ஷண்மதமாகக் கணவன் சிவன், மனைவி சக்தி, மூத்தபிள்ளை கணேசன், இளையபிள்ளை முருகன், சூரியன், விஷ்ணு என அறுவரையும் பரம்பொருளாக வைத்து ஆறுமதம் என்பதை எவ்வளவு பெரிய பித்தலாட்டம் என ஸுதர்சனர் தானே நிரூபித்தார்! இதை வாதத்திற்காக ஏற்றாலும், அப்போது ஒருவன் ஏதோ ஒரு மதத்தைக் கடைப்பிடித்து ஒரு தேவதையைத் தானே வழிபடலாம்? ஆறுமதத்தையும் அனுஷ்டித்து ஆறு தேவதைகளையும் எப்படி ஒருவரே வணங்க முடியும்? அப்படிப்பட்ட பித்துக்குளித்தனமே இன்று பெருவாரி மக்களால் அனுசரிக்கப்படுகிறது.

அதனாலேயே போலிமதத் தலைவர்கள்! அதனாலேயே நடைபாதைக் கோயில்கள்! அதனாலேயே அசிங்கங்கள்; ஆகமங்கள் புறக்கணிக்கப்படல்! மதம் மனிதனைப் பண்பில் உயர்த்துவதற்கு பதில் பணம், மட்டமான பிரபலத்வம், புகழுக்கு அலையச்செய்து விடுவதும் அதனாலேயே! இதனால் நாத்திகர் ஒட்டுமொத்தமாக ஆத்திகத்தைக் கேலிசெய்ய இடமாகிறது.

தனிமனிதரிடம் ஒழுக்கமின்மையால் ஆத்திகம் அழிந்து விடாது! ஆனால் பழிக்கப்படும். ஆன்மிகம் இருக்கவேண்டும். இதனடிப்படையில் எழும் மதத்தலைவர் வாழ்வாங்கு வாழவேண்டும். வழுவி விழக்கூடாது. இதற்காகவே சரியான தத்துவம்

பிரசாரமாக வேண்டும். அதற்காகவே, ஸுதர்சனர் எழுத்தும் கருத்தும் இவர் போன்ற பெரியோர் கருத்துக்களும் பரவச் செய்யப்படவேண்டும். அதற்கு வைஷ்ணவ ஸுதர்சனம் போன்ற பத்திரிகைகளும், ஸுதர்சனர்ஸ்வாமி போன்ற நேர்மை, புலமை இருமைகளும் நிறைந்த பேனு உடையவராகக் கிளம்பிட வேண்டும்.

**மோருள்ளவரை சோறிட முடியுமோ?**

ஓர் அம்மையார் இருந்தார். ஒரு பிரம்மச்சாரி ஆழாக்கு அரிசியைத் தந்து சோருக்கி இடக்கோரினுன். மோரை வாங்கிக்கொண்டுபோய்ச் சாப்பிட உட்கார்ந்தான். கையோடு இருந்த இலையைப் போட்டுக் கொண்டான். அம்மாள் சோறிடச் சோறிட மோரை விட்டுக்கொண்டு சாப்பிட்டான். இன்னும் மோர் இருக்கிறது; சோறிடுங்கள் என்று கேட்டுக்கொண்டே கொடுத்த ஆழாக்கரிசிச் சோற்றைவிட அதிகமாக உண்டுவிட்டு, பிரம்மச்சாரி, மோர் அதிகமாகிவிட்டது இன்னும் கொஞ்சம் சோறிடுங்கள் எனக்கேட்டான். அதற்கு அந்த அம்மாள், "உன் மோர் தொலையாததாக இருக்கிறது. "மோருள்ளவரை சோறிட முடியுமோ?" என்ருள்—என்று எம்பெருமானுர் காலக்ஷேபத்தில் சாதிப்பாராம். அதுபோலே, ஸுதர்சனர் ஸ்வாமியின் பெருமை. தொண்டின் சிறப்பு பிரம்மச்சாரி வைத்திருந்த மோர்போல மிக அதிகமாக அளவின்றி இருக்கிறது. அதற்கு ஈடாக என்னுல் புகழ்ந்துரைக்க இயலுமோ? அவர் பெருமை, சாதனை அடியேனுல் முழுதுமுரைக்க முடியாதது.

**முடிவாக:**

உண்மையான நம் தத்துவம், மதம் மக்களிடையே நன்கு பரவ, ஸுதர்சனர் ஸ்வாமியின் நூல்கள் பரவலாக மக்கள் வாசிக்கும்படிச் செய்யவேண்டும். அவர் கருத்துக்களை, வாதங்களை, சங்கரரும் வைணவமும், சங்கரர் ஷண்மத ஸ்தாபநம் செய்தாரா? ஸுதர்சனர் 1008 கேள்வி—பதில் அடங்கிய நூல், சங்ககாலத் தமிழர் சமயம், கம்பனின் சமயம் போன்றவற்றை மக்களிடையே பிரசாரம் செய்தாக வேண்டும். சரியான கருத்தால் சரியான மதம் பின்பற்றப்படும். போலிகளை மக்கள் புரிந்து கொள்வர். நேரில் வந்து உரையாற்றி உந்நத புருஷரென நம் காலத்தில் வாழும் ஒரு தலைசிறந்த வைணவரை, ஞானச்சூரியனை, நம் ஸுதர்சனர் ஸ்வாமிகளைப் பணிந்து நேரில் ஆசிபெற முடியாவிட்டாலும் அடியேனின் கருத்திற்கும் இடமளித்த சதாபிஷேக வைபவக் குழுவினருக்கும், ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீஸ்வாமிக்கும், தலைவர் அவர்களுக்கும், மற்றும் பங்குபெற்ற பெரியவர்களுக்கும் எனது நன்றியும் வணக்கமும் உரித்தாகுக! வணக்கம்! ஹரி: ஓம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனர்

ஸ்ரீவைஷ்ணவ ஸபா, திருநின்றவூர்.
[S. ரகுவீரன், மதுராந்தகம்]

என்ன தவம் செய்ததிந்தத் தமிழகம்?
இனிய ஸுதர்சன ஸ்வாமி தரிசனம்!
காவிரியின் கரையதிலே உதயமே!
காலமெல்லாம் வைணவத்தின் இதயமே!!

விளம்பரங்கள் ஏதும் இல்லை உண்மையே!
வீண்பகட்டு ஆடம்பரம் பொய்ம்மையே
காணவொண்ணுக் கற்புடைய இதழதே!
கணவனையே காத்து நின்ற பெண்மையே!

காற்று வீசும் திசையிலாடும் காலத்தில்,
கலங்கரையாய் நிலைத்து நிற்கும் ஸுதர்சநம்.
ஊற்றுக் கண்ணுய், ஊறுகின்ற ஓடையாய்,
உருவெடுத்த கட்டுரைகள் ஆயிரம்!

சதகமாகத் தொகுப்பில் தோன்றும் விடைகளே!
சத்தியமாய் ஐயங்களை நீக்குமே.
பதக்கம் போன்ற பழமையான தத்துவம்
புதுக்கியவர் புத்தூர் வாழும் ஸுதர்சனர்.

செய்திகளும் சேர்க்கும் ஊக்கம் என்றும் என்றுமே,
செந்தமிழ் நாடதனில் சேரும் என்றும் செல்வமே,
வைணவமே வைணவமே, வளர்ச்சிபெறும் செல்வமே,
வைஷ்ணவமாய் வாழும் புத்தூர்ச் செல்வமே.

வில்லிபுத்தூர் அந்த நாளில் செய்ததை
திருச்சிபுத்தூர் இந்த நாளில் செய்யுமே;
விஷ்ணுசித்தன் போலே இந்த க்ருஷ்ணனும்
வைஷ்ணவத்தை ஸுதர்சநத்தால் காக்கிருன்.

பல்லாண்டு! பல்லாண்டு! பாடுவோம்
பலகோடி நூருயிரம் பாடுவோம்;
சொல்லாண்டு சுவையாண்ட ஸுதர்சனர்
தொண்டுக்கே பல்லாண்டு பாடுவோம்.

ஸ்ரீவைஷ்ணவ ஸபா.

Sri

Srimathe Ramanujaya Nama:

# A WRITER NONPAREIL

[Koil Athan VIJAYA RAGHAVACHARYA SWAMY, Srirangam]



"Reading maketha full man, writing an exact man; and conference a ready man" — Byron.

Writing requires not only knowledge, but a high degree of precision. The writer has to understand the concepts precisely, choose the appropriate words and present in an elegant fashion. The diction should be facile and easily comprehensible to his readers. The communication must properly convey his ideas. Any reader should understand the ideas in the same way he has conceived. A classical writing should be able to stand the test of time. It is such a host of stringent requirements that accounts for the paucity of good writers.

The Srivaishnavite literature, be it in sanskrit or in a blend of sanskrit and tamil (manipravala), has an ancient origin. It abounds in technical terms and archaic expressions. A proper understanding is possible only through a systematic education in the guru-sishya form. Our present lifestyle does not favour such a learning. There are many Srivaishnavas who are eager to know the doctrines and the treasured annotations of the revered acharyas. They need a simplified commentary for all the texts of the Purvacharyas. It is with this lofty goal that Sri Sudarsanar Swamy started writing five decades ago.

I find it a great pleasure to say a few words about the octogenarian scholar whose middle name is dynamism. He has acquired the knowledge in the traditional manner. He was blessed with a good infrastructure-the one created by his father, a visionary of vaishnavism. The press, the Journal and the small publications of the father guided the budding author. The Journal was, and is, having

several dimensions. The ancient treasured texts of purvacharyas had to be preserved and simplified. The doubts arising in the minds of srivaishnavas had to be clarified. The misinterpretations by others were to be authentically rejected. The journal, aptly named Srivaishnava Sudarsanam, covered all these aspects. The job of a publisher requires boundless patience, hard work and fastidiousness in error-correction. The tangible reward may be trivial; but the self-satisfaction is immense.

Our revered author did not confine his exercise to the monotonous publication in the beaten track. He excel in his innovations in the field. The subscription to Tamil letter corresponding to the special consonants of Sanskrit is a novel technique adopted by Sudarsanar. The earlier publishers made use of the Grantha lipi in the Tamil texts to distinguish the different vargas. But the Grantha lipi becoming obsolete, the introduction of an easy alternative notation was inevitable. The author's familiarity with the subscripted form used in Mathematics helped him to devise a similar approach in the texts also.

Whenever a text is printed with one or more commentaries, the cross-references to the phrases in the text and the commentaries were made, earlier, using symbols. The correlation was cumbersome. Sudarsanar, again with his experience in Mathematics, introduced the usage of subscripted alphabets for such referencing. Such a rational approach made the editions more attractive to the readers.

The unique feature in the publications of Sudarsanar is the appendix consisting of all the quotations with their meaning and the reference to the source. His editions are absolutely error-free, as error-detection is his second instinct. Simplicity is the hallmark of his lectures and writings. He has to his credit several thousand pages of publications, the Bhagavat Gita with the Bhashyam of Ramanuja and a detailed explanation, being the magnum opus. He has further plans to publish a lot more!

I Pray Lord Ranganatha and His Consort to bestow Their graces upon him for a long Healthy and Happy Life.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# மெய்யடியேன் விண்ணப்பம்

[கோயில் ஆத்தான் விஜயராகவாசார்ய ஸ்வாமி ஸ்ரீரங்கம்]



"ஸ்வாத்யாம் ஸாக₃ரஶுக்தி மத்₄யபதிதம் ஸந்மௌக்திகம் ஜாயதே" (ஸ்வாதீ நக்ஷத்திரத்தன்று கடலில் ஒரு சிப்பியில் விழும் தண்ணீர்த்துளி ஒரு செழுமுத்தாக ஆகிறது) என்ற சிறப்புடைய சோதி நன்னாளில் திரு அவதரித்த நம் புத்தூர்ப் பெருந்தகையை அறியாதார் இலர்; அவர் பெருமையைப் பல பெரியோர்கள் பலவாறு பேசியிருப்பினும் ஸத்தாலாப₄ார்த்த₂மாக அடியேனும் சிறிது விஜ்ஞாபிக்க விரும்புகிறேன்.

க்₃ரந்த₂ ஸம்ரக்ஷணமே தமது லக்ஷ்யமாகக் கொண்ட ஸ்வாமி காலவ்யவதா₄நமில்லாமல் தமது வாழ்நாள் முழுவதும் அதற்கே அர்ப்பணித்துப் பல பூர்வாசார்ய க்₃ரந்த₂ங்களை அழியாமல் பதிப்பித்ததோடன்றி, அவற்றை யாவரும் புரிந்துகொள்ளும் வகையில் எளிய விவரணங்களையும் அருளிவருவது குறிப்பிடத்தக்கது. அச்சுப்பிழைகளைக் களைந்து, நாம் எளிதாகப் படித்து மனத்தில் பதித்துக்கொள்ளும் வகையில் பல குறியீட்டு முறைகளைக் கையாண்டு ப்ரசுரம் செய்வதற்கு இவர் மேற்கொள்ளும் ஶ்ரமத்தை அத்துறை வல்லுநர்களே அறிவர். பல பெரியோர்களிடம் தாம் அடிபணிந்து கேட்ட அர்த்த₂ விஶேஷங்களை நாமும் அநுபவிக்குமாறு புத்தகவடிவில் அநுக்₃ரஹித்தமைக்கு நாம் என்ன கைம்மாறு செய்யப்போகிறோம்?

இவரது புலமை மந்த₃மதிகளான அஸ்மத₃ாதி₃கள் பேசற்பாலதன்று. வேத₃ாந்த க்₃ரந்த₂ங்களில் ஸ்வாமியுடைய பாண்டி₃த்யத்தை அறியவேண்டுமானால் இவரத 'ப₄க₃வத் கீ₃தை', 'கைவல்ய ஸித்₃த₄ாஞ்ஜநம்' முதலிய க்₂ரந்த₂ங்களைக் காணலாம். இவருடைய தமிழ்ப்புலமை பற்றி நோக்க வேண்டுமானால் 'சங்க காலத் தமிழர் சமயம்', 'கம்பனின் சமயம்' போன்ற புத்தகங்களைப் படித்துப் பார்க்கலாம்; ஸம்ப்ரத₃ாய ஸித்₃த₄மான அர்த்த₂ங்களில் ஸ்வாமியினுடைய அவக₃ாஹநத்தை 'வார்த்தாமாலை' போன்ற நூல்களைப் படித்துப் பார்க்கலாம்; தனிஶ்லோகியின் எளிய விவரணத்தோடு கூடிய பதிப்பு அன்னாரது ராஸிக்யத்துக்கு அத்தாட்சியாகும்; இவரது வாத₃நைபுண்யம் 'ஸ்ரீதத்வவிசாரம்' முதலானவற்றில் ஸுஸ்பஷ்டம்; பூர்வாசார்யர்கள் வகுத்த வழியினின்று விலகாமை இவரது அருளிச்செயல் விவரணங்களில் கல்வெட்டாக்கப்பட்டுள்ளது. இங்ஙனம் சொன்னது ஊற்றத்தைப் பற்ற; அனைத்து கு₃ணங்களும் அனைத்து நூல்களிலுமுண்டு.

எளிமையான இவருடைய எழுத்துக்குக் காரணம் ஸ்வப₄ாவத்திலேயே இவர் எளியவர். யாவரும் சென்று கிட்டிப் பேசலாம். ப்ரமாணங்களுக்கு பரதந்த்ரமானவர். மனம், மொழி, மெய் ஆகிய முக்கரணங்களாலும் தூயவர். ஆர்ஜவத்துக்கு இருப்பிடமானவர். ஒரு நூற்றாண்டு காலத்திலும் பூர்த்தி செய்ய முடியாத ஒருபெரும் ப்ரமாண ரக்ஷணத் திட்டத்தைத் தீட்டிய இவரது தந்தையார் காட்டிய வழியிலே பிறழாமல் சென்று அரும்பெரும் தொண்டாற்றி நம்போல்வாரை வாழ்வித்த இவ்வெண்பது வயது இளைஞர் இன்னுமொரு நூற்றாண்டு இன்புற்று வாழ்ந்து உலகத்தை உய்விக்கவேணும் என்று தி₃வ்யத₃ம்பதிகளைப் பிரார்த்தி₂க்கிறேன்.

ஸ்ரீ:

# ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமி வைபவம்

[ரு. அ. தேவராஜன், 5, ராமஸ்வாமி தெரு, சென்னை-1]

"எம்பெருமானார் தரிசனம் என்றே இதற்கு நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார், அம்புவியோர் இந்தத் தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த அந்தச் செயல் அறிகைக்கா" என்ற மணவாள மாமுனிகளின் திருவாக்கு உலகப் பிரசித்தம். அநாதியான ஸ்ரீவைஷ்ணவ மதத்தை வேதகால ரிஷிகளும், ஆழ்வார்களும், ஆசார்யர்களும் ப்ரகாசப்படுத்தியிருந்தாலும், பகவத் ராமானுஜரால் மட்டுமே ஸ்ரீவைஷ்ணவம் உலகெங்கும் தழைத்தோங்கியது. ஆகவே இது "பகவத் ராமானுஜ ஸித்தாந்தம்" என்றும், "ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயம்" என்றும், "திருமால் நெறி" என்றும், "விசிஷ்டாத்வைதம்" என்றும் உலகில் கொண்டாடப்படுகிறது.

பல்லாயிரம் ஆண்டுகளாகப் பரமனான ஸ்ரீமந்நாராயணனையே முழு முதற்கடவுளாகப் போற்றி, வணங்கி, வழிபட்டுவரும் ஸ்ரீவைணவம் இடைக்காலத்தில் பல இடையூறுகளால் குன்றியது. அக்காலத்தில் அவதரித்தருளிய நம் எம்பெருமானார் இந்த "திருமால் நெறியை" யாரும் அசைக்கமுடியாதபடி "ஸ்ரீபாஷ்யம்" முதலான நவ க்ரந்தங்களால் நிலை நாட்டினார். அதனாலேயே விசதவாக் சிகாமணியான நம் மணவாள மாமுனிகளும்,

"ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாள்களிலும்
வாழ்வானநாள் நமக்கு மண் உலகீர்—ஏழ்பாரும்
உய்ய எதிராசர் உதித்தருளும் சித்திரையில்
செய்ய திருவாதிரை" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

ஸ்வாமி எம்பெருமானார் காலத்துக்குப்பிறகு ஸ்ரீபராசர வேதவியாச பட்டர், நஞ்ஜீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளைலோகாசார்யர், வேதாந்த தேசிகர், ஸ்ரீமத்வரவரமுநிவரர், போன்றோர் திருவவதரித்து ஸ்ரீவைஷ்ணவ மதத்தைப் போற்றி வளர்த்தனர். பிறகு 19-ம் நூற்றாண்டில் பல மகான்கள் திருவவதரித்து நமது வைணவ சமயத்தை மேலும் மெருகுபடச் செய்தனர். அவர்களில் கீர்த்தி மூர்த்திகளான ஸ்ரீ உ. வே மஹாவித்வான் பெருமாள் கோயில் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமியும், ஸ்ரீ உ. வே காரப்பங்காடு வேங்கடாசார்யர் ஸ்வாமியும் ஜகத் ப்ரசித்தமானவர்கள். தேசிக ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த ஸ்ரீ உ. வே உத்தமூர் வீரராகவாசார்ய ஸ்வாமி, ஸ்ரீ உ. வே மதுராந்தகம் வீரராகவாசார்ய ஸ்வாமி போன்ற மஹா வித்வான்களும் பகவத் ராமானுஜ தர்சனத்தைப் போற்றி வளர்த்தனர். ஸ்ரீவைஷ்ணவ மடாதிபதிகளில் குறிப்பாக ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீவானமாமலை சின்ன கலியன் ஸ்வாமி, ஸ்ரீமத் அஹோபிலமடம் 42-வது பட்டம் இஞ்சிமேடு அழகிய சிங்கர் ஸ்வாமி இருவரும் மஹா வாக்மிகளாய் வைணவத்தை வளர்த்தனர்.

இவர்களுக்கு ஒப்பாக நம்மிடையே ஒளி வீசிக்கொண்டு இருப்பவர் நம் புத்தூர் ஸ்ரீ உ வே எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி. ''ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமி'' என்றே உலகம் போற்றும் நம் ஸ்வாமி எம். ஏ. பி எல்., படித்து, தம் வாழ்நாளை திருமால் நெறிக்கு அர்ப்பணித்த மகான். தமது வழக்கறிஞர் படிப்பையும் வைணவ சமய ஞானத்தையும், நம் சமயத்தையும், வைணவத் திருக்கோயில்களையும் ஆக்ரமிப்பிலிருந்து பாதுகாக்க முழுமையாகப் பயன்படுத்தியவர். ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமியை முதன் முதலாக அடியேன் 1969-ம் ஆண்டு சென்னை முத்தியால் பேட்டையில் அடியேனுடைய அகத்துக்கு அருகில் உள்ள 500 ஆண்டுகளுக்கும் பழமையான ''ஸ்ரீகிருஷ்ணன் கோயில்'' ராஜகோபுர ஸம்ப்ரோக்ஷணத்தில் சேவித்தேன். அடியேனுக்கு ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமியின் அதி கம்பீரமான திருவுருவமும், நெற்றியில் பளிச்சிடும் திருமண் காப்பும், திருமழிசைப்பிரான் போன்ற நாவன்மையும், திருவாழி ஆழ்வான் போன்ற ஆற்றலும் மிகவும் பரவசம் ஊட்டியது. ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமியும் அடியேனைக் குளிரக் கடாக்ஷித்தருளினார்.

பிறகு ''ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்'' பத்திரிகையை அடியேனுக்கு மாதந்தோறும் அநுக்ரஹித்தருளினார். அடியேனுடைய பல ஸம்ப்ரதாயக் கேள்விகளைத் தமது பத்திரிகையில் தகுந்த பதில் விளக்கங்களுடன் வெளியிட்டருளினார்.

ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமியின் பல அரிய தொண்டுகள் வைணவ சமுதாயத்திற்கும், உலகிற்கும், சனாதன தர்மத்துக்கும் ஒப்பற்றவையாக ஒளிர்கின்றன. ஸ்ரீஸுதர்சனர் 1008, சங்கரரும், வைணவமும், சங்ககாலத் தமிழர் சமயம், ஸ்ரீதத்வ விசாரமும் நிர்ணயமும், சாரீரககாரிகாவளீ விவரணம், ஸ்ரீபகவத் கீதா பாஷ்ய விவரணம், ஸ்ரீராமாயண தனிஸ்லோக விவரணம், ஆசார்ய வைபவ மஞ்ஜரி போன்றவை ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமியின் மிகவும் போற்றத்தக்க நூல்களாகும். ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமி அச்சிட்டு வெளியிட்டுள்ள நாலாயிரதிவ்யப்ரபந்த வ்யாக்யானங்கள், ஸ்ரீரங்கராஜஸ்தவம், ஸ்ரீகுணரத்ந கோசம், ஸ்ரீவசனபூஷணம், முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஆசார்ய ஹ்ருதயம் மூலமும், வ்யாக்யானங்களும், வார்த்தாமாலை மூலமும் விளக்கமும் போன்றவை வைணவ உலகின் கிடைத்தற்கரிய பொக்கிஷங்கள் ஆகும். ஒரு வைணவப் பல்கலைக்கழகமாக ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமி விளங்கி வருகிறார்.

ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமி ஒரு மாஞானி. தமது செல்வம், உடல், ஆவி, கல்வி இவற்றை வைணவ சமயத்துக்கு அர்ப்பணித்துள்ள மகான். ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமி ஸ்ரீவிஷ்ணுபரத்வ ஸ்தாபகர்களில் தலைமை பெற்றவர் ஆவார். அவர் பல்லாண்டு பல்லாண்டு அரோகதிடகாத்ரராக இன்னும் ஒரு நூற்றாண்டு எழுந்தருளியிருந்து ஸ்ரீவைஷ்ணவ சமயத்தையும், திவ்யதேசங்களையும், ஸ்ரீவைஷ்ணவ நிதியையும் ரக்ஷித்தருள அடியேன் பெரிய பெருமாள் பெரிய பிராட்டியார் திருவடிகளில் பிரார்த்திக்கிறேன்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீசைல அனந்தார்ய மஹா குரவே நம:

# ராமாநுஜ த்ரயம்

[உபந்யாஸக ஸிம்ஹம் தி. அ. கி. (கபிஸ்தலம்)
ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி, ஸ்ரீரங்கம்.]



ஸ்ரிய:பதியான எம்பெருமான் ஸகல சேதந உஜ்ஜீவநார்த்த மாக வேதங்களை வெளியிட்டும், ஆழ்வார், ஆசார்யர்களை அவ தரிப்பித்தும், தானே நேரே அவதரித்தும், இன்னும் பல படிக ளாலே ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தை ப்ரவர்த்தனம் செய்தருளி ஞன். ஸ்ரிய:பதியான எம்பெருமான் நிர்ஹேதுக க்ருபையாலே அவதரித்து, ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்குத் தூணுக விளங்கி, அதி அற்புதமான கைங்கர்யங்களைச் செய்துவரும் புத்தூர் ஸ்ரீ உ. வே எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்காரின் சதாபிஷேக வைபவத்தில், அடியேனுடைய கைங்கர்யமாக "ராமாநுஜ த்ரயம்" எனும் இக் கட்டுரையை சமர்ப்பித்து ஸத்தை பெறுகிறேன்.

## 1. ராமாநுஜன்—கண்ணன்

"நாட்டில் பிறந்து படாதனபட்டு மனிசர்க்கா நாட்டை நலி யும் அரக்கரை நாடித் தடிந்திட்டு" என்னும் படியும்,

பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம் |
தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே ||

என்னும் படியும், திருமந்த்ர த்வய சரமஸ்லோக அர்த்தங்களாகிற நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறைஞான மூர்த்தியாய் விளங்கு பவன் கண்ணன். பலராமனின் அநுஜனுக அவதரித்ததால் ராமாநுஜனுகிருன் கண்ணன்.

## 2. ராமாநுஜர்—எம்பெருமானுர்

"மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து, எங்கள் மாதவனே கண்ணுற நிற்கிலும் காணகில்லா உலகோர்கள் எல்லாம் அண் ணல் இராமாநுசன் வந்து தோன்றிய அப்பொழுதே நண்ணரு ஞானம் தலைக்கொண்டு நாரணற்காயினரே!" என்னும்படி அவ தரித்தருளினுர் ராமாநுசர்.

"பேதையர் வேதப் பொருளிதென்றுன்னிப் பிரமம் நன்றென்று
ஓதி மற்றெல்லாவுயிரும் அஃதென்று, உயிர்கள் மெய்விட்டு
ஆதிப்பரனேடு ஒன்ருமென்று சொல்லும் அவ்வல்லலெல்லாம்
வாதில் வென்ருன் எம்இராமாநுசன் மெய்ம்மதிக்கடலே"

என்றார் அமுதனார். வண்மையினாலும், தன் மாதகவாலும், மதிபுரையும், தண்மையினாலும் இத்தாரணியோர்கட்குத் தான் சரணாய் உண்மை நன்ஞானமுரைத்தான் இராமாநுசன். பொய்யைச் சுரக்கும் பொருளைத் துரந்து இந்தப்பூதலத்தே மெய்யைப் புரந்தான் இராமாநுசன், மண்ணின் தலத்துதித்து, உய்ம்மறைநாலும் வளர்த்து, விண்ணின் தலை நின்று வீடளித்து, எய்த்த உலகிருள் நீங்க, மாயன் அன்று தெய்வத் தேரினில் செப்பிய கீதையினை,

ஆதி மத்யாவஸாநங்களிலே ஶங்கர, பாஸ்கர, ஶ்ரீதர ஆனந்த தீர்த்தாதிகள் போலே தத்வத்தை உபதேசிக்கவேணும் என்று உபக்ரமித்து நடுவே தம்முடைய குத்ருஷ்டி பக்ஷத்துக்கு அநுரூபமாகச் சில அர்த்தங்களைக் கலந்து, பூர்வோத்தரவிருத்தமாகச் சொல்லுகையன்றிக்கே, யதாவஸ்திதார்த்தாவபோதகமாய் உபநிஷத்துக்களோடே ஏகவாக்யதாபந்நமாகக்கொண்டு கீதாபாஷ்யத்தை லோகத்திலே தத்வ விவேக ஶூந்யரான ஜநங்களுக்கு, தத்வஹித புருஷார்த்தங்களை விசதமாகத் தெளியும்படி ஶ்ரீகீதாபாஷ்யத்தைச் செய்தருளினார் இராமாநுசராம் எம்பெருமானார்.

### 3. ராமாநுஜர்—புத்தூர் வக்கீல் ஸ்வாமி

''கீதையின் செம்மைப் பொருள் தெரிய'' என்பதற்கு மேற்குறிப்பிட்ட பிள்ளைலோகம் ஜீயர் திருவாக்குப்படி, எம்பெருமானாருக்குக் கூறிய கீதாபாஷ்யச் சிறப்புக்களனைத்தும் இவருடைய கீதா வ்யாக்யானத்தில் தெள்ளத் தெளிவாகவும், சில இடங்களில் ஆழ்வார்கள், ஆசார்யர்கள் ஶ்ரீஸூக்திகள், ஸம்ஸ்க்ருத வ்யுத்பத்திகளோடும், சிற்சில இடங்களில் வாதப்ரதி வாதங்களை நிரஸித்துத் தெளிவாக்கியும் உள்ள சிறப்பு, வார்த்தைகளில் அளவிட முடியாது. எம்பெருமானார் அருளிய கீதாபாஷ்யத்திற்குப் பல பெரியோர்கள் தமிழில் அர்த்தம் எழுதியிருந்தாலும், தங்களுடைய உள்ளுணர்வை அங்கங்கே வெளிப்படுத்தி எழுதினர். ஆனால் ஸ்வாமி (ஆழ்வார் ஆசார்யர்களின்) நெறி தவறாமல் எடுத்துரைத்த பண்பாளர். எம்பெருமானை மாயன், அதிமாநுஷ சேஷ்டிதன் என்றெல்லாம் கூறுவதுண்டு அதை அடியோங்கள் நேரில் சேவித்தது இல்லை. முன்னுரையில் கேட்டறிவதுண்டு. ஆனால் நம் ஸ்வாமி சுமார் 8000 பக்கங்களுக்குமேல் விசதமாக, (தெளிவாக) கீதார்த்தத்தை வெளியிட்ட மாண்பு நம் போல்வார் செய்யமுடியாத அதிமாநுஷ கார்யமேயாம்.

இன்னும் பலபடியாக விவரிக்கலாம். விரிவுக்கஞ்சி 'ராமாநுஜ த்ரயம்' எனும் இக்கட்டுரையை நிறைவு செய்கிறேன், ஸ்வாமி இன்னும் பலப்பல ஆண்டுகள் அரோகதிடகாத்திரத்தோடு எழுந்தருளியிருக்கவேணும் என்று திவ்யதம்பதிகள் திருவடிகளில் பிரார்த்தித்து நிற்கிறேன்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஜ்ஞாநி வைபவம்

[மதுரகவிதாஸன் திருப்புல்லாணி
P. ஸௌந்த3ரராஜய்யங்கார், ஸ்ரீரங்கம்]



ஶ்ரிய:பதியாம் ஸர்வஸ்வாமியான ஸர்வேஶ்வரன் நிரதிஶயாநந்த3மயமான ஸ்ரீவைகுண்ட2த்திலே நித்யநிர்மலஜ்ஞாநாதி3 கு3ணங்களையுடையவனாய், தன்னுடைய திருவுள்ளத்தையநுஸரித்த ஸ்வரூபம், ஸ்தி2தி, ப்ரவ்ருத்தி ஆகியவற்றையுடையரான நித்ய ஸூரிகளாலே எப்போழுதும் பரிசர்யை செய்யப்படும் திருவடித்தாமரைகளையுடையவனாய்க் கொண்டு எழுந்தருளியிராநிற்க, லீலாவிபூ4தியிலுள்ளார். அவர்களைப்போலவே தன்னையநுப4விக்க ப்ராப்தியுண்டாயிருக்க இழந்து கிடக்கிறபடியைக் கண்டு மிகவும் கலங்கினவனாய், இவர்களை உஜ்ஜீவிப்பிக்கையில் (நன்கு வாழ்விக்கையில்) உண்டான நசையாலே கரணகளேபரங்கள் (இந்த்3ரியமும் ஶரீரமும்) அற்றவர்களாய் மிகச் சுருங்கின ஜ்ஞானமுடையவர்களாயிருக்கிறபடியாலே அசித்துக்குத் துல்யராய், அதனாலேயே போ4க3மும் மோக்ஷமுமற்றவர்களாய்க் கிடக்கிற த3ஶையிலே கரணகளேபரங்களைக் கொடுத்து ஜ்ஞாநவிகாஸத்தையும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ஶக்தியையும் உண்டாக்கி இந்த ஜ்ஞாந கார்யமான த்யாஜ்யோபாதே3யவிவேக பரிகரமாக (விடவேண்டியதை விடுதல், பற்ற வேண்டியதைப் பற்றுதல் என்ற விவேகத்துக்கு ஸாத4நமாக)வுள்ள வேத3த்தைக் கொடுத்தான். பிறகு மந்வாதி3ரிஷிகளுக்கு அந்தர்யாமியாய் நின்று சேதநருடைய தே3ஹத்துக்கு அநுகு3ணமான த4ர்மங்களைச் சொல்லும் ஶாஸ்த்ரத்தை வெளியிட்டருளினான். அந்த ஶாஸ்த்ராப்4யாஸம் அநேகயோக்3யதாஸாபேக்ஷமாய் சிரகால ஸாத்4யமுமாய் (நீண்ட காலத்தில் ஸாதி4க்கப்படக்கூடியதுமாய்) இருக்கையாலே து3ஷ்கரமாயிருக்கிறபடியைத் திருவுள்ளம்பற்றி தாத்3ருஶயோக்3யதாநிரபேக்ஷத்வம், அல்ப காலஸாத்4யத்வம் என்பவற்றாலே ஸுகரமுமாய், சேதநருடைய தே3ஹாதிரிக்தமான ஆகாரத்தை விஷயமாகக் கொண்ட திருவஷ்டாக்ஷரப்3ரஹ்ம வித்3யையைத் தானே வெளிப்படுத்தினான். அவ்வளவிலும் கார்யகரமாகாமையாலே ஓலைப்புறத்திற் செல்லாத ராஜ்யத்தை எடுத்துவிட்டுச் செலுத்திக் கொள்ளும் ராஜாக்களைப்போலே (ஓலையில் எழுதப்பட்ட தன்னுடைய ஆணையை மதிக்காத சிற்றரசனை படையெடுத்துச்சென்று நீக்கி விட்

டுத்தானே நேரிடையாக ஆட்சி செலுத்திக்கொள்ளும் ராஜாக்களைப் போலே) நாமே சென்று திருத்தக் கடவோமென்று ராமக்ருஷ்ணாத்யவதாரமுகேந இவர்களிருக்கிறவிடத்திலே தான் வந்து திருத்தப் பார்த்தவிடத்திலும் ஒருவரும் திருந்தக் காணாமையாலே விஜாதீயரான நம்மாலொருபடியாலும் இவர்களைத் திருத்தப் போகாதாயிருந்தது; இனி ஸஜாதீயரைக் கொண்டே காரியம் கொள்ளுவோமென்று அறுதியிட்டு ஆழ்வார்களையும் நாதமுனிகள் தொடங்கி மணவாள மாமுனிகள் முடிவுள்ள பூர்வாசார்யர்களையும் அவதரிப்பித்தான். ஆழ்வார்கள் திவ்யப்ரபந்தங்களை வெளியிட்டார்கள். பூர்வாசார்யர்கள் அவற்றுக்கு வ்யாக்யானங்களை அருளிச்செய்தார்கள். அந்த வ்யாக்யானங்களைத் தங்களுடைய பேச்சாலும் (ப்ரவசநத்தாலும்) எழுத்தாலும் விளக்கிக்காட்டி அந்தச் செல்வத்தை நமக்கு வாரி வழங்கி வருகிறார்கள் புத்தூர் ஸ்வாமி போன்ற மஹான்கள்.

இத்தகைய ஜ்ஞானிகள் தங்களை த்வேஷிப்பவர்களையும் அபகாரம் செய்பவர்களையும் உள்ள சேதநர்களையும் கூட இவர்கள் த்வேஷிப்பதில்லை; "என்னுடைய அபராதத்துக்கு அநுகுணமாக, 'கரணகளேபரப்ரதாநம் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ஶக்தி ப்ரதாநம் என்கிற ஸ்வபாவங்களால் ஸாமாந்யகாரண பாவத்தையுடையவனான ஈச்வரனாலே ப்ரேரிக்கப்பட்டவர்களாய் இந்தச் சேதநர்கள் த்வேஷிக்கிறார்கள், அபகரிக்கிறார்கள்' என்று அநுஸந்தித்து அவர்களிடத்திலும் கூட ஸௌஹ்ருத்பாவத்தை (நல்லெண்ணத்தை) யுடையவர்களாகவிருக்கிறார்கள். தேஹேந்த்ரியங்களிலும் தத்ஸம்பந்திகளிலும் என்னுடையது என்ற புத்தியற்றவர்கள், தேஹாத்மாபிமானரஹிதர்கள். அதனாலேயே ஸாங்கல்பிகங்களான (மனத்தின் விகாரத்தால் வருபவைகளான) ஸுகதுக்கங்களில் விகாரரஹிதர்கள். ஸ்பர்ஶ ப்ரபவங்களான (தேஹத்தின் விகாரத்தால் வருபவைகளான) தவிர்க்க முடியாதவைகளான ஸுகதுக்கங்களில் பொறுமையுடையவர்கள். யத்ருச்சையாகக் கிடைக்கும் ஏதோவொரு தேஹதாரணத்ரவ்யத்தால் ஸந்தோஷமடைபவர்கள். எப்பொழுதும் ப்ரக்ருதிவியுக்தனான ஆத்மாவை அநுஸந்தித்துக் கொண்டிருப்பவர்கள். நியமிக்கப்பட்ட மன எண்ணங்களையுடையவர்கள். அத்யாத்ம ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட அர்த்தங்களில் த்ருடமான நிஶ்சயத்தையுடையவர்கள். எம்பெருமானிடம் ஸமர்ப்பிக்கப்பட்ட புத்தியையுடையவர்கள். ஸுதர்ஶனர் போன்ற இந்த மஹான்கள் நம் துர்கதியே பற்றாசாக நம்மை ஸ்வீகரித்து வாழ்விக்கிறார்கள். இவர்களுடைய ஸ்வீகாரமே நமக்கு உஜ்ஜீவநஹேதுவாகிறது.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் வரவர முநயே நம:

# ஸுதர்சனரின் அளவற்ற பெருமையில் ஒரு சிறிதை விண்ணப்பிக்கிறேன்

[டாக்டர் மதி. ஸ்ரீநிவாஸன்,
திருவல்லிக்கேணி, சென்னை-600 005.]



ஸுதர்சனருடைய நூற்பணியில், கீதா வ்யாக்யானம் சிகரங்களுக்கெல்லாம் சிகரமாகக் கால காலங்களுக்கெல்லாம் நின்று, நம் ஸ்ரீவைஷ்ணவ ஸமுதாயத்துக்குச் சிறந்த வழி காட்டியாகத் திகழும் முதன்மையது. கீதாபாஷ்யத்தை ஆசார்யன் மூலமாய் நேரில், காலக்ஷேப கோஷ்டியில் ஸேவிக்கப் பெறும் வாய்ப்புப் பெற்ற அடியேன் மனத்தே கிடந்து அலைக்கழித்த ஐயங்களை, அவருடைய அகலஉரை நீக்கிற்று; மேலும் கீதா ச்லோக உரைகளுக்குக் கீழே தரப்பட்டுள்ள மிக விரிவான விளக்கக் கட்டுரைகள், ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தைப் பற்றிய பாட நூலாகவே விளங்குகின்றன. இப்படிப் பட்ட மேன்மையான "கீதா வ்யாக்யானம்" இதுவரை வெளி வந்ததே இல்லை; இனி வரப்போவதும் இல்லை. அதிலும் குறிப்பாக ஏழு, எட்டாம் அத்தியாய விரிவுரைகள் இரு கலைகளில் வளர்ந்த வேறுபாடுகளுக்கு அடியான விஷயங்களை, அடியேனுக்கு மிகவும் துல்லியமாகத் தெளிவுபடுத்தின. தேசிகனின் தாத்பர்ய சந்திரிகையை ஸாமாந்யர் கைக்கெட்டும்படி, எளிமைத்தமிழில் எடுத்துக் கூறியுள்ள ஸுதர்சனரின் எழுத்துத் திறன், அடியேனை அவருடைய ஏகலைவன் ஆக்கிற்று. அவரது ஆய்வு நூலான "கைவல்ய ஸித்தாஞ்ஜனம்" பல தெரியாத புதிர்களை அவிழ்த்து, ஸாரார்த்தத்தைப் பிழிந்து தந்துள்ளது. இதுபோலவே, "திருச்சந்தவிருத்த வ்யாக்யான" நூலில் சங்க

நூல் ஏற்றுமைப்பகுதி அவரது கைவண்ணத்தின், மிகச்சிறந்த முத்திரைப்பகுதி ஆகும். சங்க காலத்தில் வைணவம் முதன்மை பெற்றதை அவரைப்போல எடுத்துக்காட்டி நிறுவ, வேறு எவ ராலும் இயலாது. பகவத்விஷயப் பதிப்புகளுக்கு அவர் மேற்கொண்ட கடின உழைப்புக்கு, பல்லாயிரம் தடவை யனமாரப் போற்றினாலும் நிறைவுறாது.

......

ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்த, ரஹஸ்யார்த்த, ஸம்ப்ரதாய சாஸ்திரங்களை, மந்தமதிகளும் கற்றுணர்ந்து, அவற்றின் வழி நிற்க, அவரது நூல்கள் மிகவும் பயனுடையன. 'ஸ்ரீவிஷ்ணுசித்தவிஜயம்', 'கம்பனின் சமயம்', 'சோலைமலைக் குறவஞ்சி' முதலிய பல நூல்களும், 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்ச னம்' வெளியீடுகளாக உலவி, மிகுந்த பயன் அளித்தன. உபநிஷத், ஸூக்த வ்யாக்யானங்கள், ஸ்ரீவைஷ்ணவ பரமான விரிவுரைகளுக்கு மிகவும் துணை செய்வன. எல்லாவற்றுக்கும் மணிமகுடமாக அமைந்தது— ஸுதர்சனர் நிலைநிறுத்திய 'ஸ்ரீதத்வ ஸர்வஸ்வம்' என்னும் மிக அரிய பொக்கிஷம். ஸ்ரீவைஷ்ணவத்துக்கு, அதிலும் சிறப்பாக உலகாரியன் வகுத்த நெறிக்கு, முதன்மை வழக்குரைஞராக நின்று வாதிட்டுப்பெற்ற வெற்றிகள் உலகறிந்தவை. அவருடைய நுண்மாண் நுழைபு லச் சிறப்பும், தர்க்கவாத ஞானமும் நம் ஸ்ரீவைஷ்ணவப் பொலி விற்கு அலகில்லா வளர்ச்சியை அளித்துள்ளன. இப்படி யெல்லாம் மகத்தான ஸ்ரீவைஷ்ணவ கைங்கர்யம் செய்துள்ள ஸ்வாமி சதாபிஷேகம் கண்டருளுவதை எண்ணி, அடியோங் கள் இறும்பூது அடைகிறோம்.

பல்லாண்டு! பல்லாண்டு! பல்லாயிரத்தாண்டு!
பலகோடி நூறாயிரம்!!

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# வாழ்த்துரை—வசனகவிதை

குமாரவாடி சே. இராமாநுஜாசாரியர்
ஆசிரியர், திருமால், சென்னை-4.

சுதர்சனரே! இதனை அடியேனது 'வசனகவிதை' என இசைந்து ஏற்றருளப் பணிவுடன் பிரார்த்திக்கிறேன்.

"புத்தூர் ஸ்வாமி" எனப் பொலிவுடன் திகழும் நீவிர் பிறந்த ஊருக்கு நாளும் பெருமை சேர்க்கின்றீர்!

தந்தை வழி நின்று ஸ்ரீவைஷ்ணவ இதழ் தந்து, ஸுதர் சனப் பெயர்பெற்று, திங்கள் ஞாயிருகி ஒளிர்கின்றீர்!

திருமால் நெறிக்குத் தம்மை முழுதுமாக அர்ப்பணித் துச் சீரிய நற்பணியால் எவ்வகை எதிர்ப்பிலும் நிமிர்ந்து நிற்கின்றீர்!

பூருவர் நூல்களின் பதிப்பினில் சிந்தை தோய்ந்து, நேர் வழியில் திருத்திப் பணி புரிந்து வைணவ உலகுக் குப் பெருந் தொண்டாற்றி வருகின்றீர்!

வைணவ எதிரிகள் வாய்மடங்க, கையடங்க, கேள்வி- பதில் எழுதிக் குவித்த வித்தகரே!

கல்விக் களஞ்சியம் ஆகி, வைணவ ஆதார நூல்களை வள்ளல் என வழங்கி வருகின்றீர்!

ஏறுபோல் நடந்து எண்பதைக் கடந்து வீறுடன் விளங்குபவரே!

ஆயிரம் பிறை கண்ட வீர வைணவரே!

'இல்லாள்' அகத்திருக்க இல்லாதது 'ஒன்றில்லை' என அமைந்த உமது தர்மபத்னியுடன் பல்லாண்டு பல்லாண்டு வாழ்க!

எம்பெருமானாரின் ஓர் ஆயிர விழாவினைச் சீருடன் நடத்தி சிகரமெனத் தோன்ற இன்னும் ஒரு நூறு பிராயம் புகுவீராக!

பொலிக! பொலிக! என இதயம் கனிந்து திருமால் அடியார் குழாம் உம்மை வணங்கி வாழ்த்துகிறது.

நித்யஸ்ரீ: நித்ய மங்களம்!

ஸ்ரீ:

# ஸுதர்சன ஸூர்யன்

[எஸ். மைதிலி அம்மாள், சேலையூர், சென்னை-73]

அந்தகாரம் எனும் ஓர் இருள் விலகி
ஆதவன் உலகெங்கும் ஒளி வீசி
இமையோர் போற்றிட விழிப்புறச் செய்வதுபோல்
(வைணவத் திருத்தலங்கள் நூற்று எட்டுள்)
ஈரிருபதாம் சோழமதில் உயர் அரங்கந்தனில்
உலகுஉய்ய ஒரு மா தவத்தால் இருவர்
புத்தூரின்கண் ஒன்றிஈன
ஊரெல்லாம் ஓங்கி, பரதத்துவத்தை உபதேசித்த
எம்பெருமானர் போல் ஸ்ரீஸுதர்சன ஆழ்வார்
ஏற்றமிகு வைணவத்தை முன்னிறுத்த அவதரித்தார்.
ஒரு மாணகி இரு நிலம் மூவடி மண் வேண்டி
ஓர் ஆனைக் கொம்பொசித்து இருபயனாய்
ஓர் ஆனைக் கோள் விடுத்து
உலகை ஈரடியால் ஒடுக்கி ஒரு பாரளந்தானை
ஒருமுறையும் இருளிரியச் சுடர்விழிகள்
முப்போதும் இமைத்தலின்றி
நாற்றிசையும் ஓங்கிடவே அஞ்சன
வண்ணனை நான்முகனும்
முக்கண்ணனும் துதிபாடும் இருடீகேசனை ஒரு மாமணாளனை
அரக்கி மூக்குடன் இரு செவி நீக்கி
மும்மத மால் யானைக் கிரங்கி
நானிலமும் போற்ற ஐவாயரவொடு
ஆறுசடை முடியனும் வியப்ப
மரமேழ் எய்தவனை ஆரு வளவில்
ஐவர்க்காய் அன்று ப்பாரதம்
கை செய்த நாறகரச் செல்வனை மூவுருவாய்த் திருமடந்தை
மண்மடந்தை இருபாலும் திகழ ஒன்றி நின்று
எழுகடல் வாய் மாண்டவனை மீட்டவனை
எண்ணற்ற சீரிய ப்ரபந்தங்களின் எளிய
விவரணங்களுடன் பதிப்பித்து
வைணவம் தழைத்தோங்க முயற்சிக்கும்
ஸ்ரீஸுதர்சன ஆழ்வாரின் சதாபிஷேகம்
இனிதே சிறப்புற நடைபெற்று
இன்னும் நூற்றாண்டு விழாவும் அநுக்ரஹிக்க
அரங்கனைப் ப்ரார்த்திக்கிறேன்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# புத்தூர்ப் புனிதர் ஸ்ரீ உ. வே. எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி சதாபிஷேகப் பாராட்டு மடல்

[ஸ்ரீ ஆண்டான் ரங்கமன்னார் சபை, விருத்தாசலம்]



**புத்தூர் எனப்புகன்றால் போற்றும் புதுமைக்கு**
**மெத்த அமைவிடம் மேலோர்கள்—சத்தார்**
**பணிசெய்து பாரில்நல் வாழ்வளித்(து) எங்கும்**
**அணிசெய் இடமென்பர் ஆய்ந்து.**

**சத்தியப் பொருளை நாளும் சாற்றிடும்**
**புத்தூர்ப் புனித! வாழ்க வாழ்கவே.**

வைணவத்தின் சொத்தாய் வகையாய் அமைந்திட்ட, மைவண்ணத் தண்ணலின் வாய்மொழியாய்ச், செய்வண்ண, ஆழ்வார்கள் தங்கள் அருளிச்செயல்களையும், வாழ்வாகக் கொள்ள வகையுடனே, தாழ்வின்றிக் காணும் வளஉரையும், கண்ணூர் குறிப்புடனே பேணும் முறையினில், பீடுடனே வாணாள் பயனுறவே பாங்காய்ப் பதிப்பித்துத் தோன்றும் மயர்வற நல்ல மனத்தால் வியனுலகில் யாவரும் இன்புற்றே ஏற்ற எளிமையுடன் மேவிட எண்ணியே மேலான ஆவி அன்ன 'ஸுதர்சனம்' ஆண்டு பலவாக மன்னும் வழியில் வெளியிட்டே எண்ணிய வாழ்வின் குறிக்கோளில் மாலவனின் பேரருளில் ஆழும் கிருஷ்ணஸ்வாமியே! சூழும் நலமுடனே நானிலத்தில் பல்லாண்டு நீவிர் வளமுடனே வாழ்க மகிழ்ந்து.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஒரு மஹநீயரின் கடிதம்

[பேராசிரியர் சொல்லழகர் Dr K. A. மணவாளய்யங்கார்
பெருங்களத்தூர், சென்னை-63]



ஸ்ரீமான் உ வே மஹாவித்வான் புத்தூர் அட்வகேட் எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி திருவடிகளில் அடியேன் கே. ஏ. மணவாளன் தண்டன் ஸமர்ப்பித்துச் செய்யும் விண்ணப்பம். உபயகுசலோபரி.

சுமார் 60 வருடங்களாக நம் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்துக்கு எழுத்தாலும் பேச்சாலும் தேவரீர் ஆற்றிவரும் பெரும் தொண்டுகளுக்கு ஈடு இணையாக யாரையும் குறிப்பிடமுடியாது. தேவரீர் கேள்வி—பதில் மட்டுமே கூடப் பெரிய ஸாதனையாகும். மற்றும் பூர்வாசார்யர்களுடைய வ்யாக்யானங்களுக்கு தேவரீர் எழுதியுள்ள தமிழ் விளக்கவுரை எல்லோரும் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் மிகவும் சிறப்பாக உள்ளதை ஸ்ரீவைஷ்ணவ உலகமே பாராட்டுகிறது.

அடியேன் குறிப்பாக பகவத்கீதை, திருப்பாவை மற்றும் திவ்ய ப்ரபந்த வ்யாக்யான விளக்கங்கள், ஸ்தோத்திர நூல் உரைகளை தேவரீர் புத்தகங்களை இருமுறை படித்துக் குறிப்பு எடுத்துதான் 40 வருடங்களாக உபந்யஸித்து வருகிறேன். அடியேன் ஞானாசார்யரான ஸ்ரீ உ வே மகாவித்வான் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் நூல்களும் தேவரீருடைய நூல்களும்தான் நம் ஸம்ப்ரதாயம் கொடிகட்டிப் பறக்க உதவுகின்றன. இது உண்மை. அடியேன் தேவரீர் பெருமைகளை, ஸாதனைகளை வாய்மணக்கப் பேசி ஸ்வரூபம் நிறம்பெற பாக்கியமில்லை. காரணம் தேக நிலை. நடக்க சிரமம். மனமெல்லாம் விழாப்பந்தலில் உள்ளது. பல்லாண்டு பல்லாண்டு நம் எம்பெருமானார் தர்சனம் தழைக்க தேவரீர் நித்யஸ்ரீர் நித்யமங்களமாக எழுந்தருளியிருக்க வேணும் என்று பெரியபெருமாள் பெரியபிராட்டியார் திருவடிகளில் பிரார்த்தித்துக் கொள்கிறேன். சென்னை அடையாறில், அடியேன் தேவரீர் 81-வது பிறந்தநாளைக் கொண்டாடப் போகிறேன்.

ஸ்ரீ:

# ஸுதர்சனரின் எண்பதாம் ஆண்டு நிறை நாள்

# முன்னிலைப் பரவல்

[ அரங்கப்பெருமான் ராமாநுஜதாஸர், M.A.,
முதலியார்பேட்டை, பாண்டிச்சேரி-4 ]



கயலுகள் காவிரி வியன்பெரு(1) நாப்பண்(2)
ஆயிரம் அருந்தலை பயின்று(3) கவைநா(4)
அருந்திறல் அரவின் பாயற் பள்ளி(5)
திருவொடு சேரும் அரங்கன் ஆணையான்
மாசறு சீனி வாசர் மகவாய்
விண்டு சித்தர் விண்மீன் சோதியில்
தோன்றித் தொன்னூல்(6) பலவுங் கற்றே
அன்பும் பண்பும் இன்பும் ஆகிய,
பொருந்திய மேலோர் விரித்த பொருவரு(7)
இல்லறம் என்னும் நல்லறம் ஏற்றுத்
தந்தையின் நெறியில் தளராது நின்றே
திறல்மிகு திகிரியோன் எனும்பேர்(8) இலங்க(9)
'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்ப
ஆகலின், அகலிரு ஞாலம்(10) முழுதும்
மருளெனும் இருள்கெடத் தெருள்கொள நிறீஇய(11)
செயற்கரு நினது செய்கை தன்னால்
நிறைபுகழ் நிறுத்த படிமை யோயே!(12)
செயற்கருஞ் செயல்தான் யாதெனில், கூறுதும்
பல்லா யிரத்துப் பல்பகுதி கொண்ட
பாமரர் அறியாப் பரம்பொருள் ஆய்வாம்
விட்டுச் சித்த விசய மெனுநூல்,
கெடலருஞ் சிறப்பின் கீதையின் விளக்கமும்,

---

(1) அகன்ற பெருமையுடைய, (2) நடுவில், (3) நெருங்கி, (4) பிளவுபட்ட நாவையுடைய, (5) அரவினது பாய் ஆகிய படுக்கையில், (6) வேத முதலாம் நூல், (7) ஒப்பற்ற, (8) ஸுதர்சனர் என்னும் பெயர், (9) விளங்கவும், (10) அகன்றபெருமை பெற்ற உலகம், (11) நிறுவிய, (12) தவத்தை உடையவரே.

உயிரின் இயல்பிற் கொவ்வா கூறும்
கீழாம் பேற்றினைக் கேடற ஆய்ந்தே
சாற்றுங் கேவல சித்தாஞ் சனமாம்(1)
மாற்றருஞ் சிறப்பின் மருள்தபு(2) நூலும்,
வேதப் பொருளை விளக்கவே வியாசன்
தொகுத்த பிரம சூத்திர நூலுக்(கு)
ஒப்பிலாப் பாடிய உரைதனை இயற்றிய
இராமா நுசனார் உரைதனக்(கு) எளிய
விவரணம் விரித்த மேவரு(3) நூலும்,
மாற்றார்(4) மறுக்கும் நுண்விசிட் டத்துவித
விசயம்(5) என்னும் வடபுல நூலும்,
அரக்கர் அசுரர் என்னும் வலிமிகு
மடவோர் இயக்கும் மாண்பில் ஏட்டில்
வேத நெறிசார் வைணவ மதத்தைச்
சிறுமதி படைத்த சிற்றறி வாளர்
பழித்துப் பொய்யார் சரிதம் பேசும்
வாதம் மறுத்துக் கூறுசு தரிசன
சதகம் என்றோர்(6) மருளறு நூலும்,
தென்கலை வடகலை தம்மிற் பேதம்
இல்லென மறுக்கும் ஏதிலோர் தம்மை
வாயடங் கச்செய் வாதத்து வென்ற
சிறந்தோங்கு சித்தோ பாய விசயமும்(7)
வினைசார் பில்லா விளங்கிய அறிவனும்(8)
மேதகு மேலோர்(9) போற்றிப் புந்திகொள்
நாலா யிரத்து நலமார் பனுவலும்,
வடகலை தென்கலை சாத்திரம் வல்ல
நுண்மாண் நுழைபுலம் வாய்ந்த வல்லோர்(10)
செய்த சிறப்பார் உரைநூல்(11) யாவும்
பிழையிலாப் பொலிவுடன் அச்சிற் பதித்து
வளங்கெழு திருவொடு வையகம் முழுவதும்
உளங்குளிர் இன்ப முவந்திடச் செய்தும்,
இன்னும், ஈடிலாச் சங்க காலச்

---

(1) கைவல்ய ஸித்தாஞ்சனம், (2) மருளை அழிக்கும், (3) அதிகரித்தற்கு அரிய சாரீரக நூல், (4) மாறாகக் கூறுபவர். (5) விசிஷ்டாத்வைத விஜயம், (6) என்ற ஒப்பற்ற, (7) ஸித்தோபாய விஜயம், (8) அகில ஹேயப் பிரத்தியநீகன்; இறைவன். (9) சான்றோர், (10) பூர்வாசார்யர்கள், (11) திவ்யப்ரபந்தவுரைகள்

சான்றோர் சமயம் வைணவ மேனச்
சாதித் தெழுதிய சீர்மிகு நூலும்,
கவியிற் சிறந்த கம்பனின் சமயம்
வைணவ மேயென விதந்து கூறும்
ஆனுப் பெரும்புகழ்(1) அமைந்த நூலும்
சிற்றறி வினர்க்கும் தெற்றெனத் தோன்ற
மதியின் றகைப்பு(2) விதியுளி அகற்றி(3)
எல்லேயில் சிறப்பின் தொல்லோர் பாடிய
பரிபாட் டென்னும் பரிபாடல் விளக்கம்,
அவற்றெடு வடபுலத் தொருசார் ஆரியர்
தம்முள், திருமகள் மாயோன் இருவரும்
இருபெரு பிரமம் எனமதி மயங்கிக்
கூறியஅக் கூற்றை வடமொழி நூல்கொடு
வளமார் உரையெனு(ம்) மழுவால் மடித்துச்
செருக்கடக் கியசீ தத்துவ(4) நூலும்,
பஞ்சம பட்சசத ஙிந்தனே(5) நூலும்,
பீடுடைப் பூருவர் பலர்புகழ் விரவும்
ஆசா ரியச்சிறப்(பு) அறையும் நூலும்(6)
இறையின் இயல்பும் உயிரின் இயல்பும்
வழியின் இயல்பும் வளமார் பயனே
எய்துதல் தடுக்கும் ஊழ்வினே இயல்பும்(7)
மும்மைசால்(8) மந்திர மறைப்பொருள்(9) தம்மையும்
வீறுகெழு தத்துவ மூன்றின்(10) தன்மையும்
கெடலருஞ் சிறப்பின் கேள்வி(11) நான்கின்
உட்பொரு ளெல்லாம் எஞ்சாமல் உரைத்தலொ(டு)
எண்ணருஞ் சிறப்பின் எழுபத்து நால்வரும்
பின்னும் பலபல தேசிகர் யாவரும்
தொகுத்துச் சொன்ன ஐதிகம் யாவுக்கும்
சிறப்பார் செந்தமிழ் உரைக்குறிப் பெழுதிய
எழில்மிகு இன்ப வார்த்தா மாலேயும்,
பெறலரும் பேற்றைப் பீடுற அளிக்கும்
மோகமில் முதலா யிரத்துப் பனுவல்:
ஓரா யிரமாம் ஒப்பில் திருவாய்

(1) நீங்காத பெரும்புகழ். (2) அறியாமையின் தாழ்வை, (3) வேதங்கூறும் முறையால் கூறி அறிவின்மையை அகற்றி, (4) ஸ்ரீதத்வ ஸர்வஸ்வம், (5) பஞ்சமபக்ஷசததூஷணி, (6) ஆசார்ய வைபவ மஞ்ஜரி, (7) அர்த்த பஞ்சகம். (8) மூன்ருகிய, (9) ரஹஸ்யங்கள், (10) தத்வத்ரயம், (11) ஶ்ருதி-வேதம்.

மொழியொழிந் தவைக்கு விருப்பொடு சிவணி(1)
விரிவுரை எளிய விரித்தல் நூலும்,
எண்ணிலாத் தோத்திர நூலொடும், இன்னமும்
சொல்லிச் சொலாத நூல்கள் யாவையும்
விளக்கமில்(2) விளக்கொடு(3) வெளியுறச் செய்தும்(4)
திக்கு விசயஞ் செய்தே எட்டுத்
திசையெலாஞ் சென்று புறவசல் உள்அசல்
என்ற இருவோரின் மதிவிகற்ப மாய(5)
மறுக்கொணு மதிநிறை சான்றுநூ லால்அவர்
வாயும் மனமும் செயலும் ஒடுங்கச்
செய்தநின் சிறப்புடைச் சேவகந் தானும்
மெய்த்தவச் சிறப்பால் விழுப்பம் எய்தி
அவாவினை அவித்த சான்றோர் நெஞ்சில்
நீக்குதற் கரிய நினைவா கும்மே
மதிப்புறு முனைவர் பட்டம்பல வழங்கும்
பல்கலைக் கழகங்கள் யாவைக்கும் நீயோர்
பல்கலைக் கழகமாய் நின்றே பலர்க்குப்
பட்டம் பலவழங்கும் ஆற்றல் படைத்த
முனைவருள் முனைவ! மூதறி வாள!
இனைத்தென வரம்பிதா நின்செயல் யாவும்
முந்நீர் வரைப்பகம்(6) முழுதும் போற்றிடும்
மாலின் சமயம் மாண்புறக் காத்துமன்(7)
வான்சிறப் பெய்திய மாதவக் குரிசில்(8)
நோனார்(9) உட்குறும்(10) நோய்தபு(11) நலத்தோ(டு)
என்றும் எம்மொடு இயைகுபு(12) வாழ்கென
வாழ்த்தினெம் முன்னம் யாம் செய்தவப் பயனால்
இன்னும் இன்னுமெம் காமம் இதுவே
என்றுனைத் தொழுகுவம் இறைஞ்சுவம்
மார்கெழு(13) சிறப்பின் மதிநலத்(14) தோயே.

(1) பொருந்திய, (2) சிலவற்றுக்கு விவரணம் இல்லாமலும், (3) விவரணத்தோடும், (4) வெளியிடு செய்தும், (5) புத்திக்கு மாறுபாட்டை விளைவிக்கும் அவர்களது கொள்கை மாய்ந்து போகும்படியாக, (6) கடலால் சூழப்பெற்ற உலகம், (7) மன்-ஆக்கங் குறித்த இடைச்சொல், (8) பெரிய தவத்தையுடையோர்க்கெல்லாம் அரசாக விளங்குபவரே, (9) விரோதிகள், (10) அஞ்சும்படியாக (11) நோயற்ற, (12) பொருந்தி; புகரம் சிறப்புக் குறித்து வந்தது, (13) பெருமை பொருந்திய, (14) மதி-ஞானம்; நலம்-பக்தி; பக்தி ரூபாபந்ந ஜ்ஞானத்தையுடையவரே.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸுதர்சனர்—வேதவியாசர்

[ஸ்ரீ உ. வே உபய வேதாந்தபுரம் W. S. ராமாநுஜம், புதுச்சேரி]



மகாவித்வான் புத்தூர் ஸ்ரீ உ வே ஸுதர்சனர் ஸ்வாமி 20, 21-ம் நூற்றாண்டின் தலைசிறந்த வைணவப் பெரியார் ஆவர். இவர் (1) திவ்யப்ரபந்தம், அதின் வ்யாக்யானங்கள், நித்யாநுஸந்தானப் பதிப்புகளும், (2) வேத உபநிஷத் வ்யாக்யானங்கள், (3) ப்ரஹ்ம சூத்ர வ்யாக்யான உரையும், (4) கீதா வ்யாக்யானம், (5) ரஹஸ்ய வ்யாக்யானங்கள், (6) குருபரம்பரை நூல்களான ஆறாயிரப்படி, சரமோபாய நிர்ணயம், பெரிய திருமுடியடைவு, ப்ரபந்நாம்ருதம், ஆசார்ய வைபவ மஞ்ஜரி, வார்த்தாமாலை, (7) ஸ்தோத்ர கத்ய வ்யாக்யானங்கள், (8) விஷ்ணுசித்த விஜயத்தில் ச்ருதி, ஸ்ம்ருதி, ஸ்ரீராமாயணப் பகுதிகள், (9) ஸ்ரீராமாயண பாரதாதி தனிச்லோக விவரணம், (10) கம்பராமாயண விளக்கம், (11) மத நல்லிணக்க நூல்களான சர்வ சமய சமரசம், சமரச கண்டனம், (12) தமிழ் நூல்களான சாதிமத ஆராய்ச்சி, சங்ககாலத் தமிழர் சமயம், கோதையும், சங்கத் தமிழும், பரப்ரஹ்ம விவேகம், ஆண்டாள் சந்திரகலாமாலை, சோலைமலைக்குற வஞ்சி, (13) ஸம்ப்ரதாய ஒற்றுமைக்கான ஸித்தோபாய விஜயம், கைவல்ய ஸித்தாஞ்ஜனம், (14) வைணவப் பாதுகாப்பு நூல்களான ஸாத்விக விஜயம், ஸ்ரீவைஷ்ணவமத விஜயம், அக்னி ஹோத்ரியும் வைணவமும், விசிஷ்டாத்வைத விஜய விவரணம், (15) வைணவக் கொள்கை விளக்க நூல்களான யதீந்த்ரமத தீபிகை, ஸந்மத காரிகாவளீ, மோக்ஷோபாய ப்ரதீபிகை விளக்கவுரைகள், (16) ஸுதர்சனர் கேள்வி பதில், (17) வானொலி மற்றும் கருத்தரங்குக் கட்டுரைகள், (18) ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன மாதப் பத்திரிகை என்று 18 துறைகளில் நூல்களை வைணவ உலகிற்கு வழங்கியவர். இந்த முறையில் 18 புராணங்களை அளித்த வேத வ்யாசரைப் போன்றவர். ஆனால் வேத வ்யாசர் கலந்த கட்டியான 18 புராணங்களை மட்டும் உலகுக்கு அளித்தவர். நமது ஸ்வாமி பதினெட்டு துறைகளில் குற்றமற்ற நூற்றுக் கணக்கான நூல்களை வைணவ உலகுக்கு அளித்துள்ளார். ஸமர்த்த

ரான வேத வ்யாசருக்கு எழுத எழுதுகோல் இல்லை. ஸுதர்சனர் தாம் வெளியிட்ட நூல்கள் அனைத்தையும் தாமே எழுதியது மட்டும் அல்ல. இவைகளைப் பல ஸதஸ்ஸுக்களில் உபந்யஸித்து, நிலை நாட்டியவரும் ஆவர். அதனால் இவர் வேதவ்யாசரிலும் மேம்பட்டு விளங்குகிறார். இவருடைய சொல்வன்மையும் எழுத்து வன்மையும் பலரால் பாராட்டப் பட்டுள்ளன.

திவ்யதேச ரக்ஷணத்திற்காக சீரியர்படை அமைத்துப் பாதுகாத்த வர். அழகர் கோயில் வழக்குகளில் வெற்றி கண்டவர். ஸம்ப்ரதாய வளர்ச்சிக்காக ஞானசிரியர்களையும், ஞான புத்ரர்களையும் உருவாக்கி யவர். பொதுஜனப் பத்திரிகைகளிலும், ஸஞ்சிகைகளிலும் அவ்வப் போதுவரும் வைணவ தூஷணங்களுக்கு மறுப்பும், தெளிவும் அளித் தவர். சங்க நூல்களை ஆராய்ந்து, அவை முழுதும் வைணவக் கொள்கைகளையே பறை சாற்றுகின்றன என்பதை நாடு நகரமும் நன் கறியச் செய்தவர்.

இவ்வாறு ப்ரமாணத்தையும், ப்ரமேயத்தையும், ப்ரமாதாக்களையும் ரக்ஷித்த பெருமை இவர் ஒருவருக்கே உள்ளது. இந்த முறையில் இவர் நான்முகனைப் போன்று ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம், ஸ்ரீஸூக்தி மாலா வெளியீடுகள், தனி நூல்கள், சங்க இலக்கிய ஆராய்ச்சி என்று நான்கு முகமாக ஸம்ப்ரதாயத்தை வளர்த்தவர்.

நாதமுனிகளை ஆதியாகவும், எம்பெருமானாரை நடுநாயகமாகவும், மாமுனிகளை நிறைவாகவும் கொண்ட மஹாசார்யர்களால் அசைக்க முடியாதபடி நிலை நாட்டப்பட்ட வைணவ ஸம்ப்ரதாயத்தை— பூதூர் வந்த வள்ளல் போன்று புத்தூர் வந்த புண்ணியர் போற்றி, அரண் செய்து வளர்த்து வருகிறார். அடியேன் புதுவைக்கு அழைத்த போதெல்லாம் எழுந்தருளி, உபந்யசித்து, புதுவையில் வைணவம் சிறந்து விளங்கச் செய்துள்ளார். அப்படிப்பட்ட தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தனிப்பெரும் புகழ் படைத்த ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமிக்கு அடியேன், பெரியாழ்வார் பெருமாளுக்குப் பல்லாண்டு பாடியதுபோல, 'புத்தூர் ஸ்வாமியே இன்னம் ஒரு நூற்றாண்டு இரும்' என்று பாடி ஸத்லதை பெறுகிறேன்.

ஸ்ரீ:

ஸ்ரீஸுதர்சந கல்பவ்ருக்ஷாய நம:

# செய்ய சுடராழியானின் சீர்மை

[வானமாமலை வித்வான் J. சடகோபாசார்யர், நான்குனேரி]



அடியேன் வானமாமலையில் பிறந்து, பெரிய கோயிலில் சிங்கமய்யங்கார் பாடசாலையில் ஐந்து ஆண்டுகள் தர்க்கம், வ்யாகரணம், மீமாம்ஸா, ஸாஹித்ய, ஸ்ரீபாஷ்ய, பகவத் விஷயங்களைப் படித்தவன்; படிக்க ஆரம்பித்த வருடம் ஸர்வதாரி. அதேசமயம் "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்" பத்திரிகையும் பதிப்பிக்க ஆரம்பித்ததால் ஆரம்பம் முதல் நிகழ்காலம் வரை படித்துவருகிறேன். ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீவிலாஸம்ப்ரஸ்ஸில் பதிப்பித்த அம்ருதலஹரி பத்திரிகை ஆசிரியர் மெ. சுந்தரராஜய்யங்காருடன் ஸுதர்சன ஸ்தாபகர் நடத்திய விவாதத்தையும், ஒரு பெரிய மஹாவித்வானை அவர் அஷ்டஸிம்ஹாஸநாதிபதி என்று நிருபணம் செய்ததையும் நன்கு படித்தவன்.

"தானே முதலாளி, தானே தொழிலாளி; ஜோஸ்யமும் சொல்லுவார்" என்று அவர் ஒரு பத்திரிகையாசிரியரை அறிமுகப்படுத்தியதும் நினைவில் உள்ளது. ஸுதர்சனம் பத்திரிகை *உப்பர் தொழும் மெய்ஞ்ஞானத்துறையூரின அருகில் உள்ள புத்தூர் அக்ரஹாரத்தில் இருந்து வெளிவருகிறது. காரியாலயத்தில் பணிபுரிபவர்கள் திருவெள்ளறை தீர்த்தகாரர்களான எங்களாழ்வான் மரபினர். "தினவுகெடச் சொல்பவன் திருவெள்ளறைச் சோழியன்" என்பதை ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனத்தில் பரிபூர்ணமாகக் காணமுடியும்.

न वयं कवयस्तु केवलम् न वयं केवलतन्त्रपारगाः ।
अपि तु प्रतिवादि-वारण-प्रकटाटोप-विपाटन-क्षमाः ॥

என்று ஆளவந்தார் அருளிச்செய்துள்ளார். இதை நாம் நிகழ்காலத்தில் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனத்தில் பரிபூர்ணமாகக் காண்கிறோம்.

பொதுவாக, கிருஷ்ணன் என்ற பெயரில் உள்ள பேரறிஞர்கள் பலர் பத்திரிகை ஆரம்பித்து, ஆச்சர்யமாக நடத்தி வருகிறார்கள். (1) ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்ஸ்வாமி — "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்", (2) ஸ்ரீகிருஷ்ணப்ரேமி ஸ்வாமி—"ஸ்ரீபாகவத தர்மம்", (3) ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ கிருஷ்ணமாசார்யஸ்வாமி—"ஸ்ரீபாஞ்சஜந்யம்",

(4) வி. வி. ராமாநுஜன் ஸ்வாமி—"யதிராஜ பாதுகா" (இங்கு ராமா நுஜன் என்ற சொல்லுக்குப் பலராமனின் தம்பி கிருஷ்ணன் என்று பொருள்). (5) கீதாசார்யன் ஆசிரியர் வேங்கடகிருஷ்ணன் ஸ்வாமி இவைகளில் மூத்த பத்திரிகை ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனமே. (6) வில்லிவலம் கிருஷ்ணமாசார்யஸ்வாமி என்று பூர்வாச்ரமத் திரு நாமம் அமைந்த நிகழ்கால அழகியசிங்கர் நடத்துவது "ந்ருஸிம்ஹ ப்ரியா". இந்தப் பத்திரிகையின் முன்னாள் ஆசிரியர் புரிசை ஸ்ரீ உ வே கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி.

ஸ்வாமி நம்மாழ்வார் கண்ணபிரானை, "அறிவினால் குறைவில்லா அகல் ஞாலத்தவர் அறிய, நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறைஞானத்தொரு மூர்த்தி" என்று குறிப்பிடுகிறார். இது நம் ஸுதர்சனருக்குப் பரிபூர்ண மாகப் பொருந்தியுள்ளது. யார் எத்தனை கேள்விகள் கேட்டாலும் பதில் சொல்லும் திறமை படைத்தவர். ஸுதர்சனரின் கேள்வி-பதில் என்று பல சதகங்கள் வெளிவந்துள்ளன. பூர்வாசார்யர்கள் அருளிச் செய்த மணிப்ரவாள நூல்களுக்கு, எளிய தமிழில் விளக்கவுரை எழுதி யுள்ளார். ஸ்ரீபாஷ்யம் அதிகரணார்த்தங்களைச் சொல்லும் ஶாரீரககாரிகாவளி, யதீந்த்ரமத தீபிகை முதலான வடமொழி நூல்களுக்கும் எளிய தமிழில் விளக்கவுரை எழுதிப் பதிப்பித்துள் ளார். அந்தந்தக் காலத்துக்குத் தகுந்தபடி தலையங்கத்தையும் ஆச்சர்யமாக அமைக்கும் திறன் அமைந்தவர். ஸ்ரீராமாயண தனிச் லோகம், பகவத் கீதை முதலான நூல்களுக்கும் எளிய தமிழில் ஆழ் பொருளை அறிவித்துள்ளார்.

### முடிவுரை

"पश्येम शरदश्शतं जीवेम शरदः शतम्"

என்று வடமொழிமறை வாழ்த்துவது போலவும், தமிழ்மறை "அடியோ மோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு" என்று வாழ்த்துவது போலவும் நம் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனர் பிறவிப்பயனாக அமைத் துக்கொண்ட எழுத்துப்பணியை, பல ஆண்டுகள் தொடர்ந்து செய்யத் திருவருள் புரியவேணுமென்று, நம்பெருமாள், பங்கயச்செல்வி, ஆழ் வார், ஆண்டாள், எம்பெருமானார், எங்களாழ்வான், பெரிய ஜீயர் முத லானோர்களைப் பிரார்த்திக்கிறேன். தைத்திரீய உபநிஷத்தில்,

'स्वाध्याय प्रवचने एवेति नाको मौद्गल्यः । तद्धि तपः तद्धि तपः'

என்பதற்குச் சான்றாகப் பெரிய தபஸ்வியாகப் பல்லாண்டு வாழ்ந்து பாரோரை வாழ்வித்தருளவேணும்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# சூரியனைப் பார்த்துக் குரைக்கும் சுவானம்

[அம்மாள் ஸ்ரீ திருவேங்கடாசார்யஸ்வாமி, ஸ்ரீரங்கம்]



ஸ்ரீப்ரஸந்ந வேங்கடேச சதுர்வேதி காஞ்சி பெருந்தேவித் தாயாருக்கு லக்ஷக்கணக்கான ரூபாய்கள் செலவில் வைர அபய ஹஸ்தம் ஸமர்ப்பித்தல், ஸ்ரீரங்கம் காட்டழகிய சிங்கர் கோயில் கதவுகளுக்கு வெள்ளிக்கவசம் போடுதல், வைணவப் பிரசாரத்திற்காகப் பத்திரிகை நடத்துதல், பல வைணவ நூல்களை அச்சிடக் காகிதம் அளித்தல், அவற்றை மறுபதிப்புச் செய்தல் முதலான நற்பணிகளைச் செய்து வந்தார். சில மாதங்களுக்குமுன் அவர் பல குற்றச்சாட்டுகளுக்காகக் கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டு அவர் மீது விசாரணை நடைபெற்று வருகிறது. இந்த வழக்கு பற்றித் தகவல் சேகரிப்பதற்காகச் சில பத்திரிகை நிருபர்கள் திருச்சியிலுள்ள அவரது பெற்றோர்களைச் சந்தித்தனர். அவரது தந்தை, "சதுர்வேதி பிறவியில் சைவர். இளமையிலேயே ஸுதர்சனரின் நூல்களைப் படித்துக் கற்றுத் தேர்ந்து வைணவத்தில் ஈடுபாடு கொண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்" என்று கூறியுள்ளார். இது தொடர்பாக நக்கீரன், குமுதம் ரிப்போர்ட்டர் ஆகிய பத்திரிகைகளின் நிருபர்கள் ஸுதர்சனர் ஸ்வாமியைச் சந்தித்து சதுர்வேதியைப் பற்றி விசாரித்தனர். அதற்கு அவர், "வைணவத்திற்குப் பல நற்பணிகள் செய்தவர் என்ற அளவில் அவரைத் தெரியும். அவருடைய நடவடிக்கைகள் பற்றி ஏதும் தெரியாது" என்றும், "சமீபகாலமாக அவரோடு தொடர்பு இல்லை" என்றும் தெரிவித்தார். சதுர்வேதி உங்களிடம் வேதம் பயின்றாரா என்னும் கேள்விக்கு "நான் வேதாத்யயனம் செய்தவனல்ல, எனவே யாருக்கும் நான் வேதத்தைக் கற்பிக்கவில்லை" என்று ஸுதர்சனர் கூறினார். "சதுர்வேதியின் கைதுக்குப் பின்னணியாக வடகலையாரின் சதித்திட்

டம் உள்ளதா?'' என்ற நிருபரின் கேள்விக்கு, ''அவ்வாறு இருக்க வாய்ப்பில்லை; நான் அப்படிப்பட்ட செய்தியைக் கேள்விப்படவுமில்லை'' என்று பதிலளித்தார். இந்தச் சந்திப்பைப் பற்றிக் குமுதம் ரிப்போர்ட்டர் எந்தச் செய்தியையும் வெளியிடவில்லை. ஆனால் 'நக்கீரன்' பத்திரிகை, ''வடகலைக்காரங்க ஏதோ சதித் திட்டம் தீட்டியிருக்கா'' என்று ஸ்வாமி தர்சனர் கூறியதாகப் பொய்ச் செய்தி வெளியிட்டிருந்தது. அந்த இதழ் ஸ்வாமி தர்சனருக்கு அனுப்பப்படாமையால் அதை அவர் பார்க்கவுமில்லை. ஆனால் அதைப் படித்த கும்பகோணம் அன்பர் திரு. உ. நரசிம்மன் இதைத் தொலைபேசிமூலம் ஸ்வாமி தர்சனருடைய கவனத்துக்குக் கொண்டு வந்தபோது, சுட்டிக்காட்டப்பட்ட பொய்ச்செய்தியை அடுத்து வரும் ஸ்வாமி தர்சனம் இதழில் மறுப்பதாகவும் கூறினார். இந்நிலையில், நக்கீரன் பத்திரிகையைத் தமக்குப் பிரமாணமாகக் கொண்டவராய், தென்னாசார்ய தூஷணம், பாகவதாபசாரம் ஆகியவற்றை உட்கொண்டு வாழ்ந்துவரும் ஹ.ப்ரியா ஆசிரியர் டிசம்பர் 2004 இதழில் அபத்தக் கருத்துக்களையே எழுதிவரும் ஆசிரியர் பக்கத்தில், அண்மையில் உலகம் போற்றும் வகையில் சதாபிஷேகம் கண்டருளிய மூதறிஞரான ஸ்வாமி தர்சனரைப் பற்றிப் பின்வரும் வசவுகளைப் பொழிந்துள்ளார்—''80 வயதாகிவிட்டதால் மனநிலை தவறிப் பேசுகிறார் போலும். இப்படியே போனால் இவருக்கு சித்தபிரமை ஏற்பட்டு விடும். அதற்கு முன்பாக இவரை நல்ல மனநல மருத்துவரிடம் காட்டுவது நல்லது. அல்லது திருச்சிக்கு அருகிலேயே உள்ள குணசீலத்திற்கு அழைத்துப்போவதும் நல்லது. இப்படியே போனால் அஷ்டாக்ஷரம் மறந்துவிடும். கேவலம் வெறுப்பதுதானே! ஏகாக்ஷரமே போக்யமாகிவிடும்'' இந்த வசை மொழிகளைப் படிப்பவர்களுக்கு அவர் குறிப்பிட்டுள்ள சிகிச்சைகளைச் செய்தாலும் குணமாகாத முற்றிய நிலையில் இதை எழுதியிருக்கிறார் என்பது புலப்படும். உண்மையைப் பற்றிக்

கவலைப்படாமல் கேவலம் பத்திரிகை விற்பனையைப் பெருக்கு வதற்காகவே செய்திகளைத் திரித்தும் மிகைப்படுத்தியும் வெளி யிடும் நக்கீரன் போன்ற பத்திரிகைகளில் ஸுதர்சனர் கூறிய தாக வெளியான கருத்துக்களைப் படிக்கும் பகுத்தறிவுள்ள எவ ரும் ஸுதர்சனர் போன்ற பெருந்தகை அவ்வாறாகக் கூறியிருக்க மாட்டார் என்று புரிந்து கொள்வார்கள். பொறுப்புள்ள மனிதரா யிருந்தால் ஸுதர்சனர் ஸ்வாமியைத் தொலைபேசி மூலமாகவோ அல்லது கடிதம் மூலமாகவோ தொடர்பு கொண்டு உண்மை களை அறிந்துகொண்டு அதன்பின்னர் அதுபற்றித் தன் பத்திரிகை யில் எழுதியிருக்கவேண்டும். ஸுதர்சனர் சதாபிஷேகம் பற்றிய அறிவிப்பை ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா, ஸ்ரீரங்கநாதபாதுகா உள்ளிட்ட வைணவப்பத்திரிகைகள் அனைத்தும் வெளியிட்டுள்ளன. தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்கள் பலர் ஸுதர்சனர் பெருமைகளைப் பாராட்டிப் பலகால் பேசியும் எழுதியுமுள்ளனர். கடந்த ஐம்பதாண்டு களுக்கு மேலாகப் பல்லாயிரக்கணக்கான பக்கங்கள் எழுதி அச்சிட்டு வெளியிட்டுள்ள ஸுதர்சனர் ஸ்வாமி எந்த ஓரிடத்திலாவது வடகலையினரைத் தரக்குறைவாகத் தாக்கியுள்ளாரா என்பதை இவர் எடுத்துக்காட்டட்டும். விவாத க்ரந்தங்களில் பூர்வாசார்யர்களின் கருத்துக்களின் அடிப் படையில் வாதிடுவாரேயொழிய, தரக்குறைவாக எழுதியது கிடை யாது. உபயகலை ஒற்றுமையிலும், அதன்மூலமாக வைணவ விரோதிகளின் செயல்களைக் கண்டிப்பதிலும் ஊற்றம் கொண்ட வர் ஸுதர்சனர். அப்படிப்பட்ட ஸுதர்சன ஸூர்யனைப் பார்த்து இந்த சுவானம் குரைப்பதால் சூரியனுக்கு எந்தவித பாதிப்பும் இல்லை. அதன் ஒளி என்றும் மங்காது. எனவே சுவானம் தொடர்ந்து துவேஷத் தீயைக் கக்கிக் குரைத்துக் கொண்டே இருக்கட்டும். நல்லோர்கள் அதைப்பார்த்து சிரிப்பதையே செய்வார்கள்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஓர் கடிதம்

[ஸ்ரீ உ. வே R. நாராயணய்யங்கார் ஸ்வாமி, தலைவர், ஸத்ஸம்ப்ரதாய ப்ரவசந சபா, பெங்களூர்]



ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமி நம் ஸம்ப்ரதாயத்திற்குச் செய்து வரும் தொண்டு வாசாமகோசரம்.

ஸ்வாமியினுடைய இந்த மஹோத்ஸவத்தில் ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும் அந்வயித்து ஸத்தை பெறவேண்டும். அதற்காக நல்லதொரு கமிட்டி ஏற்படுத்தி அதன் மூலமாய் அனைவரும் தங்கள் கைங்கர்யங்களை நிறைவேற்ற அவகாசம் ஏற்படுத்தியுள்ள மஹான்களுக்கு அடியோங்கள் மிகவும் கடமைப்பட்டுள்ளோம்.

ஸ்வாமி பல்லாண்டு காலங்கள் எழுந்தருளி நம் ஸமூகத்திற்கு மேலும்மேலும் பல அரிய தொண்டுகள் செய்து அடியோங்கள் போன்றவரை உஜ்ஜீவித்தருள வேணுமாய்த் திருவெள்ளறை புண்டரீகாக்ஷப் பெருமாளை ப்ரார்த்திக்கிறோம். ஸ்வாமி திருமேனி பாங்குடன் எழுந்தருளி, ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் மூலம் பலபல க்ரந்தங்களுக்கும் வ்யாக்யானம் எழுதி, அனைவரும் ஸம்ப்ரதாய அர்த்தங்களைத் தெளிவுடன் கற்று நற்பண்புடன் வாழ வழி செய்ய ஆசைப்படுகிறோம்.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயம் தழைத்தோங்க "ஸ்ரீஸுதர்சனர் ஸ்வாமியே இன்னுமொரு நூற்றாண்டிரும்" என்று ஹ்ருதயபூர்வமான மங்களாசாஸனத்துடன் வாழ்த்துகிறோம்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீவிஷ்ணுசித்த குரவே நம:

# ஒளி காட்டும் ஒளி

[S. திருவேங்கடம், மேலத்திருமாளிகை, திருவெள்ளறை.]



'பயிலும் சுடரொளி மூர்த்தியைப் பங்கயக் கண்ணனை' என்று நம்மாழ்வார் பணித்தபடியே, பரஞ்சோதியாய் இருப்பவன் வேங்கடவாணன் என்னும் விளக்கு. இப்படிப்பட்ட அணிவிளக்கின் திருக்கரத்திலோ செய்ய சுடராழி; திருமார்பிலோ மின்னுமாமலர் மங்கை. ஆனாலும் காரிருளில் ஓரிடைகழியில் சுடர்விளக்கேற்றியே அவனை மருளாகிற இருள்சூழ்ந்த நமக்குக் காட்டினார்கள் முதலாழ்வார்கள். அதுமட்டுமின்றி 'வகுளபூஷண பாஸ்கரர்' என்று சொல்லும்படியாகத் தாங்களே விளக்குகளாகவும் திகழ்ந்தார்கள் ஆழ்வார்கள்.

ஆழ்வார்களை அடியொற்றிவந்த ஆசார்யர்களும் அவ்வாறே செய்தார்கள். ஸ்வாமி தேசிகன் 'யதிக்ஷமாப்₄ருத்₃தீ₃ப:' (யதிராஜ ஸப்ததி 56) என்று எம்பெருமானாரை ஒரு தீபமாகக் கூறுகிறார். பகவத் பக்தியாகிற எண்ணெயுடன் பிரகாசிக்கும் இந்த தீபத்தால் அஹங்காராதிகளான இருள் நீங்கி துர்மதங்களாகிற பாதாள குஹரத்திலிருந்து நாம் விடுபடுவதாகக் கூறுகிறார்.

இவர்களின் அடிபணிந்தவரான நம் புத்தூர் வக்கீல் ஸ்வாமி தாமே ஒரு ஒளி விளக்காய், தம் திருக்கரத்தில் 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' என்னும் சுடர் விளக்கையேந்தி, சுடர் விளக்கேந்தும் ஒளி விளக்காய் நின்று நமது அகவிருளை அகற்றிவிடுகிறார். தமது மழுங்காத ஞானத்தையே அகலாக்கி, ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயம் தழைநல்லவின்பம் தலைப்பெய்து எங்கும் தழைக்க வேண்டும் என்கிற ஆர்வத்தை நெய்யாக்கி, முன்னவராம் நம் குரவர் மொழிகளையே திரியாக்கி, ஸுதர்சன தீபத்தை ஏற்றி வருகிறார் நம் ஸ்வாமி.

ஸ்வாமிக்கு 'அச்யுதபூநு' என்று போற்றப்படும் ஞான வெள்ளச் சுடர் விளக்கான க்ருஷ்ணனின் திருநாமம். இவர் ஒளிமயராகத் திகழப் போகிறார் என்பது பற்றியே ஜ்யோதிர்மயமான கார்த்திகை மாஸத்தில் ஸ்வாதீயென்னும் சோதி நன்னாளில் அவதரிப்பித்தான் பைந்தாமரைக் கண்ணன். திருவெள்ளறைச் செந்தாமரைக் கண்ணனுடையவும், கயல்விழியாளான பங்கயச்செல்வியுடையவுமான திருக்கண்ணோக்கம் பெற்றமையால் ரக்தாக்ஷி வருஷத்தில் மீனலக்னத்தில் அவதரித்து மிகவும் பிரகாசிக்கிறார் நம் ஸ்வாமி.

ஸ்வாமியின் திருக்கரத்தில் திகழும் திருவிளக்கோ 'வடிவார் சோதி வலத்துறையும் சுடராழி' என்றும், 'கோடிஸூர்ய ஸமப்ரப₄ர்' என்றும் போற்றப்படுகிற விஷ்ணுவின் ஸுதர்சனம். ஸுதர்ஶந தேஜஸ்ஸை ஸ்தோத்ரம் பண்ணப்புக்கவரான கூர நாராயண ஜீயர் ஸ்வாமி தமது முதல் ஶ்லோகத்திலேயே ஸுதர்சனரின் ஒளி, அகவிருள் புறவிருளால் நாசமாகிவரும் உலகுக்கு வைத்யனுயிருந்து, தன் ப்ரகாஶத்தால் ஸூர்ய ஒளியைத் தாழ்த்தி எங்கும் பரவியும், தோள்வலியால் கர்ஜிக்கிற ஆஸுரப்ரக்ருதிகளைத் தொலைத்தும், பக்தர்களுக்கு ஆசந்த்ரார்க்கம் அருள் பாலித்தும் வருகிறது என்கிருர். உலகத்தோர் மன இருளைப் போக்கியும், தயங்காது விஷ்ணுபரத்வ நிர்ணயம் செய்து மற்ற பத்திரிகைகளை விஞ்சியும், பணவலியால் கொக்கரிக்கும் தற்கால ஆஸுரப்ரக்ருதிகளைத் தொலைத்தும் வாசகர்களுக்கு என்றும் அருள்பாலித்துவரும் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சநமும் அத்தகைய ஒளியுடன் விளங்கப்போகிறது என்பதை முன்கூட்டியே அறிந்த ஞானியான ஸுதர்சன ஸ்தாபகர் ஸ்வாமி

ப₄க்தாநுக்₃ராஹகம் புண்யம் ப்ரதிபக்ஷ நிராஸகம் ।
ஜீயாத₃ாசந்த்₃ரநக்ஷத்ரம் ஸ்ரீவைஷ்ணவ ஸுத₃ர்ஶநம் ॥

என்று மங்கள ஶ்லோகமிட்டார் போலும்!

ஸுதர்ஶநத்தின் ஒவ்வொரு இதழும் ஒளியென்று போற்றப்படுகிறது. பன்னிரு இதழ் சேர்ந்தது ஒரு சோதியாகக் கணக்கிடப்படுகிறது. 'கலியுகமொன்றுமின்றிக்கே' என்ற பாட்டில் 'சுடரொளி மூர்த்தி' என்பதை வ்யாக்யானிக்கப்புகுந்த ஸ்வாமி நம்பிள்ளை, 'சுடர் என்றும் ஒளியென்றும் பர்யாயமாய், இரண்டாலும் மிகுதியைச் சொல்லுகிறது' என்று அருளினூர். இதே போல் மிகுந்த ஒளியுடைய விளக்காய்த் திகழப்போகிறது என்று நினைத்தே 'சோதி' என்றும் 'ஒளி' என்றும் ஒரே பொருளுடைய சொற்களைக் கொண்டே பத்திரிகை இதழ்களைக் கணக்கிட்டார் ஸ்தாபகர் ஸ்வாமி.

ஸுதர்சனப் பத்திரிகையின் மேலட்டையில் "நாராயண பரோஜ்யோதி:" என்னப்படுகிற நாராயணனை முதலில் நமஸ்கரித்தும், பின்னர் அந்தப் பரஞ்சோதியைக் காட்டும் ஐந்து முகமுள்ள குத்துவிளக்காக ஸுதர்சனம் திகழ்கிறது என்று காட்டுவதுபோல் வகுளபூஷண பாஸ்கரரையும், உருக்காட்டும் அந்தி விளக்கேற்றிய விட்டுசித்தரையும், ராமாநுஜ திவாகரரையும், ஆழ்வார்கள் அருளிச்செயல்களை வெளிச்சமிட்டுக் காட்டும் க்ருஷ்ண ஸூரியான பெரியவாச்சான்பிள்ளையையும், ரஹஸ்யங்

களை ஒளிரச்செய்யும் தேஜோநிதியான மாமுனிகளையும் நமஸ்கரித்தும் ஒவ்வொரு ஸுதர்சனம் இதழையும் தொடங்குகிறார் ஸ்வாமி.

இப்படித் தாமே ஒரு ஒளிவிளக்காய்த் தம் கரத்தில் 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' என்னும் சுடர் விளக்கைத் தாங்கி அந்த ஒளி மணிவண்ணனை நமக்குக் காட்டியருள்கிறார் நம் ஸ்வாமி.

ஒளிகாட்டும் ஒளி என்பதற்கு நாரணனாகிற ஒளி காட்டுகிற க்ருஷ்ணஸ்வாமியாகிற ஒளி என்றும் பொருள் கொள்ளலாம். நம் ஸ்வாமியின் திருவவதாரத்தை, இரண்டு ஆழ்வார்களது பாசுரங்கள் வாயிலாகக் கோடிட்டுக் காட்டுகிறான் எம்பெருமான். 'பொலிக பொலிக' பதிகத்தில் "நேமிப்பிரான் தமர்போந்தார்" என்று ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிபர் அவதரிக்கப்போகிறார் என்று ஸூசிப்பிக்கிறான். 'தமர்' என்கிற இதே சொல்லை உபயோகித்து 'தமருகந்து எவ்வண்ணம் சிந்தித்து இமையாதிருப்பரே அவ்வண்ணம் ஆழியானும்' என்கிற பாசுரத்தால் 'ஆசிரியராய் இருந்து ஸ்வாமி எவ்வண்ணம் நடத்துகிறாரோ அவ்வண்ணமெல்லாம் ஸுதர்சனம் மிளிரப்போகிறது' என்றும் ஸூசிப்பிக்கிறான். இப்படி நாராயணனாகிற ஒளியால் காட்டப்பட்ட ஒளியாகவும் ஆகிறார் நம் ஸ்வாமி.

ஸ்வாமிக்குப் பல்லாண்டு பாடியமைகிறேன் அடியேன்.

**"சோதிதன்னில் சோதிகாட்டச் சோதிவந்த சோதியே**
**ஆதிநாதன் வேதம்சீதை கீதமோடுகீதையும்**
**கோதிலாத வேதமோடு போதனைகள் வாழவே**
**பாதிகண்ட மேதைநீயும் மீதியாயுள் கண்டிடே".**

[ஒளிமயமான ஸுதர்சன பத்திரிகை மூலமாக, பரஞ்சோதியை உலகினர்க்குக் காட்டுவதற்காக சோதி நக்ஷத்ரத்தில் அவதரித்த ஒளி விளக்கான ஸ்வாமியே! ஆதிநாதனும், வேதங்களும், சீதை சரித்திரமான இராமாயணமும், மஹாபாரத ஸாரமான கீதையும், குற்றமற்றதான த்ராவிடவேதமான ஆழ்வார்கள் ஸ்ரீஸூக்திகளும், அவற்றிற்கு ஆசார்யர்கள் செய்த தெருள்மிக்க வ்யாக்யானங்களும் வாழ்ச்சியடைவதற்காக, பாதி ஆயுஸ்ஸைக் கடந்த மாமேதையான தேவரீர் உம் தேவியாரோடும் கூட மீதிப் பாதி ஆயுளையும் காண்பீராக! இன்னும் ஒரு எண்பது ஆண்டுகள் வாழவேண்டும் என்றபடி.]

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# தெருள்தருமா தேசிகன்

[ஸ்ரீ N. ராமாநுஜம் ஸ்வாமி, மல்லேச்வரம், பெங்களூர்.]



இன்றைக்கு நம் ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்திற்கு ஓர் ஒப்பற்ற வழிகாட்டியாகவும், இதர குத்ருஷ்டிகளுக்கும், முன்னவரும், பின்னவருமான நாத்திகர்களுக்கும் ஆத்திக நாத்திகர்களுக்கும் சாட்டையடி கொடுத்தும், முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் பலபல க்ரந்தங்களுக்கு வ்யாக்யானம் எழுதி மிகக்குறைந்த விலையில் ஸ்ரீகோசங்கள் வெளியிட்டும் மஹோபகாரகராய்த் திகழ்கிருர் நம் ஸுதர்சனர் ஸ்வாமி. நம் ஸம்ப்ரதாயத்தில் எல்லோருடைய மனத்திலும் நம் ஸ்வாமி செய்துவரும் மஹத்தான தொண்டு ஓர் ஆழ்ந்த Impression-ஐ (இலச்சினையை) ஏற்படுத்தியுள்ளது. ஒவ்வோர் ஆசார்யனும் தன் சிச்சனுக்குச் செய்யும் உபதேசம்போல், ஸுதர்சனர் ஸ்வாமி நம் அனைவருக்கும் ஞானோபதேசம் செய்து தெருள்தருமா தேசிகனாய்த் திகழ்கிருர்.

ஞானம் அனுட்டானம் இவை நன்ருகவேயுடையரான நம் ஸ்வாமி நம் ஸமூஹத்திற்குக் கிடைத்தது பெரும்பாக்யமே. உடல் உழைப்பு, அயர்வு, பொருள் செலவு, ஊர்வம்பர்களின் ஏச்சுப் பேச்சுக்கள், குத்ருஷ்டிகளின் கோணப்பார்வை இவைகளைப் பொருட்படுத்தாமல், எண்பது திருநக்ஷத்திரத்திலும் நம் ஸம்ப்ரதாயத்திற்காகவே அயராது உழைக்கும் ஸ்ரீவைஷ்ணவச் செம்மல் ஸ்ரீ உ. வே கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி (ஸுதர்சனர்) இன்னும் ஒரு நூற்ருண்டு எழுந்தருளியிருந்து ச்ரேஷ்டமான பல கார்யங்களைச் செய்தருளவேணுமென்று பொங்கும் பரிவாலே திருவெள்ளறை திவ்யதம்பதிகள் திருவடிகளில் ப்ரார்த்திக்கிறேன்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# சதாபிஷேக வைபவம்

[ஸ்ரீ உ வே E. S. V. நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி
(அஹோபிலமடம்) ஆஸ்தான வித்வான்
ஸ்வர்க்கநாதபுரம், (சொக்கநாலூர்), ஸ்ரீரங்கம்]



पूर्वयुगान्तेऽर्जुनाय स्वामी कृष्णो गीतामुपादिशत् ।
अद्यतु सार्वजनीनं गीताभाष्यं द्रामिडीमकरोत् ॥

பூர்வ யுகா₃ந்தேऽர்ஜுநாய ஸ்வாமீ க்ருஷ்ணோ கீ₃தாமுபாதிஶத் ।
அத்₃யது ஸார்வஜநீநம் கீ₃தாபா₄ஷ்யம் த்₃ராமிடீ₃மகரோத் ॥

[த்வாபர யுகாந்தத்தில் ஸ்வாமி கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு கீதையை உபதேசித்தார். இக்கலியுகத்தில் யாவர்க்கும் எளிய தமிழில் கீதா பாஷ்யத்தின் விளக்கவுரையை அருளிச்செய்தார் அவரே.]

परकालावतारमासे नृसिंहस्य स्वातितारके ।
समुद्भूताय बुधायास्मै भवतात् सर्वमंगलम् ॥

பரகாலாவதாரமாஸே ந்ருஸிம்ஹஸ்ய ஸ்வாதி தாரகே ।
ஸமுத்₃பூ₄தாய பு₃தா₄யாஸ்மை ப₄வதாத் ஸர்வ மங்க₃ளம் ॥

[கலியன் அவதரித்த கார்த்திகை மாதத்தில் ஸ்ரீந்ருஸிம்ஹன் அவதரித்த ஸ்வாதீ நக்ஷத்ரத்தில் தோன்றிய பேரறிஞர் ஸ்ரீக்ருஷ்ண ஸ்வாமிக்கு எப்போதும் மங்களம் உண்டாகட்டும்.]

श्वेताद्रि तोताद्रि गोष्ठीपूर्णान् मुख्यचूडावतंसकान् ।
स्वान्वयेन स्मारयित्रे स्यात् बुधायास्मै मंगलम् ॥

ஶ்வேதாத்₃ரி தோதாத்₃ரி கோ₃ஷ்டீ₂ பூர்ணாந்
முக்₂ய சூடா₃வதம்ஸகாந் ।
ஸ்வாந்வயேந ஸ்மாரயித்ரே ஸ்யாத் பு₃த₄₄யாஸ்மை மங்க₃ளம் ॥

[திருவெள்ளறை, வானமாமலை, திருக்கோட்டியூர் நம்பிகள் முதலிய பரம்பரையில் உச்சிக்கொண்டையை அலங்காரமாகக்கொண்ட இப் பேரறிஞர்க்கு நல்ல மங்களம் உண்டாகுக.]

**सौदर्शिन्या पत्रिकया शकलीकृतान्यदुर्मतः ।**
**श्रीमदण्णङ्गराचार्य-प्रतिभूरद्य दृश्यते ॥**

**ஸௌத₃ர்ஶின்யா பத்ரிகயா ஶகலீக்ருதாந்ய து₃ர்மத: ।**
**ஸ்ரீமத₃ண்ணங்க₃ராசார்ய ப்ரதிபூ₄ரத்₃ய த்₃ருஶ்யதே ॥**

[ஸுதர்சன பத்திரிகை மூலம் பிற மதங்களில் மத₃த்தைத் தூளாக்கும் ஸ்ரீமான் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யரின் அபராவதாரம் போல் ப்ரதிநிதியாய் விளங்கும் இவ்வறிஞருக்கு மங்களம் உண்டாகுக.]

**मध्यशिरोच्चूडावतंसानां पूर्वेषां संप्रदायरक्षकः ।**
**शताभिषेकातिरिक्तां शतवत्सरीं ज्वलेदिति ॥**

**மத்₄ய சிரோச்சூடா₃வதம்ஸாநாம் பூர்வேஷாம்**
**ஸம்ப்ரதா₃ய ரக்ஷக: ।**
**ஶதாபி₄ஷேகாதிரிக்தாம் ஶதவத்ஸரீம் ஜ்வலேதி₃தி ॥**

**नित्यसूरिद्रामिडी वेदान्तान् निःस्वार्थं व्याख्याते शुभानि ।**
**भगवद्रङ्गनाथानुग्रहात् भूयासुः भूयासीत्यर्थये हरिम् ॥**

நித்யஸூரி த்₃ராமிட₃ வேதா₃ந்தாந் நி:ஸ்வார்த்த₂ம்:
வ்யாக்₂யாத்ரே ஶுபா₄நி ।
ப₄க₃வத்₃ரங்க₃நாதா₂நுக்₃ரஹாத் பூ₄யாஸு:
பூ₄யாம்ஸீத்யர்த்த₂யே ஹரிம் ॥

[ஸ்ரீமதாழ்வார்களின் தமிழ்ப்ரபந்தங்களுக்கு எளிய தமிழில் உரைகளைத் தன்னலம் பாராது உலகிற்கே எழுதிவரும் இந்த ஸ்வாமிக்கு மிக்க க்ஷேமங்களை ஸ்ரீரங்கநாதன் அருள வேண்டுமென்று அவனடிகளில் வேண்டுகின்றேன்.]

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கிராமங்களில் ஸ்ரீஸுதர்சனர்

[S. கிருஷ்ணய்யங்கார், சாணார்பாளையம், ஈரோடு]



**ஓராண் வழியா யுபதேசித்தார் முன்னோர்**
**ஏரா ரெதிராச ரின்னருளால்—பாருலகில்**
**ஆசையுடையோர்க் கெல்லா மாரியர்காள்**
**கூறுமென்று**
**பேசிவரம்பறுத்தார் பின்.** [உபதேசரத்தினமாலை 37]

என்று பெரிய ஜீயர் (மணவாள மாமுனிகள்) அருளிச்செய்தபடியே, எம்பெருமானார்க்கு முன்னிருந்த ஆசார்யர்கள் யாவரும் "திருமந்திரத்தின் சீர்மைக்குப் போரும்படி ப்ரேமத்தோடே பேணி அநுஸந்திக்க வேணும்" என்பதை உணர்ந்தவர்களாய், திருமந்திரத்தின் அர்த்தமாகிய வைதிகமதமான ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்தை, தகுதியுடைய ஸத்பாத்ரங்களாகிற ஜ்ஞாநாதிகாரிகளுக்கே உபதேசித்துப் போந்தனர். இக்காரணத்தால் இவ்வகையான ஆசார்யர்கள் 'ஸ்வாநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர்கள்' என அழைக்கப்பட்டனர். ஆனால் எம்பெருமானாரோ இவ்விதமாக இல்லாமல் "அபூர்த்தம் பாராதே அனர்த்தம் பார்த்து வெளியிட்டார்" என்கிறபடியே, ஒவ்வொரு ஜீவனும் எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணன் ஒருவனுக்கே அடிமைப்பட்டவன் என்கிற உண்மையை மறந்து, எம்பெருமானையிழந்து போவதைக்கண்டு பொறுக்காமல் "ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறுமென்று" (தர்சனத்தை அறிய ஆவலுடையவர்க்கெல்லாம் அறிவியுங்கள் எனத்) தமது சிஷ்ய ப்ரசிஷ்யாதிகளை நியமித்தருளினார். இதனால் எம்பெருமானாரைப் போல்வார் "க்ருபா மாத்ர ப்ரஸந்நாசார்யர்கள்" எனப்பட்டனர். இதில் இரண்டாவது வகையான க்ருபா மாத்ர ப்ரஸந்நாசார்ய வகையைச் சேர்ந்தவர் நமது புத்தூர் ஸ்வாமி ஸ்ரீஸுதர்சனர் ஆவார். எவ்வாறெனில் சென்ற நூற்றாண்டிலும், இந்த நூற்றாண்டிலும் எம்பெருமானார் தரிசனத்தை வளர்த்த மஹாசார்யர்கள் பலர். அவர்களில் பலரது எழுத்துக்களும் வ்யாக்யானங்களும் தர்சன ஜ்ஞானமும், வடமொழிப் புலமையும் உடைய பண்டிதர்களுக்கும் வித்வான்களுக்குமே விளங்குவதாய் அமைந்திருக்கும். ஸாமான்ய ஜனங்களுக்கோ, கிராமங்களில் வாழும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கோ வடமொழி அறிவில்லாத

வர்களுக்கோ புரிவது மிகுந்த சிரமமாய் இருக்கும். ஆனால் நமது ஸுதர்சனம் ஸ்வாமியின் எழுத்துக்களும், வ்யாக்யானங்களும் ஸாமாந்யரான பாமரர்களும் அறிந்துய்யும்படியாக அமைந்திருக்கும். இதற்கு அடியேனும் அடியேனது கிராமத்தைச் சார்ந்தவர்களுமே உதாரணமாவோம். அடியேன் ஈரோடு மாவட்டத்திலுள்ள தூடுப்பதி என்னும் சிறு கிராமத்தைச் சார்ந்த ஒரு சாதாரண சைவக் குடும்பத்தில் பிறந்தவனாவேன். ஸ்வாமியின் நூல்களைப் படிப்பதற்கு முன்னர் அடியேன் சைவ வழிபாடுகளில் ஆழ்ந்து 'சிவனே பரம்பொருள்' என்கிற மாயையில் மயங்கியிருந்தேன். பின்னர் பகவத் க்ருபையால் ஸ்ரீமத் பகவத்கீதையைப் படித்து "எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருள்" என அறிந்தேன். ஆயினும், "நாராயணனே பரதத்துவம்" என அறுதியிடவும், பிறர்க்கு உரைக்கவும் தக்க ப்ரமாண நூல்கள் அச்சமயத்தில் கிடைக்காததால் பரிபூர்ண உறுதி ஏற்படாமல் தவித்துக்கொண்டிருந்த நிலையில், ஒருநாள் எம்பெருமானார் கருணையினால் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் மூலமாக நமது புத்தூர் ஸ்வாமியின் வெளியீடுகளான சாதிமத ஆராய்ச்சி, சங்ககாலத்தமிழர்சமயம், விஷ்ணு சித்த விஜயம், ஸுதர்சனர் கேள்வி—பதில் சதகங்கள், பரப்ரம்ம விவேகம், விசிஷ்டாத்வைத விஜய விவரணம் போன்ற நூல்கள் அடியேனுக்குக் கிடைத்தன. அப்போது அவை அடியேனுக்கு நித்யதரித்ரனுக்குப் பெருநிதி கிட்டினாற்போலே இருந்தது. அந்நூல்களை தாகம் எடுத்தவன் தண்ணீரைப் பருகினாற்போல் பருகி, ஐயம் தீர்ந்தேன். அடியேன் பெற்ற நன்மையை உடனடியாகத் தபால்மூலம் நமது ஸ்வாமிக்குத் தெரிவித்தேன். ஸ்வாமியும் அடுத்தநாளே உடனடியாகப் புறப்பட்டு வருமாறு கடிதம் எழுதினார். அடியேன் ஸ்வாமியைச் சந்திப்பதற்கு முன்னர் ஸ்வாமியின் எழுத்துக்களையும் புறமத கண்டனங்களையும் கண்டு அவர் எவ்வாறு பழகுவாரோ எனப் பயந்துகொண்டே புத்தூர் அக்ரஹாரம் சென்று ஸ்வாமியை ஸேவித்தேன். அடியேனுக்காகக் காத்திருந்த ஸ்வாமி அடியேனை வரவேற்று மிகுந்த பரிவுடன் ஒரு குழந்தையிடம்போல மென்மையாகப்பேசிப் பழகி அடியேனை ஆசீர்வதித்து, ஆர்வமிருந்தும் நூல்களை வாங்கிப் படிப்பதற்குப் போதிய பணமில்லாத அடியேனுக்கு நூல்கள் சிலவற்றை இலவசமாகவும் 25-/- கழிவு விலையிலும், பணமில்லாவிட்டாலும் இருக்கும்போது கொடுக்கலாம் எனக் கட்டளைகவும் அடியேன் விரும்பின நூல்களை வழங்கிப் பெரும் க்ருபை செய்தருளினார்.

அடியேன் ஊருக்கு வந்து அவற்றைப் படித்துப் பேரானந்தம் அடைந்தேன். மேலும் அவற்றில் ஏற்படும் சந்தேகங்களைக் கடிதங்களாக எழுதினால் உடனடியாகப் பதில் எழுதுவார் நம் ஸ்வாமி. அதோடு அடியேன் பல சந்தேஹங்களை ஒரு குறிப்பெடுத்து எழுதி வைத்து மாதத்தில் இரண்டு முறை ஸ்வாமியை நேரில் சந்தித்து அதற்கான விளக்கங்களைப் பெற்றேன். அடியேனது ஒவ்வொரு ஐயத்துக்கும் மிகப் பொறுமையாகவும் மந்த மதியான அடியேனுக்குப் புரியும்படியாகவும் நேரம் காலம் பார்க்காமல் மிகத் தெளிவாகவும் விளங்க வைத்தருளினார் நம் ஸ்வாமி. அதோடு அடியேனுக்குத் தாய் தந்தையர் வைத்த கதிரேசன் என்ற பெயரை "க்ருஷ்ணப்ரிய ராமாநுஜ தாஸன்" என்று மாற்றி, திருவெள்ளறை கீழத்திருமாளிகை ஸ்ரீ உ வே அம்மாள் திருவேங்கடாசார்ய ஸ்வாமியிடம் அடியேனைப் பற்றி எடுத்துரைத்து, பஞ்ச ஸம்ஸ்காரம் செய்தருளும்படி கேட்டுக் கொண்டார். அதற்கிணங்க, கீழத்திருமாளிகை ஸ்வாமியும் அடியேனுக்குப் பஞ்சஸம்ஸ்காரம் செய்தருளினர். ஸமாச்ரயணம் செய்து கொண்ட அடியேன் அடிக்கடி ஸ்வாமியை நேரில் சென்று ஸேவித்து வந்தபொழுது அடியேனுக்கு ஸ்வாமியின் திருவடி வாரத்திலேயே கைங்கர்யம் செய்யப் பேராவல் உண்டானது. இதனை ஸ்வாமியிடம் தெரிவித்தபோது மிகவும் மகிழ்ந்து அடியேனது குடும்பத்தாரிடம் அனுமதி பெற்று வருமாறு பணித்தார். அதன்படியே வந்த அடியேனை அங்கீகரித்து, தமது "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்" பத்திரிகை அலுவலகத்திலேயே வேலை கொடுத்தார். மேலும் "பெரிய திருமொழி வ்யாக்யானம்", "ஸுதர்சனர் 1008" போன்ற நூல்களை எழுதும்போது, ஸ்வாமி சொல்ல அடியேனைப் பட்டோலை கொள்ளும்படி (எழுதும்படி) நியமித்தார். அச்சமயங்களில் பல அரிய விஷயங்களையும், ஸம்ப்ரதாய அர்த்தங்களையும் உபதேசித்தருளினர். மேலும் ஸ்வாமியின் திருமேனி கைங்கர்யங்களையும் மஹாபாவியான அடியேனுக்கு வழங்கி, பரமபதத்திற்கு நிகரான ஆனந்தம் அடையும்படி பெரும் கருணை செய்தருளினர். இவ்வாறு ஒரு வருடகாலம் தமது திருவடிக் கைங்கர்யங்களில் ஆட்படுத்தி, பணிமானம் பிழையாமே அடியேனைப் பணி கொண்டருளினர். இப்படிப் பொருளல்லாத அடியேனை ஒரு பொருளாக்கி, 'நீ ஒருவன் மட்டும் உய்ந்தால் போதாது; ஆயிரக்கணக்கானோர் உய்ய வேண்டும்' எனக்கூறி, தமக்குக் குரு தக்ஷிணையாகப் பல உன்னத ஸ்ரீவைஷ்ணவர்களை உருவாக்கும்படியும், நகர்ப்புறங்களைவிட கிராமங்களில் ஸ்ரீவைஷ்ணவத்தைக் கொண்டு சேர்க்கும்படியும் நியமித்தார்

நமது ஸ்வாமி. ஸ்வாமியால் நியமிக்கப்பட்ட அடியேன் சொந்த ஊருக்கு வந்து சேர்ந்தேன். ஸ்ரீவைஷ்ணவத்தைப் பொறுத்தவரையில் ஈரோடு மாவட்டத்தைப் பாலைவனம் என்றே கூறலாம். ஏனெனில் ஈரோடு பெரியார் ஈ. வே. ராமசாமி பிறந்த ஊரானதால் நாஸ்திகர்களாலும், சைவ மடங்களும், சிவன்மலை, சென்னிமலை, திருநணா என்னும் பவானி கூடுதுறை, கொடுமுடி போன்ற சைவ ஸ்தலங்களும், சைவப்ரசாரகர்களும் நிறைந்திருப்பதாலும் நாஸ்திகமும் சைவாதிக்கமும் வீறுபெற்றுப் பீடிக்கப்பட்டிருந்தது இம்மாவட்டம். அதோடு ஸ்ரீவைஷ்ணவத்தை வளர்க்கும் ஸ்ரீராமாநுஜகூடமோ, ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்களோ இல்லாது போனதால், ஸ்ரீவைஷ்ணவம் தழைக்காமலும், எம்பெருமான் ஸந்நிதிகள் ஒன்றிரண்டு இருந்தாலும் அதுவும் தேவதாந்தரங்களோடு சேர்ந்தே இருக்கவேண்டிய சூழ்நிலைகளும், அதோடு அர்ச்சகர்களும் சைவ ஸம்பந்தத்தால் தேவதாந்தரங்களைத் தொழுவதும், ஐயப்பன் கோவிலுக்குச் செல்வோர் மாலையணியும் கூடங்களாகவும் காட்சியளிக்கும் நிலைக்கு ஆளாக்கப்பட்டிருந்தது. திருமண் அணிந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவரையும் காண அரிதான நிலைமையில் ஊருக்கு வந்த அடியேன் ஸ்வாமியின் திருவடி ஸம்பந்த தைர்யத்தால் யார் கேலி செய்தாலும் பொருட்படுத்தாமல் பன்னிரண்டு திருமண் காப்பினைத் தரித்துக்கொண்டு எல்லா விடங்களிலும் சென்று வந்தேன். பின்னர் அடியேனது ஊரான சாணூர்பாளையத்தில் (இது துடுப்பதி கிராமத்திற் நட்பட்ட ஊராகும்) "கிரிதர கோபால கிருஷ்ணன் திருமாளிகை" என்ற ஓர் மடத்தை நிறுவி, அதில் குன்றெடுத்தபிள்ளை என்கிற கோபாலகிருஷ்ணன் திருமேனியை ப்ரதிஷ்டை செய்தோம். பின்னர் ஆழ்வார்களையும் ஆசார்யர்களையும் ப்ரதிஷ்டை செய்தோம். வெளியூர்களிலிருந்து பல பாகவதர்களை அழைத்து அருளிச்செயல் கோஷ்டிகளை நடத்தினோம். பிறகு எம்பெருமானுக்கு இரண்டு காலங்களில் நித்ய திருவாராதனங்களும், எம்பெருமான் உற்சவங்களும் (வைபவங்களும்) ஆழ்வாராசார்யர்கள் திருநக்ஷத்ரங்களும் தவறாது க்ரமப்படி கொண்டாடப்பட்டது. வைபவ இறுதியில் ப்ரஸாதங்கள் வாங்கிக்கொள்ளப் பலர் வரத்துவங்கினர். பிறகு "ஸ்ரீஜயந்தி" உற்சவத்தை வெகுசிறப்பாகக் கொண்டாட பலபாகவதர்கள் ஒன்றிணைந்து முடிவுசெய்து 12 நாள் உற்சவமாகக் கொண்டாடினோம்.

இதில் அருளிச்செயல் கோஷ்டி, அலங்கார ஸேவைகள், புறப்பாடு, உபந்யாஸங்கள், ததீயாராதனை என மிகச்சிறப்பாக நடைபெற ஆரம்பித்தது. (தற்போது 8 வருடங்களாக நடைபெற்று வருகிறது)

இதில் பல ஊர்களிலிருந்தும் பல ஸ்ரீவைஷ்ணவர்கள் கலந்துகொள்ள ஆரம்பித்தனர். இவ்வுற்சவத்தில திருவெள்ளறை ஸ்ரீ உ வே அம்மாள் திருவேங்கடாசார்யஸ்வாமி, கோமடம் ஸம்பத் குமாராசார்யஸ்வாமி, தோப்புஸ்வாமி திருக்குமாரர் விளாஞ்சோலைப்பிள்ளை, ஈரோடு ஆராவமுதஸ்வாமி, ஸ்ரீ உ வே சேஷாத்ரி ஸ்வாமிகள் ஆகியோர் பற்பல சமயங்களில் உபந்யாஸங்கள் நிகழ்த்தினர்கள். மேலும் வேறு சமயங்களில் திருவெள்ளறை மேலத்திருமாளிகை ஸ்ரீ உ வே அம்மாள் ஸ்ரீ ஸௌம்ய நாராயணாசார்ய ஸ்வாமி, மீஞ்சூர் சீதாராமஸ்வாமி, கோவை ஸ்ரீ உ வே பாக்யநாதஸ்வாமி (அருளிச்செயல் பஜனை), ஈரோடு வேங்கட ராமஸ்வாமி போன்றோர்களும் மங்களாசாஸனம் செய்தருளினர்கள். இப்படிப்பட்ட பெரியவர்களின் திருவடிப்பொடி ப்ரபாவத்தால் இங்குள்ள மக்களுக்கு ஸ்ரீவைஷ்ணவத்தில் ஊற்றமும் ஈடுபாடும் விளைய ஆரம்பித்தது. வருடத்திற்கு வருடம் ஸ்ரீஜயந்தி உற்சவத்தில் ஆயிரக்கணக்கானோர்களும், ஆழ்வாராசார்ய திருநக்ஷத்திரங்களில் நூற்றுக்கணக்கானோரும் அந்வயிக்க ஆரம்பித்தனர். இக்கால கட்டங்களில் மட்டும் உபந்யாசம் நடத்திவந்த நாங்கள் வாரத்தில் 3 நாட்கள் சாணர்பாளையத்தில் உபந்யாசத்துக்கும், அருகிலிருக்கும் சிறுசிறு கிராமங்களில் வாரத்தில் ஒவ்வொரு உபந்யாசத்துக்கும் ஏற்பாடு செய்தோம். மேலும் "ஸ்ரீகிரிதர கோபால ஸேவா சாரிடபிள் டிரஸ்ட்" என்னும் ஓர் அமைப்பை, பல ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒன்றிணைந்து உருவாக்கி, பல கைங்கர்யங்களைச் செய்து வருகிறோம். இவ்வமைப்பை கவுந்தப்பாடி ஆடிட்டர் யதிராஜ ராமாநுஜஸ்வாமி நிர்வகித்து வருகிறார். அவரது பெருமுயற்சியால் எங்களது கைங்கர்யங்கள் குறைவில்லாமல் நடைபெற்று வருகின்றன. இதன் முக்கியக் கைங்கர்யம் திருவாராதனங்கள் குறைவில்லாமல் நடைபெறாத எம்பெருமான் ஸந்நிதிகளில் திருவாராதனங்கள் நடத்தி ப்ரஸாத விநியோகம் செய்து அங்குள்ள மக்களுக்கு ஸ்ரீவைஷ்ணவத்தை எடுத்துரைப்பதாகும்.

மேலும் தர்சன ப்ரவர்த்தகத்தில் ஆர்வமுடைய இளம் ஸ்ரீவைஷ்ணவர்களை நன்கு தர்சனத்தை உணரச்செய்து பல பகுதிகளுக்குச் சென்று அடிப்படை வைஷ்ணவத்தைக் கற்பிக்கவும் ஏற்பாடுகள் செய்தோம். சிறு குழந்தைகளுக்கு 'திருப்பாவை' 'கோயில் திருவாய்மொழி' போன்ற ப்ரபந்தங்களை இலவசமாக வழங்கியும், கற்பித்தும், பரிசுப் போட்டிகளும் நடத்த ஆரம்பித்தோம். மேலும் ஆங்காங்கே இருக்கும்

வைஷ்ணவர்கள் யாவரும் ஒன்றுக இணைந்து திவ்யதேச யாத்திரை செல்லவும் ஏற்பாடு செய்தோம். இதுபோன்ற செயல்களால் ஸ்ரீவைஷ்ணவம் தழைக்க ஆரம்பித்தது. அவலநிலையில இருந்த ஈரோடு மாவட்டம் தற்போது துளிர்த்தெழக் காரணம் நம் புத்தூர் ஸுதர்சன ஸ்வாமியின் நூல்களே ஆகும். ஸ்வாமியின் எழுத்துக்கள் பட்டி தொட்டிகளிலெல்லாம் சென்று சேர்ந்து பாமரர்களையும், படித்தவர்களையும், அறிவாளிகளையும் திருத்துகிறது. ஸ்வாமி எழுதி வெளியிட்ட விஷ்ணுசித்தவிஜயம், சாதிமத ஆராய்ச்சி, சங்ககாலத் தமிழர் சமயம், சங்ககாலத் தமிழர் சமயமே கம்பனின் சமயம், விசிஷ்டாத்வைதமத விஜயம், ஸுதர்சனர் கேள்வி—பதில் சதகங்கள் ஆகிய நூல்களின் மூலம் எம்பெருமானின் பரத்வத்தை யாவரும் அறிந்து கொள்ளலாம்படி இருப்பதால், படித்தவர்களுக்கு இந்நூல்களை வழங்கியும், படிப்பறிவில்லாதவர்களுக்கு அதன் ஸாரப்பொருளை நன்கு புரியும்படி எடுத்துரைத்தும் வருகிறோம். மேலும் "ஸுதர்சனர் 1008" என்கிற புத்தகம் (3 பாகமும்) ஆரம்பநிலை வைஷ்ணவர்களுக்கும் மாணவர்களுக்கும இளைஞர்களுக்கும் ஸ்ரீவைஷ்ணவத்தை ஆரம்பத்தில் இருந்து அறிந்து கொள்ள மிகுந்த உதவியாய் இருப்பதால் அவர்களிடம் மிகுந்த வரவேற்பைப் பெற்றுள்ளது எம்பெருமானின் பரத்வத்தை உணர்ந்து ஆழ்வார்களின் அருளிச்செயலில் ஆழங்காற்பட்டு அதன் பொருளை அறிய விரும்புவோர்களுக்கு ஸ்வாமியின் "அருளிச்செயல் எளியநடை வ்யாக்யானங்கள்" பேருதவி புரிகின்றன. மேலும் மேலும் அருளிச்செயலின் பொருள்கள் பூர்வாசார்ய வ்யாக்யானங்களை அநுஸரித்து அதன் ரஸம் சிறிதும் குன்றுமல் ஸ்வாமி எடுத்துரைக்கும் பாங்கு நேரே காலக்ஷேபம் கேட்பதுபோல் அமைந்துள்ளது. மேலும் ரஹஸ்ய க்ரந்தங்களை அறிய ஆசையிருந்தும் வடமொழியறிவு போதாத ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு முமுக்ஷுப்படியின் எளியநடை விவரணமான "ரஹஸ்யத்ரய விவரணமும்" பூர்வாசார்யர்களின் அநுஷ்டானங்களை அறிய "வார்த்தாமாலை விவரணமும்" மிகப் பயனுள்ளதாய் இருக்கிறது. அதோடு எம்பெருமானுர் தர்சனத்தின் ஸாரப்பொருளையறிய "யதீந்த்ரமத தீபிகா விவரணம்" ஸ்ரீபாஷ்யத்தின் பொருளையுணர 'சாரீரககாரிகாவளீ விவரணம்' கீதையின் பொருளுணர 'கீதா வ்யாக்யானங்கள்', தத்வங்களையுணர 'தத்வத்ரய ஸங்க்ரஹ விளக்கம்' போன்ற நூல்களின்மூலம் மிக எளிதாய் அனைவரும் அறியும்படி ஸ்வாமி விளக்கியிருக்காவிடில் இதன் பொருள்கள் ஸம்ஸ்க்ருத ஜ்ஞாநிகளுக்கே பயன்பட்டிருக்கும் என்பதில் ஐயமில்லை.

மேலும் ஸுதர்சனர் கேள்வி—பதிலால் பற்பல ஸம்ப்ரதாய அர்த்தங்களையும், "அக்நிஹோத்ரியும் வைஷ்ணவமும்" என்ற நூலின் மூலம் குத்ருஷ்டிகளையும் பாஹ்யர்களையும் எவ்வாறு அடக்குவது என்பதையும் நன்கு கற்றுக்கொண்டோம். சது:ஶ்லோகீ வ்யாக்யானம், பிராட்டி பற்றிய சர்ச்சை முதலியவற்றால் நமது தர்சனம் தெள்ளத் தெளிவாக விளங்குகிறது. மேலும் "தென்கலையும் வடகலையும்" என்ற நூலின் மூலம் அவரவர் தர்சனத்தின் உண்மைக் கோட்பாடுகளை அறியவும் மிகுந்த உதவி புரிந்துள்ளது. இவ்வாறு ஸ்வாமியின் எழுத்துக்களால் கவரப்பட்டு 50 பேர் பஞ்சஸம்ஸ்காரம் செய்து கொண்டனர். மேலும் 50 பேர் விரைவில் செய்து கொள்ளத் தயாராய் உள்ளனர். இவையனைத்தும் ஸ்வாமியின் திருவடிப்ரபாவமே ஆகும். மேலும் பல சைவர்களும், கிறிஸ்துவ மதத்திற்குச் சென்றவர்களும் திருந்தியுள்ளனர். ஆங்காங்கேயுள்ள ஸந்நிதிகளிலும் தேவதாந்தர ஸம்பந்தத்தினை அறவே ஒழிக்கப் பல ஏற்பாடுகள் செய்து வருகிறோம். அர்ச்சகர்களுக்கும் ஸ்வாமியின் நூல்களைக் கொடுத்துத் தெளிவித்து வருகிறோம். இன்னும் சில வருடங்களில் ஈரோடு மாவட்டத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் கொண்டாடும் மாவட்டமாக உருவாக்குவதே எங்கள் அனைவரின் முக்கிய நோக்கமாகும். இதற்கு விரைவில் எம்பெருமான் க்ருபை செய்தருள சதாபிஷேக நன்னாளில் ஸ்வாமி ஆசீர்வதித்து மங்களாசாஸனம் செய்தருளவும், அனைத்து ஸ்ரீவைஷ்ணவர்களையும் எம்பெருமானையும் ப்ரார்த்திக்குமாறு ஸ்வாமி கேட்டுக்கொள்ளவும் வேண்டுமென்றும் புத்தூர் ஸ்ரீஸுதர்சனம் ஸ்வாமியின் திருவடித் தாமரையில் ஈரோடு மாவட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் ப்ரார்த்தனை செய்து கொள்கிறோம். மேலும் மேலும் ஸ்வாமியின் சாதனைகள் தொடர்ந்து பல்லாண்டு பல்லாண்டு வாழ, திருவரங்கம் திவ்ய தம்பதிகளை இறைஞ்சுகிறோம்.

---

**குறிப்பு :—** ஸ்ரீவைஷ்ணவ மாநாடுகளை நடத்தும் திருவுள்ளம் கொண்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் ஈரோட்டில் நடத்தினால் யாவரும் க்ருதஜ்ஞர்களாய் இருப்போம்.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# ஸுதர்சனர் மாண்பு

[ஸ்ரீ கி. இரகுநாதன், D.C.E., / P.W.D.
ஆமூர் அக்ரஹாரம், ஆமூர்.]



திருவெள்ளறை புண்டரீகாக்ஷப் பெருமாளின் விசேஷகடாக்ஷமடியாகத் திருவவதாரம் செய்தருளின நம் ஸுதர்சனர் ஸ்வாமி நாடு நகரமும் நன்கறிய சதாபிஷேக வைபவம் கண்டருளினார். ஆழ்வாராசார்யர்களைப்போல் எம்பெருமானுக்கே அற்றுத் தீர்ந்து இன்றளவும் ஸ்ரீவைஷ்ணவ தர்ஶந நிர்வாஹம் செய்து போருமவர் நம் ஸ்வாமி. நம் தரிசனத்துக்காக லௌகிக வாழ்க்கையில் உயர் பதவிகளை உதறித் தள்ளிய மஹானுவார்.

பதிப்புத் துறையில் நம் ஸ்வாமியின் பணி அபரிமிதம். ஸுதர்சனர் ஸ்வாமி இதுகாறும் பதிப்பித்திருக்கும் க்ரந்தங்களை அடுக்கினால் பரமபதத்திற்கு ஏணியாக அமையும் என்று சொல்லுமளவுக்குப் பலபல க்ரந்தங்களை வெளியிட்டுள்ளார். விஷ்ணுசித்த விஜயம் முதலான க்ரந்தங்கள் மூலம் ஸ்வாமி பரதத்வ நிர்ணயம் செய்து வருவதால் நீசச்சமயங்கள் மாண்டன; நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது. ஸ்வாமியின் பகவத் விஷயப் பதிப்புகளின் மூலம் தென்குருகை வள்ளலின் தமிழ் மறை வாழ்ந்தது.

வித்யாமதம், தன்மதம், குலமதம் ஆகிய முக்குறும்பறுத்த கூரத்தாழ்வானைப்போல், நம் ஸுதர்சனர்ஸ்வாமியும் முக்குறும்பறுத்தவர். எங்களாழ்வானைப்போல் மேதாவிலாஸம் பெற்றவர். க்யாதி லாப பூஜைகளுக்காகத் தம் ஜ்ஞானத்தைப் பயன்படுத்தமாட்டார். ஸ்வாமியை எல்லோரும் எளிதில் அணுகலாம். படித்தவன், பாமரன் என்று பாராமல் எல்லோரிடமும் எளிமையாகப் பழகுவார்.

"சொல்லார் தமிழொரு மூன்றும், சுருதிகள் நான்கும், எல்லை யில்லா அறநெறியாவும் தெரிந்த" இராமானுசரைப்போல் விளங்கு பவர் நம் ஸ்வாமி. இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழி லும் வல்லவர் என்பதற்கு ஸ்வாமியின் திவ்யப்ரபந்த வ்யாக்யான விவரணங்களே சான்றாகும். ஸ்வாமி சுருதிகள் நான்கிலும் புலமை பெற்றவர் என்பதற்கு விஷ்ணுசித்தவிஜயம் ஒன்றே போதும். எல்லையில்லா அறநெறியாவும் தெரிந்தவர் என்பதை 'ஸுதர்சனர் பதில்கள்' மூலம் உணரலாம். நம் ஸ்வாமி ஜ்ஞா நத்தோடு ஸௌலப்ய வாத்ஸல்யாதி கல்யாண குணங்களும் மிக்கவர்.

நம் ஸம்ப்ரதாய ரக்ஷணத்திற்காக ஏற்படுத்தப்பட்ட தென்னா சார்ய ஸம்ப்ரதாய ஸம்ரக்ஷண ஸபா, பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ் ணவ ஸபா, உபயவேதாந்த பிரசார ஸபா ஆகிய ஸ்பைகளில் பதவி வகித்து அந்த ஸபைகள் மூலமும் பல ஸம்ப்ரதாயப்பணி களைச் செய்தவர் ஸ்வாமி.

'மெய்ந்நாவன் மெய்யடியான்' [பெரியாழ் திரு. 4-9-11] என்று பெரியாழ்வார் அருளிய ரீதியில், நம் ஸ்வாமி உண் மையை உரைக்கத் தயங்காத நாவினராய், உண்மையான வைணவத் தொண்டராய் விளங்கிவருவது கண்கூடு. ஸ்வாமி தம் தேவிகளுடன் அரோக த்ருடகாத்திரராய்ப் பல்லாண்டுகள் வாழ, பெரியபெருமாள் பெரிய பிராட்டியார் திருவடிகளில் பிரார்த் திக்கிறேன்.

**பச்சையிட்ட ராமர் பதம் பணிந்தோன் வாழியே!**
**பராங்குசனே பரனென்று காட்டினான் வாழியே!**
**தேசமுய்யக் கொண்டவரின் தாள் தொழுவோன் வாழியே!**
**தென்னரங்கர் சீரருளுக் கிலக்கானான் வாழியே!**
**கார்த்திகையில் சோதிதனில் அவதரித்தோன் வாழியே!**
**கருணையினால் உபதேசம் மிகச்செய்தான் வாழியே!**
**விட்டுசித்தர் அடியிணையில் அன்பு கொண்டான் வாழியே!**
**விண்டுமதம் சிறக்கவந்த ஸுதர்சனர்தாள் வாழியே!**



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:    ஸ்ரீவிஷ்ணுசித்த குரவே நம:

# காக்குமியல்வினன் கண்ணபெருமான்

[ஸ்ரீ. விஷ்ணுசித்தன், மேலத்திருமாளிகை, திருவெள்ளறை.]



கண்ணனெம்பெருமான் கீதையில் தான் அவதரிப்பதற்குக் காரணம் கூறுகிறான்— 'பரித்ராணாய ஸாதூநாம்' (ஸாதுக்களைக் காப்பதற்காக) என்று. கண்ணனால் காக்கப்பட்டவர்களுள் முக்கியமானவர்கள் கஜேந்த்ராழ்வானும், த்ரௌபதியும்.

"எம்பெருமான் ஆனையைக் காத்ததுண்டாகிலும். காத்தவன் திருநாட்டில் எழுந்தருளியிருக்கின்ற பரவாஸுதேவனேயொழிய, கண்ணனன்றே. ஆகையால் கண்ணன் ஆனையைக் காத்தான் என்பது பொருந்துமா" என்று கேட்கலாம். இங்குக் கேண்மின். எம்பெருமான் கஜேந்த்ராழ்வானைக் காத்தான் என்று சொல்லுமிடத்துத் திருமங்கையாழ்வார் "நாகத்தின் நடுக்கம் தீர்த்தாய் .. கண்ணனே களைகண் நீயே" [பெரிய திரு. 4-6-1] என்று கஜேந்த்ராழ்வானின் நடுக்கத்தைத் தீர்த்தவன் கண்ணன் என்றருளிச்செய்தார். கஜேந்த்ர ஸம்ரக்ஷணத்தைக் கூறும்போது "கண்ணனே கரிகோள் விடுத்தானே" [பெரியாழ் திரு. 5-1-8] என்று பெரியாழ்வாரும், "ஆனைகாத்து ஓரானைகொன்று அதன்றி ஆயர்பிள்ளையாய்" [திருச்சந்த. 40] என்று திருமழிசைப்பிரானும் கஜேந்த்ராழ்வானாகிற யானையைக் காத்தவன் கண்ணன் என்றருளிச் செய்தனர்.

புத்தூர் வக்கீல் ஸ்வாமியும் ஆனைகாத்த கண்ணரே. ஸ்வாமிக்கு 'கண்ணன்' என்றொரு திருநாமமுண்டு. திருநெடுந்தாண்டகத்தில் திருமங்கையாழ்வார், திருமாலிருஞ்சோலையழகரை 'தென்னானாய்' என்று விளித்தார். ஆக, திருமாலிருஞ்சோலையழகர் ஓரானை என்றாயிற்று. 'திருமாலிருஞ்சோலைமலை அழகருக்குச் சொந்தமன்று' என்று சைவர்கள் சிலர் வழக்காடியபோது புத்தூர் நின்ற கண்ணரே 'திருமாலிருஞ்சோலைமலை அழகருக்கே சொந்தமானது' என்று வாதிட்டு, தென்னானுயர் பொருப்பை ஸுந்தரதோருபுஜனான மாலிருஞ்சோலை நம்பிக்கு உரித்தாக்கினார். ஆக, ஸ்வாமி தென்னானையைக் காத்த கண்ணராகத் திகழ்கிறார்.

அன்றிக்கே, யானையைக் காத்தலாவது எம்பெருமானைக் காத்தல். திருமங்கையர்கோன் கலியன் 'என் ஆனாய்! வந்தடைந்தேன்' என்று அருளிச்செய்கையாலும், குருகூர்ச் சடகோபன் 'என்னானை என்னப்பன்' என்று அருளிச் செய்கையாலும் எம்பெருமானை யானை என்பது தகும். அவனைக் காத்தலாவது அவனே பரதேவதை என்று ஸ்தாபிப்பது. விஷ்ணுபரத்வத்தை ஸ்தாபிப்பதற்காகவே நம் ஸ்வாமி அவதரித்தார் என்று சொன்னால் அது ஈஷத்தும் அதிசயோக்தியாகாது. பெரியாழ்வார் பாண்டிய சபையில் வேண்டிய வேதங்களோதி 'நாராயணனே பரன்' என்று ஸ்தாபித்ததை நாம் காதால் கேட்டிருக்கிறோமேயொழியக் கண்ணால் கண்டிலோம். அக்குறைதீர, பெரியாழ்வாரின் அபராவதாரம் என்று சங்கிக்கும்படி எழுந்தருளியிருக்கும் புத்தூர் ஸ்வாமி தமது 'விஷ்ணுசித்தவிஜயம்' என்கிற மஹா க்ரந்தத்தில் விஷ்ணு பாரம்யத்தைத் நன்கு நிலைநாட்டி வருகிறார். இலிங்கத்திட்ட புராணத்தவரும், சாக்தரும் வாய்திறக்க வழியில்லாமல் செய்துவரும் ஸ்வாமிக்கு நிகர் நாவலம் பெரிய தீவினில் மற்றொருமில்லை. ஆக, கண்ணனே ஆனை காத்தவன் என்று ஆழ்வார்கள் அருளிச்செய்தாற்போலே, புத்தூரில் தோன்றிய கண்ணனும் ஆனை காத்தவராகிறார்.

த்ரௌபதி 'கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷமாம் சரணாகதாம்' என்று கதறியபோது, அவள் மானங்காத்து, அவளது குழலையும் நூற்றுவரையும் சேரமுடித்து அவள் சபதத்தை நிறைவேற்றினான் கண்ணன். ஸ்வாமியும் 'த்ரௌபதீ ப்ரபத்தி ஸித்தாஞ்ஜநம்' முதலான நூல்களில் அவளைக் காத்தது திருநாமமென்றும், அவள் செய்த ப்ரபத்தி பிறகு பலித்தது என்றும் காட்டி, ஏதன்முகேந திருநாம ஸங்கீர்த்தனம் ப்ரபத்திக்கு அங்கமன்று என்று ஸ்தாபித்து ப்ரபத்தியின் தத்துவத்தை எடுத்துக்காட்டி, பிள்ளைலோகாசார்யருடைய முமுக்ஷுப்படி ஸ்ரீவசநபூஷண சூர்ணிகைகளை விரோதமில்லாமல் நயநம் செய்து த்ரௌபதியையும் காத்து, பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கு உண்மைப் பொருளைக்காட்டி, அந்த ஸ்ரீஸூக்திகளையும் ரக்ஷித்தருளினார்.

பெரியவாச்சான்பிள்ளைக்கும் வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கும் இயற்பெயர் கண்ணன் என்பதேயாகும். இவ்விரு கண்ணரும்

அருளிச்செயலைக் காத்த குணவாளர்களாவர். இவ்விருவரும் அவதரித்து ஆழ்வார்களுடைய ஸ்ரீஸூக்திகளுக்கு அருமருந்தன்ன வ்யாக்யானங்களருளி, அவற்றை ஏடுபடுத்தி வைத்திலரேல் அருளிச்செயல் இருந்தும் நம்மால் அவற்றின் உட்பொருளை அறிய முடியாது. அவ்வாசிரியர்கள் தென்கலையும் வடகலையும் திகழ்ந்த நாவரானகையால் செந்திறத்த தமிழாகிய பவழத்தையும், தேவபாஷையான ஸம்ஸ்க்ருதமாகிய மணியையும் சேர்த்து மணிப்ரவாள நடையில் தங்கள் வ்யாக்யானங்களை நன்கமைய வைத்தனர். ஸம்ஸ்க்ருதமும் அறியாது, தமிழிலும் ஆழ்ந்த அறிவில்லாத நாம் அந்த வ்யாக்யானங்களை ஸேவித்தால் 'அம்மானாழிப்பிரான் அவன் எவ்விடத்தான் யானார்' என்று ஆழ்வார் இருய்த்தாப்போலே, கம்பீரமான ஆசார்யர்களுடைய பெருவார்த்தைகளின் சீர்மையையும், நமது அறியாமையையும் பார்த்து அகலநேரும். பரமகாருணிகர்களான ஆசார்யர்கள் அருளிச்செய்த ஆழ் பொருள்களை நாம் சிந்தாமல் கொள்ளவேணும் என்று ஆசார்யர்களைப்போல் கருணையுடைய ஸ்வாமியின் திருத்தகப்பனார் அந்த வ்யாக்யானங்களைப் பண்டிதர்களும் பாமரர்களும் மெச்சும் வண்ணம் எளிய தமிழில் 'எளியநடை விவரணம்' என்று பேரிட்டு நாட்டி வைத்தார். வால்மீகியைப்பற்றி போ₄ஜகவி 'மது₄மயப₄ணிதீநாம் மார்க்க₃த₃ர்ஶீ மஹர்ஷி:' என்றான். இனிமையான அர்த்தங்கொண்ட ஶ்லோகங்களுக்கு வழிகாட்டி வால்மீகி என்றபடி. அதேபோல ஸ்வாமியின் திருத்தகப்பனாரும் ஆழ்வார்களின் செவிக்கினிய செஞ்சொற்களுக்குப் பெரியவாச்சான்பிள்ளையருளிய வ்யாக்யானங்களை ஸர்வர்க்கும் அதிகரிக்கலான எளியநடையில் விவரிப்பதற்கு வழிகாட்டியாவார். பிதுர்வசந நிர்த்தே₃ஶத்தால் ஸ்வாமி அதை ஒன்று நூறுயிரமாக நடத்திக்கொண்டு போருகிறார்.

ஸம்ஸ்க்ருதப் பழமொழிகளுக்கு ஸுப₄ாஷிதங்களென்று பெயர். அவற்றின் சிறப்பை விளக்கவந்தவொரு ஶ்லோகம் :—

த்₃ராக்ஷா ம்லாநமுகீ₂ ஜாதா ஶர்க்கரா சாஶ்மதாம் க₃தா |
ஸுப₄ாஷிதரஸஸ்யாக்₃ரே ஸுதா₄ பீ₄தா தி₃வங்க₃தா ||

என்பது. இதன் பொருளாவது — "த்ராக்ஷையானது வாடிய முகத்தை உடையதாயிற்று. சர்க்கரை கல்லின் தன்மையயடைந்தது; அதாவது—கற்கண்டாயிற்று. ஸுபாஷிதங்களின் சுவைக்கு

முன்னால் நிற்க பயப்பட்டு அம்ருதமானது தேவலோகத்திற்குச் சென்றுவிட்டது'' என்பதாகும். ஆக, இனிமையான பொருள்களான த்ராக்ஷை, சர்க்கரை, அம்ருதம் ஆகிய மூன்றும் ஸுபாஷிதங்களின் சுவைக்கு ஈடாகாதென்றதாயிற்று. அதேபோல் ஸ்வாமியின் அருளிச்செயல் வ்யாக்யாந விவரணங்களுக்கு, தேனும் பாலும் கன்னலும் அமுதும் நேராகா என்பதை அறியும் உலகெல்லாம். வைகுந்தத்தடியரோடிருந்து இந்திரலோகமாளும் அச்சுவையும், ஸ்வாமியினுடைய விவரணங்களின் அநுபவமாகிய இச்சுவைக்கு ஈடாகாது என்றால், ஸ்வாமியினுடைய விவரணங்களின் போக்யதை பற்றிப் பேசத்தானாவதுண்டோ?

ஸ்ரீவைஷ்ணவ ஏகதேஶிகளில் சிலர் 'பிராட்டி எம்பெருமானுக்குத் துல்யை. அவளுக்கு ஜகத்காரணத்வம் முதலான பரமாத்மாஸாதாரணங்களான குணங்களுமுண்டு' என்று சொல்லி அதற்குச் சார்பாக ஆளவந்தாருடைய சது:ஶ்லோகீ, கூரத்தாழ்வானுடைய ஸ்ரீஸ்தவம், பராஶரபட்டருடைய ஸ்ரீகுணரத்னகோஶம், வேதாந்தவாசிரியருடைய க்ரந்தங்கள் இவற்றிலிருந்து சில ஶ்லோகங்களைக் காட்ட, நம் ஸ்வாமி 'ஸ்ரீதத்வஸர்வஸ்வம்', 'பஞ்சமபக்ஷஶததூஷணி' ஆகிய நூல்கள்மூலம் அந்த வாதங்களை நிரஸித்து, பிராட்டியின் பாரதந்த்ரியத்தைக் காத்தார். பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளின் உண்மைப் பொருளைக் காட்டி அந்த ஸ்ரீஸூக்திகளையும் ரக்ஷித்தருளினார்.

ஆக, எம்பெருமானுடைய பரத்வம், பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகள், பிராட்டியின் பாரதந்த்ர்யம் ஆகியவற்றை ரக்ஷித்துக் காக்குமியல்வினராகத் திகழ்கிறார் நம் ஸ்வாமி.

''கு₃ரும் ப்ரகாஶயேத் தீ₄மாந்'' என்றும், ''ப்ரத்யக்ஷே கு₃ரவ: ஸ்துத்யா:'' என்றுமுள்ள வசனங்களின்படி ஆசார்யனுக்குத் தனியனிடுவது ஶிஷ்யக்ருத்யமாகும். இந்த வசனங்களுக்குச் சேர, ஒரு ஶ்லோகத்தை ஸ்வாமி திருவடிகளில் விண்ணப்பித்து இக்கட்டுரையை நிறைவு செய்கிறேன்.

ஸ்ரீமத்க்ருஷ்ணார்யஸூக்தேர் விபுலவிவரணம் கர்த்துமத்ராவதீர்ணம்
புத்ரம் ஸ்ரீவாஸஸூரேஸ் ஸகலகு₃ணநிதி₄ம்
பட்டநாத₂ஸ்ய ப₄க்தம் |
ஸ்வாதீநக்ஷத்ரஜாதம் மது₄ரகி₃ரமஶ்த்யப்₃த₃மத்₃யாப்தவந்தம்
வந்தே₃ தம் விஷ்ணுபார்ம்யகத₂நஹ்ருஷிதம் ஜ்ஞாநிநம்
க்ருஷ்ணமார்யம் ||

[க்ருஷ்ண ஸமாஹ்வரான பெரியவாச்சான்பிள்ளையின் வ்யாக்யாந ஸ்ரீஸூக்திகளுக்கு விபுலமான விவரணமருளிச் செய்வதற்காக இங்கு அவதரித்தவராய், ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியின் திருக்குமாரராய், ஆத்ம குணங்களுடைய ராசிக்கு வைத்தமாநிதியாய் விளங்குபவராய், பெரியாழ்வாருடைய பக்தராய், அவர் அவதரித்த ஸ்வாதியில் அவதரித்தவராய், தேனும் பாலும் கன்னலுமான ப்ரிய வாக்யங்களைச் சொல்பவராய், வண்புகழ் நாரணனுடைய பரத்வத்தைச் சொல்லுவதாலேயே ஸந்தோஷமடைந்தவராய், தெளிவுற்ற சிந்தையராய், இப்போது எண்பதாவது திருநக்ஷத்ரம் கண்டருளிய கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமியை மகுடம் தாழ்த்தி வணங்குகிறேன்.]

ப்ரார்த்த₂நா பஞ்சகத்தில் ஒரு ஶ்லோகம் :—

ஆமோக்ஷம் லக்ஷ்மணார்ய! த்வத்ப்ரப₃ந்த₄பரிஶீலநை: |
காலக்ஷேபோஸ்து நஸ்ஸத்₃பி₄: ஸஹவாஸமுபேயுஷாம் ||

[எம்பெருமானாரே! பரமபதமடையும் வரை தேவரீருடைய நவநிதி போன்ற க்ரந்தங்களை, காலக்ஷேப சதுரர்களான ஸ்வாமிகளுடன் சேர்ந்து பரஸ்பரம் போதித்து இன்புறுவதாலேயே எங்களது பொழுது செல்லட்டும்.] இந்த ஶ்லோகத்தில் சொன்னபடியே, நாமும் ஸுதர்சனர் ஸ்வாமியின் க்ரந்தங்களை வாசித்தும், ஸதாசார்யர்களான ஸ்வாமிகள் அந்த க்ரந்தங்களிலிருந்து இன்னமுதமூட்ட அதைப் பருகியும் போதுபோக்குவோம்.

ஸ்ரீவைஷ்ணவர்களின் பாக்ய பரிபாகத்தால் நல்லூற்றூர்பொலிவெய்த வந்து தோன்றிய நம் ஸ்வாமி, தொண்டர்க்கமுதுண்ண நற்றமிழில் சொன்ன அறநூல்களால் நாட்டையுய்த்து நம்மை நைவித்து நீராய் உருக்கிக்கொண்டு, வேதநூல் பிராயம் புகுந்து, திக்குற்ற கீர்த்தியுடன் வையம் மன்னி வீற்றிருந்து இப்பிறப்பே மகிழ, காக்குழியல்வினைனுன வெள்ளறையுள் கல்லறைமேல் நின்ற கண்ணன் அருள்புரியவேணும்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# உலப்பில் கீர்த்தியம்மான்

[ அம்மாள் ஸ்ரீ ஸௌம்ய நாராயணாசாரியர், மேலத்திருமாளிகை, திருவெள்ளறை. ]



ஸ்வாமி நம்மாழ்வார் திருவேங்கடமுடையானுக்கு' 'உலப்பில் கீர்த்தியம்மான்' என்று ஓர் அழகான திருநாமம் இட்டருளினர். உலப்பாவது முடிவு. முடிவில்லாத புகழையுடையவர் திருமலையப்பன். சதாபிஷேக வைபவம் கண்டருளும் ஸுதர்சனர் ஸ்வாமியும் உலப்பில் கீர்த்தியம்மானே. ஸ்வாமி எல்லையற்ற புகழையுடையவர் என்பதில் எள்ளளவும் ஸந்தேஹமில்லை. ஸ்வாமியின் ஷஷ்ட்யப்தபூர்த்தி மலரிலும், ஸப்ததிபூர்த்தி மலரிலும் வித்வான்களும், அறிஞர்களும் ஸ்வாமியின் கீர்த்தி பற்றி வெளியிட்டுள்ளமையை அறியும் உலகெல்லாம். இதோ சதாபிஷேக வைபவ மலரும் வாடாமலராக மிளிர்கின்றது. நம் ஸ்வாமியின் கீர்த்திவெள்ளத்தில் சில திவலைகளை இங்கு அநுபவிக்க விழைகிறேன்.

ஶ்ரிய:பதியான எம்பெருமான் ஸம்ஸாரிகளைத் திருத்திப் பணிகொள்வதற்காக ராமனாகவும், கண்ணனாகவும் அவதரித்தபோது ப்ரக்ருதி வசப்பட்ட ஜனங்கள் ஸர்வேஶ்வரன் என்று உணராமல், அரசனாகவும் இடையனாகவுமே மதித்தார்கள். "நம்மை ரக்ஷிப்பதற்காக ஸ்ரீவைகுண்டத்திலிருந்து ஹரி வந்து பிறந்திருக்கிறான்" என்று உணரவில்லை. எம்பெருமானார் அவதரித்தார். மாதவனை மதிக்காத உலகோர்கள் எல்லாம் அண்ணலிராமாநுசன் வந்து தோன்றினவாறே அவர் திருவடிகளைக் கிட்டி உய்ந்துபோனார்கள்.

பரமபதநாதன் ஒரு சமயம் ஜகத்ரக்ஷண சிந்தையில் ஈடுபட்டிருந்தபோது, திருவநந்தாழ்வானுக்கும் பரமபத நாதனுக்கும் ஸம்வாதம் ஏற்பட்டதாம். இறுதியில் அஜ்ஞானத்தினால் மயங்கி நிற்கும் இவ்வுலகினரை, ஜ்ஞாநோபதேஶம் செய்து நல்வழிப் படுத்துவதற்காக ஆதிஶேஷனை ஸ்ரீராமாநுஜராக அவதரிப்பித்

தான் பரமபதநாதன். இதே ரீதியில், ஸ்ரீராமாநுஜரைப்போலே ஸம்ஸாரிகளைத் திருத்திப் பணி கொள்வதற்காக நம் ஸ்வாமியை அவதரிப்பித்தான் கண்ணனெம்பெருமான்.

"த்ரிவாதிஸம் ஹரிம் த்யாயந் உவாஸ ஜகதீஸ்வரம்" [ப்ரபந்நாம்ருதம்] என்று ஸத்புத்ரனை விரும்பி ஜகத்பதியான ஹரியை அல்லும் பகலும் தியானித்துக்கொண்டு வாழ்ந்துவந்த ஸ்ரீராமாநுஜரின் திருத்தகப்பனாரான கேஸவஸோமயாஜியைப்போல், நம் ஸ்வாமியின் திருத்தந்தையாரும் புத்ரபாக்யத்துக்காகப் பன்னிரண்டு திருவோணம் திருவெள்ளறை எம்பெருமான் திருவடிகளில் மந்திர மாமலர் கொண்டு, சொல்லார வாழ்த்தி நின்றேத்தி வந்தார். புண்டரீகாக்ஷனுடைய நெடுநோக்கின் பயனாக ஸுதர்சனர் ஸ்வாமி திருவவதாரம் செய்தருளினார்.

பரமபதத்தில் எம்பெருமானுக்கும், ஆதிசேஷனுக்கும் ஸ்ரீராமாநுஜரின் திருவவதாரத்தில் ஸம்வாதம் நிகழ்ந்ததுபோல், திவ்ய தேசங்களுக்கெல்லாம் ஆதியான திருவெள்ளறையில் புண்டரீகாக்ஷப் பெருமாளுக்கும், பங்கஜவல்லித் தாயாருக்கும் நம் ஸ்வாமியின் அவதாரத்தில் ஸம்வாதம் நிகழ்ந்ததோ என்று இங்கே ஸங்கிக்கலாகிறது.

பெருமாள் :— பக்தர்கள் அனைவரும் என்னை 'காருணிகனான ஸர்வேஸ்வரன்' என்று கொண்டாடுகிறார்கள். ஆனால், பராசரபட்டர் 'நாச்சியாரின் கருணைவிழி உம்மால் விழிக்கலாகாது' என்று நிர்ணயித்துவிட்டாரந்தோ! உன் தயாகுணத்தின் சீர்மையை யாரால் இல்லை செய்ய இயலும்? அஃதெல்லாம் இருக்கட்டும். இப்போது ஏதோ சொல்லவருவதுபோல் தோன்றுகிறதே; உன் மனத்தால் என் நினைந்திருந்தாய்?

தாயார் :— எந்தை பிரானே! திருவெள்ளறைப் பொருப்ப! நின் காதலை அருள் எனக்கு. அனைத்துலகுமுடைய அரவிந்தலோசன! அடியேன் சொல்லுவதை நன்கு செவிமடுக்கவேணும்.

பெருமாள் :— அதற்காகத்தானே இருக்கிறேன். உன் விருப்பத்தை உடனே சொல். ஏதேனும் புருஷகாரக்ருத்யமோ?

தாயார் :— ஆமாம். உள்ளத்தே உறையும் மாலான தேவரீர் அறியாததுண்டோ? இந்த க்ருத்யத்துக்காகத்தானே இறையும் அகலாமல் இருக்கும்படி அடியேனை தேவரீர் நியமித்துள்ளீர். பக்தவத்ஸல! புத்தூரிலிருந்து புத்ரார்த்தியாக வரும் நம் பக்தனை தேவரீர் கடாக்ஷிக்கலாகாதா? கேசவஸோமயாஜிக்கு ஸ்ரீராமாநுஜரை அளித்த வள்ளலாயிற்றே தேவரீர்.

பெருமாள் :— அதெல்லாம் சரி, இப்போது நான் என்ன செய்யவேணும்?

தாயார் :— நின்ற பிரானே! நீள்கடல் வண்ணா! தேவரீருடைய நெடுநோக்கு புத்தூர் பக்தனிடத்தே பாயவேணும்.

பெருமாள் :— என்னமோ 'நெடுநோக்கு' என்கின்றாயே. ஒன்றும் அதனை உணரேன் நான்.

தாயார் :— அழகிது! ஸர்வஜ்ஞரான தேவரீர் அறியாததுண்டோ? என் பைந்தாமரைக் கண்ணனே! தேவரீரது கடாக்ஷம் பக்கம் நோக்கறப் பண்ணின் விசேஷ கடாக்ஷமாயிற்றே. சொல்ல வந்ததைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். மெய்ந்நின்று கேட்டருளாய். தேவரீரைச் சொல்லார வாழ்த்தின பெரியாழ்வாரும், 'அளப்பிலாரமுது' என்று கொண்டாடின திருமங்கையாழ்வாரும் விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்தின் அர்த்த விசேஷங்களையெல்லாம் தமது திவ்யப்ரபந்தங்களில் பரக்க வெளியிட்டுள்ளார்கள். அவ்விருவரின் உள்ளம் குளிர்வதற்காக ஸ்ரீராமாநுஜரைப்போல் ஒருவரை தர்சன நிர்வாஹகராம்படி நன்கு கடாக்ஷித்தருளவேணும். அடியேன் வேண்டுவதீதே.

பெருமாள் :— உன் ஆசையை உடனே நிறைவேற்றுகிறேன். 'மெய்ந்நாவன் மெய்யடியான் விட்டுசித்தன்' என்ற சிறப்பைப் பெற்ற பெரியாழ்வார் அவதரித்த ஸ்வாதீ நக்ஷத்ரத்திலேயே ஸ்ரீராமாநுஜர் போன்ற ஓர் உத்தமனைப் பிறப்பிக்கிறேன். 'அடையார் சீயம்' என்ற அடைமொழி பெற்ற திருமங்கையாழ்வார் அவதரித்த கார்த்திகை மாதத்தில் ஜனிக்கச் செய்கிறேன். அதோடு

ரக்தாக்ஷனுன என்னுடைய நெடுநோக்கின் பயனுகத் தோன்ற விருப்பதால் ரக்தாக்ஷி வருஷத்தில் உதிக்கச் செய்கிறேன். இப்போது உனக்கு த்ருப்திதானே?

தாயார் :- என் மணிவண்ணு! என்றும் எனக்கு இனியவராயிற்றே. தேவரீர். அடியேன் மனத்தாசையை நிறைவேற்றவிருப்பது குறித்து மிக்க ஸந்தோஷம்.

பெருமாள் :— அதுசரி; நாமகரணம் முக்கியமாயிற்றே. என்ன பேர் சூட்ட விருப்பமோ?

தாயார் :— நாதனே! பரமா! தமருகந்தபேரில் தேவரீருக்கு ஒரு தனி ஈடுபாடு உண்டே. தமர்களில் தலைவராகிய விஷ்ணுசித்தர் 'கண்ணனே! வெள்ளறை நின்ருய்!' என்று தேவரீரை ஆதரத்தோடு அழைத்துள்ளாரே. அந்தத் திருநாமம் தேவரீர் உகந்தது தானே!

பெருமாள் :— 'சுவையன் திருவின் மணாளன்' என்று சடகோபர் வாக்கு அமைந்து விட்டது. பரமரஸிகன் என்று பட்டம் பெற்றபின்பு உன் வார்த்தையை மீற முடியுமோ? நீ எவ்வண்ணம் சிந்தித்தாயோ, அவ்வண்ணமே ஆகட்டும். அந்த உத்தமன் கண்ணன் என்று பேர் பெற்று, சாது கோட்டியுள் கொள்ளப்படட்டும். அந்தக் கண்ணன் நம் தர்சனத்துக்கு ஓர் கண்ணுகத் திகழப்போகிருன் என்பது திண்ணம்.

தாயார் :— தெய்வத்துக்கரசே! செய்ய கண்ணு! அந்த உத்தமனின் ஆவிர்பாவம் 'கலியும் கெடும்' போலே ஸூசிதமானது குறித்து மகிழ்கிறேன்.

பகவந்நியமனமடியாகவே நம் ஸ்வாமி அவதரித்தார் என்பதைக் குடப்பாம்பில் கையிட்டுரைப்பேன் அடியேன். இவ்வண்ணமாக, புண்டரீகாக்ஷனின் அருள் ப்ரஸாதத்தால் ரக்தாக்ஷி கார்த்திகை ஸ்வாதியில் கண்ணன் என்ற திருநாமத்துடன் திருவவதாரம் செய்தருளின நம் ஸ்வாமி எல்லையில்லா அறநெறியாவும் தெரிந்த நிறைஞானத்தொரு மூர்த்தியாகத் திகழ்ந்து வருகிருர்.

எம்பெருமானுருக்கு 'அற்புதன்' என்ற ஓர் அழகான திருநாமம் இட்டருளினுர் அமுதனுர். அதிமாநுஷ வ்யாபாரங்களை உடையவராம் ஸ்வாமி எம்பெருமானுர். விஷ்ணுசித்த விஜயம்,

கீதா வ்யாக்யானம், தனிஸ்லோக வார்த்தாமாலை விவரணங்கள் முதலான அரியபெரிய க்ரந்தங்களை வெளியிட்டருளும் நம் ஸ்வாமியையும் 'அற்புதன்' (அதிமாநுஷ க்ருதிகளைப் படைப்பவர்) என்றழைக்கத் தட்டில்லை.

ஸ்ரீராமாநுஜ சரிதம் பற்றி ப்ரபந்நாம்ருதம்

அலம் தர்த்தும் ப்ரயத்நேந பு₃ஜாப்₄யாம் வாபி ஸாக₃ரம் ।
யதிராஜஸ்ய சரிதம் ஸாந்தம் வக்தும் ந ஶக்யதே ॥

என்று உத்கோஷித்தது. "ஸ்ரீராமாநுஜரின் வைபவம் வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாதது. பெருமுயற்சி செய்து கடலைக் கையாலே நீந்திக் கடந்தாலும் கடந்துவிடலாம். எம்பெருமானாரின் சரிதத்தை எவராலும் சொல்லிமுடிக்க முடியாது" என்று ப்ரபந்நாம்ருதத்தில் கல்வெட்டாகக் கூறப்பட்டது. இதே ரீதியில் நம் ஸ்வாமியின் ஶதாபிஷேக மஹோத்ஸவத்தில் ஸ்வாமியின் ப்ரபாவத்தைப் பல கோணங்களில் அநுபவித்த வித்வான்களும் அறிஞர்களும் "யதா₂மதி ஸுதர்சனரின் வைபவம் சொன்னோமத்தனை போக்கி, ஸ்வாமியின் வைபவம் முற்றச்சொல்லி முடியாதிறே" என்றே முடித்திட்டார்கள். ஆக, நம் ஸ்வாமி 'உலப்பில் கீர்த்தியம்மான்' என்பது வைணவவுலகம் கண்ட உண்மையாயிற்று.

கற்றவர் காமுறு சீலரான நம் ஸ்வாமியை ஈன்ற முதல் தாய் புண்டரீகாக்ஷன். மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் ஆதிவராஹப் பெருமாள். அவர்கள் இருவர் திருவடிகளிலும் நம் ஸ்வாமியின் திருமேனியை நன்கு ரக்ஷித்தருளவேணும் என்று ப்ரார்த்தித்து நிற்கிறேன்.

எம்பெருமானார் மங்களம்

ஶேஷோ வா ஸைந்யநாதோ₂ வா ஸ்ரீபதிர்வேதி ஸாத்விகை: ।
விதர்க்யாய மஹாப்ராஜ்ஞை: பா₄ஷ்யகாராய மங்க₃ளம் ॥

ஸுதர்சனர் மங்களம்

வ்ருஶ்சிகஸ்வாதிஜாதாய கலிஜித்பட்டநாத₂யோ: ।
அம்ஶாவதாரபூ₄தாய க்ருஷ்ணவர்யாய மங்க₃ளம் ॥

[(பெருமாள்—தாயார் ஸம்வாதமாக இக்கட்டுரையில் விண்ணப்பித்தபடியே) கார்த்திகை ஸ்வாதியில் அவதரித்தவராய், திருமங்கையாழ்வார் பெரியாழ்வார் ஆகிய இருவரின் அம்ஶாவதாரபூ₄தரான கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமிக்கு மங்களம்.]

ஸ்ரீ:
ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

# பணிப்பொன்

[வெ. ராகவன், புத்தூர், திருச்சி-17.]



ஶ்ரியஃபதியான எம்பெருமான் கட்டிப்பொன் போலே. அவன் திருநாமம் பணிப்பொன் போலே. அந்தப் பணிப்பொன்னையும் செவ்வையாய்ச் சூடுவார் சூட்டினுலன்றே பிரகாசியாநிற்கும்.

சேதனன் ஓர் சின்னக்குழந்தை. குயவன் கைச்சக்கரத்தின் நடுவே வைக்கப்பட்ட களிமண். அந்தச் சேதனனை நல்ல பாத்திரமாக்கிப் புடம்போடும் நல்லோன் தான் குரு. இதில் 'கு' என்பது இருள். 'ரு' என்பது நிவர்த்திப்பவன். அஞ்ஞான இருளை நிவர்த்திப்பவன் அன்றே ஆசார்யன். இதைத்தான் மணவாள மாமுனிகள் தம் உபதேச ரத்தினமாலையில்

"ஞானம் அனுட்டானம் இவை நன்றாகவே உடைய
னான குருவை அடைந்தக்கால்—மாநிலத்தீர்!
தேனார் கமலத் திருமாமகள் கொழுநன்
தானே வைகுந்தந் தரும்" என்று அருளினார்.

ப்ரஹ்மாவுக்கு வேதம் தான் ப்ரதானம். அந்த வேதத்தின் மூல முதற்பொருளாய் நிற்பவன் எம்பெருமானே! முடிவில்லாதவனும் அவனே! வேதங்களால் அறியமுடியாதவனும் அவனே. உள்ளிருந்து உணர்த்துபவனான அவனுடைய அந்தர்யாமி நிலை பூமியிலுள்ள நீர் போன்றது; விபவாவதாரங்கள் பெருக்காறு போன்றவை. விபவாவதாரங்களாகிற பெருக்காறுகளில் தோன்றிய மடுக்களே அர்ச்சாவதாரம். அர்ச்சாவதாரமாகிற கட்டிப்பொன்னைத்தான் ஆழ்வார்கள் திவ்யப்ரபந்தங்களில் புதையலாக வைத்துச் சென்றார்கள்; அதைப் பூர்வாசார்யர்கள் மண் நீக்கிப் பணிப் பொன்னாக்கி, நம் கண் நோக்க வைத்தார்கள். கண் நோக்க வைத்த அதைத்தான் கண்ணாடி அறையிட்டு மெருகூட்டி வைத்தார் ஒருவர். அவர்தான் 'ஸ்ரீகிருஷ்ணர்' என்னும்

பெரியவாச்சான்பிள்ளையின் வாரிசோ என வியக்கவைக்கும் ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீமான் ஸுதர்சனர் கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் எனும் பெருந்தகை.

பூர்வாசார்யர்களின் பிரதிபிம்பமே அவர். வ்யாக்யான விவரணங்கள் என்றாலே ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் என்றுதான் வைணவவுலகம் கைகாட்டும். பூர்வர்களின் வ்யாக்யானங்களை எதிர்த்துக்குரல் எழுந்தால், அடக்கிவைக்க அனல் மூச்சுவிடும் ஆதிசேஷன் அவர். "மாரிமலை முழைஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும் சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழிக்கும்" அந்த வெந்தீயில் வெந்து மடிந்தவர்தான் எத்தனையோ? மாற்றாருக்கு அவர் அனல் மூச்சு. உற்றார்க்கோ த்வஜஸ்தம்பக் கொடியின் தென்றல் காற்று. "பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று பேசி வரம்பறுத்தா"ரில் இவரும் ஒருவர்.

சட்டத்துறையில் வல்லுநரான இவர் கேள்விக்கணைகளுக்கு அளிக்கும் பதில் விளக்கம் சோதிச் சுடராய்த் தெளிவூட்டும். அது நீதிக்கே நீதி தரும். வடகலையும் (ஸம்ஸ்கிருதம்), தென்கலையும் (தமிழ்) துள்ளிவரும் தேனருவிப் புலமை. அகவையோ எண்பது. உழைப்பிலோ ஈரொன்பதே! இறைவனிடம் நான் வேண்டுகிறேன். இறைவா! என் அகவை வேண்டிடினும் எடுத்துக்கொள். இன்னுமொரு நூற்றாண்டை அன்னவர்க்கே விடுத்துச் செல்.

புலவர்க்கும் புலவராம் பெருமகனார் வாழியே!
புத்தூரைப் புவிநோக்க வைத்தவள்ளல் வாழியே!
நிலமகளின் தனிமகனாய் நிற்குமிவர் வாழியே!
நித்தியமும் சிந்தனைகள் நிறைந்திருப்போன் வாழியே!
குலவேயர் குலத்துதித்த குணக்குன்றோன் வாழியே!
குலமகளிர் குலவிடவும் குமரருடன் வாழியே!
அலைகடலாய்ப் பலநூல்கள் ஆய்ந்தளித்தோன் வாழியே!
அறிவார்ந்த வைணவராம் ஸுதர்சனர்தாள் வாழியே!

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# விண்ணுளாரிலும் சீரியர்

[S. கிருஷ்ணமூர்த்தி, தமிழாசிரியர், ஆமூர்]



புத்தூர் 'ஸுதர்சந' ஆசான் ஸ்ரீ உ வே எஸ். கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமிக்கு ஶதாபிஷேகம் மிகச்சிறப்பாக நடைபெற்றதறிந்து வைணவவுலகமே விம்மிப் பெருமிதம் கொள்கிறது. இன்று வைணவத்தை, பூர்ணமான ஞானம் பெற்று, தெளிந்த சிந்தையோடு எடுத்தியம்புவோர்கள் மிகச் சிலரே. அன்னவர்களில் தலைமைஸ்தானத்தை வகிப்பவர் புத்தூர் வக்கீல் ஸ்வாமி. வைணவவுலகில் நம் ஸ்வாமி, விண்ணுளாரிலும் சீரியராகக் கொண்டாடப்படுகிறார்.

சிந்தையாலும், சொல்லாலும், செய்கையினாலும் நாராயணன் ஒருவனையே எல்லாமாக நினைக்கும் நம் ஸ்வாமி அனைவர்க்கும் ஸம்ப்ரதாய உணர்வைப் புகட்டி நம்மை உய்விக்க வந்த கலியுக அவதார புருஷராவார். தம் எழுத்துப்பணிமூலம் வைணவத்தில் ஓர் விழிப்புணர்ச்சியை உண்டாக்கிய மஹான் இந்த ஸ்வாமி. ஆழ்வார்களின் அருளிச் செயலாகிய கரும்பைப் பிழிந்து, தற்காலத்தவர்கள் பருகுவதற்கு ஏற்றாற்போல் 'எளியநடை விவரணம்' என்ற நற்சாறாக அளித்து வருபவர் நம் ஸ்வாமி. அறுவைச் சிகிச்சையின்றி மருந்தளித்துச் சேதநர்களை உய்விக்கும் மருத்துவரான இவரை ஸதாசார்யர்களில் ஒருவர் என்று பகர்வதில் தவறேதுமில்லை.

ஆசான் தெய்வத்திற்குச் சமம். வைணவ சித்தாந்தத்தில் எம்பெருமானைவிட ஆசார்யனே ப்ரதானமாகிறார். ஏனெனில், ஆசார்யன்தானே பரம்பொருளைக் காட்டும் வழிகாட்டியாக உள்ளார். இக்காலத்தில் பரதத்துவ நிர்ணயம் செய்துவரும் ஸுதர்சனர் ஸ்வாமி ஆசார்யர்களில் சீரியராகத் திகழ்கிறார்.

'மற்றுமோர் தெய்வம் உளதென்றிருப்பாரோடு உற்றிலேன்' என்று கூறும் வைராக்ய சீலர் நம் ஸ்வாமி. அன்று பாண்டிய சபையில் வித்வான்கள் நடுவே பரதத்வ நிர்ணயம் செய்தார் பெரியாழ்வார். இன்று பேரறிஞர்கள், ஆராய்ச்சியாளர்கள் கூடிய அவையிலே, அதாவது உலகத்தமிழ் மாநாட்டிலே 'வைணவமே அநாதியானது', 'திருமாலே பரம்பொருள்' என்பதைத் துணிவுடனும் ஆதாரத்துடனும் உரை வாசித்து வெற்றி கண்டவர் ஸ்வாமி ஒருவரே. அந்த உரைக் கோவையை இன்றுவரை யாரும் மறுத்தாரில்லை.

ஸுதர்சனர் பதில்கள்மூலம் அன்பர்களின் கேள்விகளுக்குத் தக்க விடையளிப்பதில் இவருக்கு நிகர் இவரே. தினசரி பத்திரிகைகளிலோ, வார-மாத இதழ்களிலோ திருமாலையோ வைணவத்தையோ எவராவது தாழ்த்திக் கூறினால், உடனே தக்க ஆதாரங்களுடன் மறுப்புத் தெரிவித்து, பரம்பொருளை நிலைநாட்டும் வக்கிலாகத் திகழ்வார் நம் வக்கீல் ஸ்வாமி. எம்பெருமானுடைய சங்கம் க்ருஷ்ணாவதாரத்தில் யுத்தத்தை ஆரம்பிக்க உதவியது. சக்கரம் யுத்தத்தை முடிவுக்குக் கொண்டு வந்தது. நம் ஸுதர்சனரும் எந்தச் சிக்கலான ஆன்மிக சந்தேகங்களுக்கும் 'ஸுதர்சனம்'மூலம் தெளிவான விளக்கத்தையளித்து ஓர் நல்ல முடிவில் கொணர்ந்து நிறுத்துவார்.

நம் ஸ்வாமியின் வைபவம் இமயம்போல் உயர்ந்து நிற்கிறது. அன்னாரது பெருமைகளை இயம்புதல் என்பது கடல் நீரை அளந்து கூறுவதற்கு ஒப்பாகும். குன்றனைய பெருமை பெற்று விளங்கும் நம் ஸ்வாமி பல்லாண்டு வாழ எம்பெருமான் திருவடிகளில் பிரார்த்திப்போம்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமத் வரவர முநயே நம:

# ஸுதர்சனர் வைபவம்

[ ஸ்ரீநிவாசன், தூத்துக்குடி ]



வைணவ சமயப் புனருத்தாரணர், ஞானச்சுடர், வைஷ்ணவச் செம்மல் "ஸ்ரீஸுதர்சனர்" ஸ்வாமியின் சதாபிஷேகத் திருநாளாம் தாரண-வருஷ கார்த்திகை-மீ ஸ்வாதி நக்ஷத்திர நன்னாளில் (9—12—2004) ஸ்ரீவைஷ்ணவ தாஸன் தூத்துக்குடி ஸ்ரீனிவாசன் ஸமர்ப்பித்த பாராட்டுரை.

ஸ்வாமி வைணவத்தின் காவலராக வந்துதித்தவர்; எம்பெருமானார் தரிசனத்தை விளங்கவைத்தவர்; மணவாள மாமுனியை ஏத்த வந்தவர்; ஸ்ரீவில்லிபுத்தூர் விட்டுசித்தன் வழித்தோன்றல்; மன்னுபுகழ்ப் பூர்வசிகை குலத்துதித்தவர்; ஆழ்வார்கள் அருளிச்செயல் பொருளுரைத்தவர்; ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் ஏந்திநிற்கும் ஆரியர்கோன்; பூருவர்கள் ஆக்கிய நூல் விளக்க வந்தவர்; விஷ்ணுசித்த விஜயம் தந்து வைணவத்தின் எதிரிகளை வேரறுத்தவர்; வைணவ ஸமூஹத்தின் கலங்கரை விளக்கம்; எண் திக்கும் புகழ் மணக்கும் தலைவரிவர்; தந்தை வழி தப்பாமல் நடக்கும் தனயன்; கார்த்திகையில் சோதிநாளில் வந்துதித்தவர்; சதாபிஷேகம் கண்டருளும் வைணவச் செம்மல் மன்னிய சீர் புத்தூர் ஸ்வாமி வாழி! வாழி! வாழியே!!

श्रीः

## ॥ श्रीसुदर्शनकृष्णस्वाम्यैयङ्गार्यविषयकं मङ्गलाशासनम् ॥

[திருநாராயணபுரம் அரையர் ஸ்ரீராமசர்மா, பெங்களூர்]



१. सञ्चरन्नतिवेगेन सुदर्शनमिवापरः ।
भास्करश्चक्रमत्यन्तं निष्कम्प इव दृश्यते ॥

२. अशीतिमायुषो वर्षान् पूरयन् शीतिवर्जितः ।
शतं जीवेम शरदः सवीरास्तेन यः पुमान् ॥

३. कृष्णार्यं द्रविडव्याख्याचक्रवर्तिनमेव यः ।
नाम्ना च विभवेनापि सदृशस्समटीकत ॥

४. श्रीरामानुजसिद्धान्तमूलदिव्यप्रबन्धराट् ।
पराङ्कुशः पवित्रैस्तु करणैर्येन पालितः ॥

५. पुरोधा इव पूर्वेषां वसिष्ठो वाऽथ भार्गवः ।
नूनमद्यतनानां यः प्राड्विवाको जयत्यसौ ॥

६. बाह्यानाभ्यन्तरांश्चैव कण्टकांस्तान् समुद्धरन् ।
सुव्यप्रधिषणः श्रीमान् वाक्कीलस्तु विभात्यसौ ॥

७ किमन्यदपि वक्तव्यं यः कृष्णस्स्वं सुदर्शनम् ।
चक्रमुद्योज्य गीताभिः दधौ युद्धेऽर्जुनं यशः ॥

८. अब्दानां षष्टिसप्तत्योः पूर्तौ यस्संस्तुतो मया ।
नवतौ च शतेऽप्येवं कृष्णस्वामी भवत्वसौ ॥

९. वर्णेन कृष्णो न गुणेन कृष्णः कृष्णो महिम्नातु तदीयशक्त्या ।
जीयाच्चिरं रङ्गनिधेर्निधानं रक्षत्वसौ साधुषु कृष्णमार्यः ॥

१०. इति यादवाद्रिवासी विज्ञप्तिकरान्वयः प्रियः कृतिनाम् ।
कृष्णार्यस्य च दासः श्रीरामो नाम सन्दधौ हर्षम् ॥

## இந்த ஶ்லோகங்களின் பொருள் :

1. மிகவேகமாகச் செல்லும் மற்ெருரு ஸுதர்சன சக்ரம் போன்ற வராய், மிகவும் அசையாமலிருக்கும் ஸூர்யன்போல் விளங்கு கிருர் ஸுதர்சனஸ்வாமி.

2. எண்பது வயது நிறைந்த இவர் குறையற்றவராய் மனிதர்க்குரிய நூறுண்டுகள் உற்ருரோடு வாழ்வாராக.

3. பெயராலும், பெருமையாலும் தமிழ் ப்ரபந்தங்களின் வ்யாக்யான சக்ரவர்த்தியான கிருஷ்ணரெனும் பெரியவாச்சான் பிள்ளையை ஒத்திருக்கிருர்.

4. ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தத்திற்கு மூலமான திவ்யப்ரபந்தங்களுக்குத் தலைவரான பராங்குசர் பரிசுத்தமான நூல்களால் இவரால் காப் பாற்றப்பட்டார்.

5. கோசல வம்சத்தார்க்குப் புரோஹிதரான வஸிஷ்டரோ, அல்லது பரசுராமரோ என்று இன்றுள்ளவரால் கொண்டாடத்தக்க இவர் வெற்றி பெறுவாராக.

6. உட்பகை வெளிப்பகைகளைப் போக்கும் இவர், ஊசிமுனை போன்ற நுண்ணறிவுடைய வழக்கறிஞராகவே விளங்குகிருர்.

7. பல சொல்லியென்! யுத்தத்தில் சக்கரக்கையனுய் கீதையை உப தேசித்து அர்ஜுனனுக்குப் புகழை விளைத்த கண்ணனே இவர்.

8. அறுபதாண்டு, எழுபதாண்டு நிறைவுகளில் அடியேனுல் துதிக்கப் பெற்ற இவர், தொண்ணூறுவது, நூறுவதாண்டுகளிலும், துதிக் கப்படுபவராகட்டும்.

9. நிறத்தில் கரியவராயினும், குணத்தில் அப்படியல்லாதவராய், பெருமையில் கிருஷ்ணனை ஒத்தவராய், அந்தக் கிருஷ்ணனின் அருளாலே ஸ்ரீரங்கநாதனை நெஞ்சிற் கொண்டவராய் நெடுங் காலம் இந்த கிருஷ்ணமாசார்யர் நல்லோர்களிடையே வாழ் வாராக.

10. இவ்வண்ணமாக மேலக்கோட்டை திருநாராயணபுரத்தில் வாழ் பவராய், நல்லோர்களுக்கு இனியவராய், கிருஷ்ணமாசார்யரு டைய தௌஹித்ரரான அரையர் ஸ்ரீராமசர்மா தம் உகப்பைத் தெரி வித்தார்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:     ஸ்ரீவிஷ்ணுசித்த குரவே நம:

# ஞானகுரு

[சமயபுரம் S. **வேங்கடர்**, திருவெள்ளறை பண்டாரி]



**புண்ணிய நோன்பு புரிந்துமிலேன் அடிபோற்றி செய்யும்**
**நுண்ணருங் கேள்வி நுவன்றுமிலேன் செம்மைநூற் புலவர்க்**
**கெண்ணருங் கீர்த்தி யிராமாநுச! இன்றுநீ புகுந்தென்**
**கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நின்ற விக்காரணம் கட்டுரையே.**

[இராமாநுச நூற்றந்தாதி 92]

அடியேனுக்குக் கைங்கர்யத்தைக் கொடுத்துள்ள லோக குருவான ராமாநுஜரையும், எம் குலதெய்வமான பங்கஜா நாயகீ ஸமேத ஸ்ரீபுண்டரீகாக்ஷனையும் பிரார்த்தித்து அடியேனது ஞான குருவைப் பற்றிச் சில வார்த்தைகளைத் தெரிவிக்கின்றேன்.

அடியேன் சிறுவயது முதலே ஸ்வாமியின் குடும்பத்திலே ஒருவனாக இருந்துள்ளேன். ஆனால் அடியேனுடைய 20-வது வயது வரையில் ஸம்ப்ரதாய ஞானமில்லாமல் இதர தேவதைகளுடைய வழிபாடும் செய்து கொண்டிருந்தேன். 1971-ல் ஸுதர்சனம் பத்திரிகையின் புரூப் (Proof) பார்க்க யாரும் அருகில் இல்லாததால் ஸ்வாமி என்னைப் பார்க்கும்படி நியமித்தார். அப்பொழுது வேண்டா வெறுப்பாக 'மாட்டிக்கொண்டோமே' என்ற எண்ணத்தில் புரூப் பார்த்தேன் (கீதா வ்யாக்யானத்தின் ஒரு பகுதி). அதற்குப்பின் அடிக்கடி புரூப் பார்க்கும் சந்தர்ப்பங்கள் கிடைத்தன. அவற்றில் ஸ்வாமியினுடைய பரமார்த்த விளக்கத்தைப் படிக்கப் படிக்க 'நாம் இவ்வளவு காலமும் இதர தேவதைகளின் வழிபாடு செய்தது எவ்வளவு தவறு' என்பதை அறிந்து கொண்டேன். அதுமட்டுமல்லாமல் புரூப் பார்க்கும்பொழுது ஏற்படும் சந்தேகங்களைக் கேட்டால், மிகவும் பொறுமையாகவும், ஞானமில்லா எனது அறிவுக்குப் புரியும்படியாகவும் எளியநடையில்

பதில் கூறுவார். ஸ்வாமி ஞானத்தில் கடல்போல் இருந்தாலும் பழகுவதற்கு மிகவும் எளிமையானவர் என்பது இவருடன் பழகிய அனைவருக்கும் தெரியும்.

மேலும் ஸ்வாமியின் காரை ஓட்டும் அனுபவமும் நிறைய ஏற்பட்டிருந்தது. ஸ்வாமி காரின் பின் ஸீட்டில் அமர்ந்திருப்பார். கார் சென்று கொண்டிருக்கும். அப்பொழுது திடீரென்று கழுதை, கழுதை என்பார். நம்மைத்தான் திட்டுகிறாரோ என்று நினைத்து ஏன் என்னைக் கழுதை என்கிறீர் என்று கேட்டால், சற்று தூரத்தில் வந்து கொண்டிருக்கும் கழுதையைச் சுட்டிக் காட்டி "அது குறுக்கே வரும்போல இருந்தது. ஆகவே முன் எச்சரிக்கையாகக் கூறினேன்" என்பார். அது பிற ஜீவராசிகளுக்கும் தம்மால் எந்தத் துன்பமும் வரக்கூடாது என்கிற அவருடைய மனித நேயமே என்று உணர்ந்து கொண்டேன். அதேபோல் யாராவது ஒருவரது கடிதம் வந்தால் அதற்கு அன்றைய தினமே பதில் எழுதிப் போஸ்ட் பாக்ஸில் போட்டுவிடவேண்டும். அடியேன் அதற்கு "இது சாதாரணக் கடிதம் தானே; இதற்கு ஏன் உடனே பதில் எழுதவேண்டும்? நாளைக்குக்கூட போஸ்ட் பாக்ஸில் போடலாமே" என்றாலும் கேட்கமாட்டார். ஏனெனில் — கடிதம் எழுதியவர் தமது பதிலுக்காகக் காத்திருக்கக் கூடாது என்ற சீரிய எண்ணமே.

இப்படி உயர்ந்த எண்ணங்களும், பிறர் துன்பப்படக்கூடாது என்ற ஸ்ரீவைஷ்ணவகுண பூர்த்தியுமுள்ள ஸ்வாமியுடைய காலத்தில் வாழ்ந்துகொண்டு, அவருக்குச் சிறிய கைங்கர்யங்கள் செய்து கொண்டிருக்கிறோம் என்ற நினைப்பே எனக்கு தாரகமாக இருக்கிறது. ஸ்வாமியின் கடாக்ஷத்தால் கூடிய விரைவில் பெரியாழ்வார் திருமொழி விவரணம் வெளிவர இருக்கிறது. அடியேனுக்கும் அதில் எழுது கோலாகப் பங்குகொள்ளும் பாக்கியம் கிடைத்திருக்கிறது. ஸ்வாமி பெரிய திருமொழிக்கும், பெரியாழ்வார் திருமொழிக்கும் எளிய தமிழ் நடை விவரணம் எழுதி முடித்து, திருவாய்மொழி உரைகளுக்கும் எளிய தமிழ் நடை விவரணம் எழுதி முடிக்கும் வண்ணம் அடியேனது குருநாதரான ஸ்வாமிக்கு திடகாத்திரத்தை அளிக்கும்படி லோககுருவான நம் பெருமாளையும், ஸ்ரீரங்கநாயகீ ஸமேத ஸ்ரீரங்கநாதனையும் பிரார்த்திக்கிறேன்.

ஙு. வேங்கடம், சமயபுரம்.

37. காஞ்சி வரதராஜப்பெருமாள் கோயில் மேலாளர் சங்கரராமன் என்பவர் கோயில் வளாகத்திலேயே கொலை செய்யப்பட்ட வழக்கில் காஞ்சி காமகோடி ஜெயேந்திரர் கைது செய்யப்பட்டு வேலூர் சிறையில் அடைக்கப்பட்டுள்ளது பற்றித் தங்கள் கருத்தைத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

ஜெயேந்திரர் மீது கொலைக் குற்றம் சாட்டப்பட்டுள்ள வழக்கு கோர்ட்டில் நிலுவையிலிருக்கும்போது அதை விமர்சித்துக் கருத்துக் கூறுவது முறையாகாது. இருந்தபோதிலும், ஆதிசங்கரரால் ஸ்தாபிக்கப்பட்டது என்னும் பொய்ப் பிரசாரத்துடன் ஒரு சில நூற்றாண்டுகளுக்குள் அத்வைதிகளில் ஒரு பிரிவினரால் தமிழ்நாட்டில் உருவாக்கப்பட்டதென்று பிரஸித்திபெற்ற மற்ற நாலு சங்கர மடாதிபதிகளாலும் கூறப்படும் காஞ்சி காமகோடி மடத்தின் சந்நியாஸியான ஜெயேந்திரர் சிறையில் வாட நேர்ந்தது வருந்தத்தக்கதே. சாம்பலாண்டியான இவர் திருவேங்கடமுடையான் கர்ப்பக்ருஹத்துக்குள் சில் மாதங்களுக்கு முன் முறைகேடாக உட்புகுந்து திருமேனியைத் தீண்டி எம்பெருமானிடம் அபசாரப்பட்டதும், அதைத் தட்டிக் கேட்ட பரம பாகவதோத்தமரான ஸ்ரீமத் பரமஹம்ஸ த்ரிதண்டி சின்ன ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமியைப் பற்றித் தரக்குறைவாகப் பேசி பாகவதாசாரப்பட்டதுமே இவருக்கு இப்போது கிடைத்துள்ள தண்டனைக்குக் காரணம் என்று தோன்றுகிறது. இந்தக் கைது விஷயத்தைப் பயன்படுத்திக் கொண்டு சமய அறிவும் ஆராய்ச்சியுமில்லாத ஒரு சிலர் காஞ்சி காமகோடி மடம் 2500 ஆண்டுகளுக்குமுன் ஏற்பட்டது என்று பேசி வருவதும் அத்வைதிகளில் ஒரு பிரிவினருக்கு மட்டும் தலைவரான இவர் கைது செய்யட்டதால் இந்துமதமே அழிந்துவிடும் என்று கூக்குரலிடுவதும் ஆதாரமற்றதும், முறையற்றதுமாகும்.

உ. நரசிம்மன், தேப்பெருமாநல்லூர், கும்பகோணம்.

38. ஸ்ரீவைஷ்ணவவுலகுக்குப் பல நன்மைகளைச் செய்து வந்த ப்ரஸன்ன வேங்கடேச சதுர்வேதி மீது பல குற்றங்கள் சுமத்தப்பட்டுக் கைதுசெய்து சிறையிலடைக்கப்பட்டது பற்றி நக்கீரன் பத்திரிகையில் வெளிவந்துள்ள தங்கள் பேட்டி விபரங்கள் உண்மையா?

இதிலும் வழக்கு நிலுவையிலிருக்கும் தருவாயில் கருத்துக் கூறுவது சரியல்ல. 'ஸ்ரீபாஷ்யகாரர் சாரிடபிள் டிரஸ்ட்' என்னும் அறக் கட்டளையை நிறுவி, அதன் மூலமாகப் பல வைஷ்ணவ திவ்யதேசங்களுக்குப் பல கைங்கர்யங்கள் செய்துள்ளார் இவர். 'வார்த்தாமாலை' போன்ற வைணவ கிரந்தங்களைப் பதிப்பிப்பதற்கும் பேருதவி செய்துள்ளார். யாமறிந்த வரையில் இவர் பல நல்ல காரியங்களையே செய்து வந்தார். ஆகையால் தீர்ப்பு வரும் வரையில் இவரைப்பற்றித் தவறுகக் கூறுவதற்கு எதுவுமில்லை. 'நக்கீரன்' என்னும் பத்திரிகையின் நிருபர் ஒருவர் இவர் விஷயமாக நம்மைப் பேட்டி காண வந்தார். "வடகலையாரின் தூண்டுதலின் பேரிலேயே இவர் கைது செய்யப்பட்டுள்ளதாகக் கூறுகிறார்களே. இது உண்மையா?" என்று கேட்டார். "அவ்வாறு இருக்க வாய்ப்பில்லை. அப்படி நாம் கேள்விப்படவுமில்லை" என்று நாம் பதில் கூறினேம்! ஆனுல் நாம் சொல்லாத பல விஷயங்களை நாம் சொன்னதாக அப்பத்திரிகை செய்தி வெளியிட்டு விட்டது. ஸ்ரீவைஷ்ணவர்களிடையே பரஸ்பர விரோத பாவத்தை உண்டாக்கும் நோக்கத்துடன் வெளியிட்ட இந்தப் பொய்ச் செய்தியை நாம் மறுக்கிறேம். சதுர்வேதியின் தந்தை, தன் மகன் பிரசன்ன வேங்கடாசார்யஸ்வாமி மீது பொய் வழக்குப் பதிவுசெய்து போலீஸாரால் கைது செய்யப்பட்டிருப்பதாகவும், அவர் அப்பாவி என்றும், மேலும் பல விபரங்களையும் அளித்து, "இவர்மீது தொடரப்பட்டுள்ள வழக்குகளை சி. பி. ஐ. விசாரிக்க உத்தரவிடவேண்டும்" என்றும் சென்னை ஐகோர்ட்டில் மனுத்தாக்கல் செய்துள்ளதாக தினமலர் 15—12—2004 நாளிதழில் வெளியான செய்தியும் குறிக்கொள்ளத் தக்கது. இப்படியிருக்கும்போது, 'ஹ.ப்ரியா' மார்கழி இதழில் 'நக்கீரன்' பத்திரிகையில் வெளிவந்துள்ளது உண்மையா? என்று நம்மை விசாரிக்காமல், ஆசிரியர் பக்கத்தில் நம்மைத் தாறுமாருகத் தாக்கியிருக்கும் நிந்தனைகள் அவ்வாசிரியருக்கே பொருந்தும் என்று கூறி நிற்கிறேம்.

**T. வரதாச்சாரி, கிழக்குத் தாம்பரம், சென்னை-59.**

**39. ஹிந்து (23—11—04) நாளிதழில் அநந்த நாச்சியாரம்மா என்பவரால் தமிழாக்கம் செய்யப்பட்ட "சிவகீதை" என்னும் புத்தகம் விமர்சனம் செய்யப்பட்டுள்ளது. சிவகீதை—வியாசரால் இயற்றப்பட்ட பாதம புராணத்தில் உள்ளது என்றும், இராவணனுல் ஸீதாப்பிராட்டி கவர்ந்து செல்லப்பட்டபிறகு சக்ரவர்த்தித் திருமகன் மனச்சோர்வும் கோபமும் கொண்டதாகவும் அதைப் போக்க சிவன்—இராமனிடையே நடந்த ஸம்வாதமே சிவகீதை என்றும், பகவத்கீதையின் பல ஶ்லோகங்கள் இதில் உள்ளன**

என்றும் ஷெ விமர்சனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இது பற்றிய உண்மைகளை விளக்கும்படி வேண்டுகிறேன்.

நமது புராணங்களில் பல இடைச்செருகல்கள் பிற்காலத்தில் செய்யப்பட்டுள்ளன. அவற்றில் பகவத் கீதையைக் காப்பியடித்துப் புனையப்பட்ட இந்த சிவ கீதையும் ஒன்ருய் இருக்கத் தகும். புராணங்கள் அனைத்துமே வியாசரால் இயற்றப்பட்டவை என்று கூறுவதும் தவருனதேயாகும். ஒன்ருெடொன்று முரண்பட்ட பல புராணங்கள் எப்படி ஒருவரால் இயற்றப்படமுடியும்? சிவானந்த லஹரி, அப்பய்ய தீக்ஷிதரின் நூல்களிலுள்ள கருத்துக்கள் ஆகியவற்றை சிவகீதை நினைவூட்டுவதாக விமர்சனத்தில் கூறியிருப்பதிலிருந்தே இந்நூல் அப்பய்ய தீக்ஷிதர் காலத்திலோ அதற்குப் பிறகோ புனையப்பட்டது என்பது தெளிவாகிறது. இராமனுக்கும் சிவனுக்கும் இடையே நடந்த ஸம்வாதமாக சிவகீதை எழுதப்பட்டுள்ளது என்று விமர்சனத்தில் கூறியிருப்பதிலிருந்தே, ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதமாக அமைந்துள்ள பகவத் கீதைக்குப் போட்டியாக சைவர்களால் கற்பிக்கப்பட்டுப் பாத்ம புராணத்தில் நுழைக்கப்பட்டுள்ளது என்பது புலனாகிறது. ஸீதாப்பிராட்டியை இராவணன் கவர்ந்து சென்றதால் மனச்சோர்வும கோபமும் கொண்ட இராமனுக்கு சிவன் சிவகீதையைச் சொன்னான் என்று இவர்கள் கூறும் கதை வால்மீகி ராமாயணத்தில் காணப்படாததிலிருந்தே சிவகீதையின் பொய்ம்மை நிரூபணமாகிறது. பழைய நூல்கள் எதிலும் சிவகீதை குறிக்கப்படாததாலும் மதாசார்யர்கள் எவரும் பகவத் கீதையைப் போல் இதை மேற்கோளாக எடுத்துக் காட்டாததாலும் இது பிற்காலத்தில் புனையப்பட்ட பொய்யுரை என்று உள்ளங்கை நெல்லிக்கனியாக விளங்குகிறது.

**பாலாஜி (எ) ஸ்ரீநிவாஸ் சர்மன், புத்தூர், திருச்சி.**

**40. ஸுதர்சனர் பதில் பதினைந்தாவது சதகம் முப்பத்து இரண்டாவது கேள்வியில் ந்ருஸிம்ஹப்ரியா விளம்பரங்கள் வாயிலாகப் பணம் சம்பாதிப்பதற்காக வைணவ விரோதமான விளம்பரங்கள் வெளியிடுவது பற்றி விமர்சித்திருந்தீர்கள். அதற்கு ஏதாவது பலன் உண்டா?**

விபரீத விளைவே விளைந்துள்ளது. தமிழ்நாடு சுற்றுலாக்கழகம் வெளியிட்டுள்ள மதுரை மீனாக்ஷி கோயில் பற்றிய விளம்பரம் ந்ருஸிம்ஹப்ரியா தாரண-ஹு மார்கழி-மீ டிசம்பர்-04 இதழில் வெளிவந்துள்.

ளது. அதில் மீனாக்ஷியம்மன் ஆலயத்திலுள்ள ஆயிரங்கால் மண்டபத்தைப் பற்றி விவரிக்கப்பட்டுள்ளது. ஸ்ரீரங்கம் முதலான திவ்ய தேசங்களில் ஆச்சர்யமான சிற்பங்கள் நிறைந்த ஆயிரங்கால் மண்டபங்கள், மற்றும் பல மண்டபங்கள் அமைந்திருப்பது ஏனோ இவர்கள் கண்ணுக்குத் தெரியவில்லை. மீனாக்ஷியம்மன் கோயில் ஆயிரங்கால் மண்டபத்தைப் புகழும் விளம்பரத்தை வெளியிட்டுள்ள இப்பத்திரிகை உலகம் போற்றும் திருமலையிலுள்ள ஐநூற்றுச் சிறப்புமிக்க ஆயிரங்கால் மண்டபம் ஜெயேந்திரரின் தூண்டுதலால் இடிக்கப்பட்டதைக் கண்டித்து இதுவரை வாய் திறக்காதது ஏன்? என்பது விளங்கவில்லை.

**அம்மாள் ஸ்ரீதிருவேங்கடாசார்ய ஸ்வாமி, 48, மே சி. வீதி, ஸ்ரீரங்கம்**

**41. சென்னையிலிருந்து வெளிவரும் "நக்கீரன்" டிசம்பர் 15—12—2004 இதழில் அக்னிஹோத்ரம் ராமாநுஜ தாதாசார்யர் எழுதும் "இந்து மதம் எங்கே போகிறது" என்னும் தொடர் கட்டுரையின் முதல் பகுதி வெளியாகியுள்ளது. இதில் — "இந்து மதம் ஆப்கானிஸ்தானத்திலிருந்து வந்தது; அங்கிருந்த பயந்தாங்கொள்ளிகளான நிர்வாண மனிதர்களால் கண்டுபிடிக்கப்பட்டது தெய்வம். இந்த உலகமே தெய்வம் தான். நாம் வாழ, சந்தோஷமாக வாழத்தான் தெய்வத்தைப் பயன்படுத்தவேண்டும் என்று வகுத்தது வேதம். வேதகர்மம் பெரும்பாலும் ஆப்கான் பகுதியில் நிகழ்ந்துள்ளது. ஆரியமதம் வேதமதமாகி, வேதமதம் பிராம்மண மதமாகி, கால வெள்ளத்தில் அவர்கள் இந்தியாவிற்குள் அடிவெடுத்து வைக்க, அப்போது இங்கே சுமார் 450 மதங்கள் இருந்தனவாம். இவைகளில் எது இந்து மதம்?" என்பன போன்ற கருத்துக்களை எழுதியுள்ளார். இவற்றுக்கு ஏதேனும் அடிப்படை உண்டா?**

அக்னிஹோத்ரி எழுதியுள்ள விஷயங்கள் அனைத்தும் அபத்தமும் பொய்யுமாகும். வெள்ளைக்காரர்களின் கற்பனையில் உதித்த இந்த வாதங்களை அவர்களின் அடிவருடிபோலே இவர் பிதற்றுகிறார். இவருடைய அபத்தக் கற்பனைகள் அனைத்தையும் நாம் வெளியிட்ட "அக்னிஹோத்ரியும் வைஷ்ணவமும்" என்னும் நூலில் தக்க ஆதாரங்களைக் காட்டி மறுத்துள்ளோம். உபயகலை வைஷ்ணவ அறிஞர்களாலும் இவருடைய நூல் கண்டிக்கப்பட்டது. ஆத்திகவேடம் பூண்ட நாத்திகரான இவருடைய பொய்யுரைகளைக் காணாமல் இருப்பது நல்லது. 'நக்கீரன்' பத்திரிகையின்மீது, தேவதா விச்வாஸம் கொண்ட 'ஹம்ப்ரியா' இதைக் கண்டிக்கிறதா என்பது வைஷ்ணவவுலகத்திற்குத் தெரியவேண்டும்.

இதுதவிர, அப்பய்ய தீட்சதர் வைணவத்வேஷமற்ற நடுநிலையாளர் என்று எழுதுகிறார் இவர். ஏதோ அப்பய்ய தீட்சதரின் வாழ்நாளில் நடந்ததையெல்லாம் ஒன்று விடாமல் அறிந்துவிட்டவர் போலும், அவரது நூல்களையெல்லாம் ஒன்று விடாமல் படித்து விட்டவர் போலும் எழுதுகிறார் இந்தக் கட்டுரை ஆசிரியர்.

அப்பய்ய தீக்ஷிதர் ஒரு அத்வைதி. ஆனால் சிவபரத்வத்தை நிலைநாட்டப் பல விதண்டாவாத நூல்களை எழுதியவர். ஆதி சங்கரரது கொள்கைகளுக்கு முரணாக மனம்போனபடி த்ரிமூர்த்தி ஸாம்ய வாதத்தையும், ஐக்ய வாதத்தையும், சிவபரத்வ வாதத்தையும், உத்தீர்ண வாதத்தையும் தம் நூலில் செய்திருக்கிறார். சிவ தத்வ விவேகம், சிவார்க்கமணி தீபிகை போன்ற அவரது நூல்களில் விஷ்ணுத்வேஷ விஷம் கொட்டிக் கிடப்பதைக் காணலாம். தீக்ஷிதருக்கு இளமை முதலாகவே விஷ்ணுத்வேஷம் மனதில் பதிந்திருந்தது என்பதும், அவர் முறையாக வேத அத்யயனம் செய்தவரில்லை என்பதும், வேத வாக்யங்களுக்கு அவர் விஷ்ணுத்வேஷத்தை மனத்திற்கொண்டு அவப்பொருள் கூறிய சமயத்தில் சிறந்த ஞானமணியான அவரது தாயார் அவரைக் கண்டித்துத் திருத்தியதாகவும், தனக்கு "ஏன் விஷ்ணுத்வேஷம் அதிகரித்து வருகிறது" என்ற விஷயத்தைத் தன் மாதாவிடம் அவர் வினவியதாகவும், அதற்கு அவரது மாதா ஏதோ பதில் கூறியதாகவும், அதன்பிறகு படிப்படியாக அவரது மனத்தில் இருந்த விஷ்ணுத்வேஷம் குறைந்து முற்றிலும் விஷ்ணுத்வேஷமற்றவராய் நய மயூக மாலிகா என்ற ஒரு பிரஹ்ம ஸூத்ர வ்யாக்யானம் செய்ததாகவும், அதில் "ராமானுஜரின் திருவுள்ளத்தையொட்டி நய மயூக மாலிகா எழுதப்பட்டது" என்று எழுதியுள்ளதாகவும் ஸ்ரீகாஞ்சி மஹாவித்வான் ஸ்வாமி ஸ்ரீமஹாவிஷ்ணு சாம்ராஜ்யம் என்ற தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

எனவே அப்பய்ய தீக்ஷிதருக்கு விஷ்ணுத்வேஷம் இயற்கையிலேயே உண்டு. பின்னாளில் அவர் மனத்தில் இருந்த விஷ்ணுத்வேஷ அழுக்கு மறைந்த பின்பே அவர் விஷ்ணு பரமான் நூல்களை எழுதினார். அதன்பின்பே பெருமாள் கோவிலும் கட்டினார். இதுவே உண்மை. இதையறியாமல் வைஷ்ணவத்வேஷ எண்ணம் கொண்டு அப்பய்ய தீட்சதருக்கு வைணவர் தீங்கிழைத்ததாகவும், அப்பய்ய தீட்சதர் பிற மதத்வேஷமற்ற நடுநிலையாளர் என்றும் கூறுகிறார் இந்தக் கட்டுரை ஆசிரியர். உண்மைகளைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் எழுதுவது மிகப்பெரிய அறிவீனமாகும்.

நவம்பர் 2004 ஞானபூமி இதழில் மூத்த வழக்கறிஞர் ஆர். கிருஷ்ணஸ்வாமி "முருக வழிபாடு" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் உள்ள சில அபத்தச் செய்திகளைக் கீழே தந்து விமர்சிக்கிறேன்.

"இந்து சமயம்" என்னும் இந்த சநாதன தர்மத்தை உலகுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டியவர் ஆதிசங்கரர் ஆவார். அவரது தத்துவ பிரசாரத்திலும் குழப்பம் விளைவித்தவர்கள் உண்டு. உண்மை என்றும் அழியாது. அழிக்கவும் முடியாது. சங்கரர் காட்டிய அத்வைதப் பாதையில் கடவுளுக்கு இடமில்லை என்று கூறுபவர்கள் அறியாமையால் அவ்வாறு கூறுகின்றனர். உண்மையில் அத்வைத அறிவைப் பெறுவதற்கு அடித்தளமாக அமைவதே கடவுளின் அருள். தெளிவாகவும், ஆணித்தரமாகவும் தெய்வ வழிபாட்டின் முக்யத்வத்தை எடுத்துக் கூறியபோது அந்த வழிபாட்டை எவ்வாறு கடைப்பிடிப்பது? என்று கேள்வி எழும். அக்கேள்விக்கு பதிலாகத்தான் ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபனம் செய்தார். சூரியன், அம்பிகை, விஷ்ணு, கணநாதன், மஹேஸ்வரன் இவ்வைவரையும் ஒரு கிரஹஸ்தன் தினசரி பூஜிக்க வேண்டியவனாகிறான் என்று "ஸ்ம்ருதி முக்தாவளி" என்ற நூலில் குறிப்பிடப்படுகிறது. இதில் ஒரு அதிசயம் என்னவென்றால் ஆறு வழிபாடுகளில் ஐந்துதான் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆறாவதான முருக வழிபாடு குறிப்பிடப்படவில்லை. அதில்தான் முருகவழிபாட்டின் விசேஷத் தன்மை அறியப்படுகிறது. எண்ணிக்கையில் ஐந்திற்குப் பிறகுதான் ஆறு வருகிறது. ஆக. (அஞ்சுதல்—பயப்படுதல்) அஞ்சுதலுக்குப் பிறகு அதாவது—அறியாமை அகன்றபிறகு அறிவாகிய ஆறு வெளிவருகிறது. ஆறுமுகமாகக் காணப்படுகிறது. ஆகவே வழிபாட்டில் படிப்படியாக முன்னேறி இறுதியில் முருக வழிபாட்டில் முக்தி பெறப்படுகிறது.

"ஆறு சமயக் கடவுள் வேறு வேறென்றியான் ஒருவனே
அங்கங்கு இருந்து அன்பர்க்கு முத்தி தருவித்தென்று
யாவர்க்கும் அறிவித்த வதனமணியே" என்று ஒரு அன்பர் கூறுகிறார். "ஈஸானஸ் ஸர்வ வித்யானாம் — என்று தொடங்கும் வேத மந்த்ரத்திலிருந்து ஈசனும் முருகனும் இணைந்து பிரணவமாக ஒலிக்கிறது என்று தெரிகிறது. முருகனை நினைத்தாலே முக்தி என்று வேதங்கள் கூறுகின்றன. அத்வைதம் காட்டிய சங்கரர் சுப்ரமண்ய புஜங்கம் எழுதியுள்ளார். "தத் புருஷாய வித்மஹே மஹா சேனாய தீமஹி தன்னோ ஷண்முகப்ரசோதயாத்" என்று ஷண்முக காயத்ரி வேதத்திலேயே உள்ளது" என்று பலவாறாகப் பிதற்றியிருக்கிறார்.

இந்த மூத்த வழக்கறிஞர் ஆர். கிருஷ்ணசாமியின் கட்டுரைகள் பலமுறை நம்மால் விமர்சிக்கப்பட்டிருக்கின்றன. ஆதாரமில்லாமல் மனம்போனபடி எழுதுவதே இவரது வேலையாகி விட்டது. ஆதிசங்கரரைப் பற்றிக் கூறும் இவர், அவரது முக்கியமான நூல்களையெல்லாம் படித்துவிட்டல்லவா எழுதவேண்டும்? ஆதிசங்கரர் தத்துவக்கோட்பாட்டால் அத்வைதி என்பதும், கடவுட் கொள்கையின்படி வைஷ்ணவர் என்பதும் உலகறிந்த உண்மை. ஆதிசங்கரர் தூய்மையான வைணவர் என்பதை "சங்கரரும் வைணவமும்", "ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபகரா" ஆகிய இரு நூல்களின் மூலம் ஸ்ரீஸுதர்சனர் அவர்கள் கல்வெட்டாக நிலை நாட்டியுள்ளார்கள். மேற்படி நூல்களை மூத்த வழக்கறிஞர் வாங்கிப் படித்த பின்பு ஆதிசங்கரரைப் பற்றிக் கருத்துச் சொல்லட்டும். நாமும் நமது கட்டுரையில் பல இடங்களில் ஆதிசங்கரரது உண்மையான கொள்கைபற்றித் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளோம். பலமுறை கண்டிக்கப்பட்டும் புத்தியில்லாமல் "ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபனம் செய்தார் செய்தார்" என்றே எழுதுவது அறிவுடையோர் செய்யும் செயலன்று. அல்லது தம் கருத்துக்கு ஆதிசங்கரரது நூல்களிலிருந்து ஆதாரமாவது காட்டவேண்டும். அதையும் செய்வதில்லை. ஆதிசங்கரரின் பிரஹ்ம ஸூத்ர பாஷ்யம், உபநிஷத் பாஷ்யம், கீதை ஸஹஸ்ர நாம பாஷ்யங்கள் இவற்றைக் கொண்டு அவர் ஷண்மதஸ்தாபனம் செய்தார் என்பதை இக்கட்டுரை ஆசிரியர் நிரூபித்து விட முடியுமா? ஆதிசங்கரர் முருகன், விநாயகர், அம்பிகை, சிவன் ஆகிய தேவதைகள் மீதெல்லாம் ஸ்தோத்ரம் பாடியிருக்கிறார் என்று சொல்வதெல்லாம் சுத்தப்பொய். பின்னாளில் யாரோ செய்ததையெல்லாம் ஆதிசங்கரர் செய்தார் என்று கூறி அவருடைய கடவுட்கொள்கைக்கே களங்கம் விளைவித்து வருகின்றனர் சிலர். ஆதிசங்கரர் காலத்திலேயே எத்தனையோ ஸஹஸ்ர நாமங்கள் வழக்கில் இருந்தன. இருந்தபோதும் விஷ்ணு ஸஹஸ்ர நாமத்துக்கு மட்டும் அவர் பாஷ்யம் (உரை) எழுதவேண்டிய அவசியம் என்ன என்பதை இக்கட்டுரையாளர் போன்றோர் சிந்தித்துப் பார்க்கவேண்டும். ஏன்? மற்ற ஸஹஸ்ர நாமங்களுக்கு உரை எழுத அவருக்கு நேரமில்லையா? இல்லை, எழுதப் பிடிக்கவில்லையா? ஸுப்ரஹ்மண்ய புஜங்கம் பாடினார் ஆதிசங்கரர் என்று இவர்கள் கூறுவது உண்மையானால் ஏன் ஸுப்ரஹ்மண்ய ஸஹஸ்ரநாமத்திற்கு அவர் உரை எழுதியிருக்கலாமே? ஸௌந்தர்ய லஹரி பாடினார் என்று

இவர்கள் கூறுவது உண்மையானல் அவர் லலிதா ஸஹஸ்ர நாமத்திற்கும் உரை எழுதியிருக்கலாமே? ஏன் எழுதவில்லை என் பதற்கு நாம் பதில் கூறுகிறோம்

பெருமை மிகுந்த ஒரு பெயரை இரு நபர்களுக்குச் சூட்டி னால் உண்மையிலேயே அந்தப் பெருமை மிகுந்த பெயர் அந்த இரு நபர்களில் யாருக்குப் பொருந்தும் என்பதை அறி வாளிகள் உணர்வர். தகுதியில்லாதவனுக்குப் பெருமைமிகு ஒரு பெயர் சூட்டப்பட்டால் அது வெறும் உபசாரத்திற்காகவும், 'ஐஸ்' வைப்பதற்காகவும் சூட்டப்பட்டது என்பதையும் அறிவு உடையோர் உணர்வர். தகுதியுடையவனுக்கு சூட்டப்பட்ட அந்தப் பெயருக்குத்தான் அது என்ன தகுதிக்காகச் சூட்டப்பட் டது என்று விளக்கமும் அளிப்பார்கள் அறிஞர்கள்: தகுதியில் லாதவனுக்கு சூட்டப்பட்டிருக்கும் பெயரைக் கண்டு கொள்ளவே மாட்டார்கள் அறிஞர்கள். அந்த வகையில் ஆதிசங்கரர் பேரறிஞ ராகையால், ஆயிரம் நாமங்களுக்கும், அந்த நாமங்களுக்குரிய பொருளுக்கும் தகுதியுடையவன் வேதநாயகனும், பரம்பொருளு மான விஷ்ணுவே என்று உணர்ந்துதான் விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கு விளக்கம் எழுதினர். மற்ற தேவதைகளுக்குக் கொடுக்கப்பட்ட நாமங்கள் எல்லாம் பகவான் விஷ்ணுவின் நாமங் களே. உபசாரமாக அந்த தேவதைகள் விஷயத்தில் வழங்கப் படுகின்றன. ஆகவே அத்வைதியான ஆதிசங்கரர் விஷ்ணு வையே ஸகுணப்ரஹ்மமாகக் கொண்டு வாழ்நாள் முழுக்க ஸாள க்ராம சிலையை உபாஸித்து வந்தவர் என்பது அவரது ப்ரஸ் தானத்ரய பாஷ்ய நூல்களிலிருந்து தெளிவு. இதையறியாமல் ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபனம் செய்தார் என்று எழுதி எழுதி மக்களை ஆன்மிக விஷயத்தில் முழு மூடர்களாக்கி வருகின்றனர் சிலர். அவர்களில் ஒருவர்தான் இந்த மூத்த வழக்கறிஞர். ஒருவரது தனிப்பட்ட கொள்கையை, அவர் மறைந்த பின்பு களங்கப்படுத்துவது மஹா பாபமாகும். அந்தப் பாபம் சும்மா விடாது. அநுபவித்தே தீரவேண்டும்.

மேலும் ஐந்து வழிபாட்டால் ஏற்பட்ட அறியாமை விலக ஆறுவதாக வரும் முருக வழிபாடு தான் ஞானம் தந்து முக்தி அளிக்குமாம். இது வேதத்தில் உள்ளது என்று கயிறு திரிக் கிறார் கட்டுரையாளர். சாதாரண ஜீவராசிகளைப் போல, ஆண் பெண் சேர்க்கையால் பிறந்தவனே முருகன். சிவனும், பார்வதி யும் புணர்ச்சிசெய்து அதன்மூலம் பிறந்தவனே முருகன் என்று

வால்மீகி ராமாயணமும், நமது சங்க இலக்கியமான பரிபாடலும் கூறுகின்றன. முருகனை லௌகிக இன்பங்களை வழங்கும் ஒரு காதல் தேவதையாக வர்ணிக்கிறது பரிபாடல். ஆனால் திருமாலையோ இந்த அண்ட சராசரத்தையும் படைத்து அளித்து அழிக்கும் பரம்பொருளாகக் கூறுகிறது பரிபாடல். வேதத்தில் முருகனுக்கு ஒரு துதி மந்திரம் கூடக் கிடையாது. அப்படியிருக்கும் போது முருகன் முக்தி தருவான் என்று வேதமே கூறுகிறதாம். கச்சியப்பர் எழுதிய கந்தபுராணத்தைத்தான் வேதம் என்று கட்டுரையாசிரியர் கருதுகிறார் போலும்! யார் கண்டது?

"ஈசானஸ் ஸர்வவித்₃யானும் ஈஶ்வரஸ் ஸர்வபூ₄தானும் ப்₃ரஹ்மாதி₄பதிர் ப்₃ரஹ்மணோऽதி₄பதிர் ப்₃ரஹ்மா சிவோ மே அஸ்து ஸதாசிவோம்" — இந்த மந்திரத்திலிருந்து சிவனும் முருகனும் சேர்ந்ததே பிரணவஸ்வரூபம் என்று எப்படித் தேறும்? கட்டுரையாசிரியருக்கு எங்கும் எதுவும் எப்படி வேண்டுமானாலும் தேறும் போலும்! இம்மந்திரத்தின் உண்மையான பொருள்— "எல்லா வித்தைகளுக்கும் ஈசனும், ஸர்வபூதேஶ்வரனும், வேத நாயகனும், ப்ரஹ்மனுக்கு அதிபதியும் ஆகிய அந்த ப்ரஹ்ம வஸ்து எனக்கு மங்களகரமாக இருக்கட்டும். எப்பொழுதும் மங்களகரமாக இருக்கட்டும் (அல்லது அதுவாகவே நானாக இருக்கிறேன்) என்று ப்ரணவமாகிய ஓம் சொல்கிறது"—என்பதே இதன் திரண்ட பொருள். இங்கே முருகனுக்கும் சிவனுக்கும் என்ன வேலை? "ஸதாசிவோம்." என்று இருந்தவுடன் இது சிவனைக் குறிப்பதாகக் கொள்கிறார் கட்டுரை ஆசிரியர். ஸதாசிவன் என்றால் எப்பொழுதும் மங்களகரமானவன் என்ற பொருளில் இந்த மந்திரத்தில் இப்பதம் பயன்படுத்தப்பட்டுள்ளது. எப்பொழுதும் மங்களகரமானவன் ஸ்ரீமந் நாராயணனைத்தவிர வேறு யாருமில்லையன்றோ. எப்பொழுதும் மங்களகரமானவனை (அதாவது ஸதாசிவனை) ஸ்ரீமந்நாராயணனின் திருவடியில் ப்ரஹ்மனால் அபிஷேகம் செய்யப்பட்ட நீரைத் தலையில் தாங்கியதாலேயே ருத்ரன் சிவனானான். அதாவது—மங்களகரமானவனானான். இதிலிருந்து இயற்கையிலேயே எப்பொழுதும் மங்களத்தன்மை கொண்டவன் ஸ்ரீமந் நாராயணன் என்பதும், ருத்ரனுக்கு மங்களத் தன்மை ஸ்ரீமந்நாராயணனாலேயே ஏற்பட்டது என்பதும் தெரிய வருகிறது. ஆகவே இம்மந்திரம் சிவனையும் முருகனையும் பற்றியது என்று கட்டுரை ஆசிரியர் கூறுவது மடத்தனமானது. முக்கண்ணனையும், பன்னிரு கண்ணனையும் குறிக்கும் அடையாளம் எதுவும் இதில் இல்லையே.

மேலும் முருகனுக்கு ஒரு காயத்ரி மந்திரம் வேதத்தில் இருப்பதாகக் கூறுகிறார் இக்கட்டுரை ஆசிரியர். தைத்திரீய உபனிஷத் நாராயணவல்லியில் மொத்தம் ஆறு காயத்ரிதான் குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது — ''புருஷஸ்ய வித்ம'' எனத் தொடங்கும் ருத்ர காயத்ரி, 'தத் புருஷாய" எனத்தொடங்கும் ருத்ர காயத்ரி, தந்தி காயத்ரி, கருட காயத்ரி, துர்க்கா காயத்ரி, விஷ்ணு காயத்ரி—என்ற ஆறு காயத்ரிகளுக்கே வேத பாஷ்யகாரரான ஸாயணாசார்யர் உரை எழுதியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. இந்த ஆறில் முருகனுக்குரிய காயத்ரி இடம் பெறவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. பின்னாட்களில் தங்களின் இஷ்ட தெய்வங்களின் மேல் காயத்ரி செய்து வைத்து விட்டால் அதுவும் வேதத்தில் உள்ளது என்று நம்பவைத்து விடலாம் என்பது பகற்கனவன்றோ! மேலே சொன்ன ஆறு காயத்ரிகளைத்தவிர நடைமுறையில் உள்ள மற்ற காயத்ரிகள் எல்லாம் வேதத்தில் இல்லாத கற்பனைகள் என்பதே உண்மை; இன்னும் கொஞ்ச நாளில் ஐயப்பன், காட்டேரி, கருப்புசாமி, முனீஸ்வரன் போன்ற பாமர தெய்வங்கள் மீதும் காயத்ரி எழுதி அவையும் வேதத்தில் உள்ளதாகச் சொன்னாலும் சொல்வார்கள். யார் கண்டது? எதைச் சொன்னாலும்தான் மண்டை ஆட்ட ஒரு கும்பல் இருக்கிறதே.

மேலும் தமிழ்க்கடவுள் முருகனாம்! இவர்கள் சொல்கிறார்கள். அப்படியானால் ஆங்கிலக் கடவுள் யார்? ஹிந்திக் கடவுள் யார்? உலகிற்கே கடவுள் ஒருவனாகத்தானே இருக்கமுடியும். அப்படியிருக்கும்போது மொழிக்கு ஒரு கடவுளா இருக்க முடியும்?

''மூவேழுலகமும் உலகினில் மன்பதும்
மாயோய்! நின்வயின் பரந்தவை உரைத்தேம்'' என்றும்,

''இருநிழல் படாமை மூ—ஏழ் உலகமும்
ஒருநிழல் ஆக்கிய ஏமத்தை மாதோ'' என்றும் சங்க இலக்கியமான பரிபாடல் திருமாலையே எல்லா உலகங்களுக்கும் ஒரே தலைவனாக ஒரே கடவுளாகக் கூறியிருக்கும்போது தமிழருக்கு மட்டும் தனிக்கடவுள் எங்கிருந்து வந்தார்? வேத நாயகனான திருமாலே பரம்பொருள் என்று நமது தமிழ்ச்சங்க இலக்கியங்கள் அனைத்துமே மறைகளைச் சாட்சியாக வைத்து நமக்குக் காட்டித் தருகின்றன. மேலும்,

''நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்'' — என்று கூறி,

திருமாலைத்தவிர வேறு யாராலும் வீடு பேறு என்னும் மோக்ஷத்தைத் தரமுடியாது என்றும் கூறிவிட்டது சங்க இலக்கியமான பரிபாடல்.

இவற்றையெல்லாம் மூத்த வழக்கறிஞர் படித்தாரோ படிக்கவில்லையோ தெரியவில்லை. ஸ்ரீ ஸுதர்சனர் அவர்களின் சங்க காலத் தமிழர் சமயம் என்ற நூலை இவர் வாங்கிப் படித்தால் இவருடைய அறியாமை விலக வாய்ப்புள்ளது. ஆகவே இக் கட்டுரையின் ஆசிரியர் கருத்துக்கள் அனைத்தும் ஆதாரமில்லாமல் எழுதப்பட்ட அபத்தக் களஞ்சியங்கள் என்பது நிரூபிக்கப்பட்டது.

ஞானபூமி, அருள்பூமி ஆகிய புத்தகங்களில் "ஸ்ரீமத் பாகவதம்" என்ற தலைப்பில் எம். கே. கிருஷ்ணஸ்வாமி என்பவர் தொடர்கட்டுரை ஒன்று எழுதி வருகிறார். ஸ்ரீமத் பாகவதத்தின் மூலக்கருத்துக்கு முரணாக இக்கட்டுரை ஆசிரியர் ஸ்ரீமத் பாகவதத்திலுள்ள கதைகளைத் திரித்து எழுதி வருகிறார். ஷ நவம்பர்—2004 ஞானபூமி இதழில் "திரிபுர தகனம்" பற்றி எழுதும்போது, "திரிபுர அசுரர்களின் கொடுமை தாங்க முடியவில்லை என்று ப்ரஹ்மாவும் விஷ்ணுவும் சிவனிடம் முறையிட்டதாகவும் சிவன் தன் நேத்ராக்னியால் திரிபுராசுரர்களை எரித்தார் என்றும் எழுதியுள்ளார். இவர் சொன்னபடி இச்சம்பவம் ஸ்ரீமத் பாகவதத்தில் விவரிக்கப்படவில்லை. ஸ்ரீமஹா விஷ்ணுவின் தேஜஸ்ஸால் காப்பாற்றப்பட்டு வில்லில் நாணேற்றி ஓர் அம்பினால் அந்த முப்புரங்களையும் எரித்தார் என்றே ஸ்ரீமத் பாகவதத்தில் வருகிறது. இச்செய்தியை மறைத்து எழுதுகிறார் கட்டுரை ஆசிரியர். மேலும் அக்டோபர் 2004 அருள்பூமி இதழில் வரும் ஸ்ரீமத் பாகவதக் கட்டுரையில் இவ்வாசிரியர் கபில வாசுதேவர் தன் தாயாருக்கு ஞானோபதேசம் செய்த விபரத்தைச் சொல்லுகையில், முருகன் தன் தகப்பனான சிவனுக்குப் பிரணவத்தின் பொருளை உபதேசித்ததாகக் கூறப்படும் கந்தபுராணக் கதையையும், சபரிமலை ஐயப்பன் தன் தந்தைக்கு ஞானோபதேசம் செய்ததாகக் கூறப்படும் ஐயப்ப புராணக் கதையையும் மேற்கோள் காட்டி இக் கதைகளுக்கிடையில் பேதமில்லை என்று எழுதியுள்ளார். பரம ஸாத்விக புராணமான ஸ்ரீமத் பாகவத புராணக் கதையோடு தாமஸ புராணக் கதைகளையும் ஒப்பிட்டு, ஸ்ரீமத் பாகவதத்தின் தனித்தன்மை விளங்காமல் போகும்படி செய்வதில் மிகவும் அக்கறை காட்டி எழுதி அதைப் படிக்கும் வாசகர்கள் ஸ்ரீமத் பாகவதத்தின் மூல தத்துவத்தைப் புரிந்துகொள்ள இயலாமல் செய்கிறார் இக்கட்டுரை ஆசிரியர். இப்படிப்பட்ட விஷ்ணு வைஷ்

ணவ த்வேஷிகளைக் கொண்டு ஸ்ரீமத் பாகவதத்தை எழுதுவைக்கும் 'அருள்பூமி' 'ஞானபூமி' பொறுப்பாளர்கள் மிகவும் கண்டிக்கத் தக்கவர்கள்.

25—10—2004 குமுதம் வார இதழில் பெங்களூர் சந்தானக் கிருஷ்ணன் என்பவர் தனது 'நேபாள யாத்திரை' என்ற கட்டுரையில் பசுபதிநாத் கோயிலின் தல புராணமாகக் கீழ்க்கண்டவாறு ஒரு கதை கூறியுள்ளார்.

"பிரளயத்தில் பூமியே தண்ணீருக்குள் மூழ்கிப்போன நேரம் அது. பிரம்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் அப்போது ஒரு விவாதம் ஏற்பட்டது. இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்தது யார்? இது தான் வாதம் விவாதம். இதற்கு பதில் தர விரும்பினார் சிவபெருமான். தான் மிகப்பெரிய லிங்கமாக விஸ்வரூபம் எடுத்தார். "உங்கள் இருவரில் யார் என்னுடைய தலைப் பகுதியையோ, கால் பகுதியையோ முதலில் பார்த்துவிட்டு வருகிறீர்களோ அவரே பிரபஞ்சத்தைப் படைத்தவர் என்று கூறினார் சிவபெருமான்" என்று கதையை ஆரம்பித்து வழக்கம்போல் தாழம்பூ, பசுமாடு, பொய்சாட்சி இப்படி வழக்கமான கதையைக் கூறி முடித்து, சிவன் தானே ப்ரபஞ்சத்தைப் படைத்தவன் என்று பிரம்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் நிரூபித்தாராம். அந்த விஸ்வரூப லிங்கம்தான் பசுபதிநாத்தில் சிறிய லிங்கமாக உள்ளதாம். பிறகு பிரபஞ்சமே இருளடைந்து காணப்பட்டதால் தேவர்கள் சிவபெருமானை வேண்டிக்கொண்டார்களாம். உடனே ஈசன் பூமியை வெளிக்கொண்டுவர பிரம்மாவை ஏவினாராம். சூரியன், சந்திரன் ஆகியோர் வந்து பிரளய நீரை ஆவியாக்கினார்களாம். பூமி மேலே எழுந்ததாம். முதலில் வந்த பகுதிதான் காசியாம்.

வழக்கமாக சைவர்கள் இந்த அடிமுடி தேடிய கட்டுக்கதை திருவண்ணாமலையில் நடந்ததாகக் கூறுவர். இக்கட்டுரை ஆசிரியர் நேபாளத்தில் நடந்ததாகக் கூறுகிறார். மும்மூர்த்திகளுக்குள் யார் பெரியவர் என்ற சர்ச்சை வந்தபோது இக்கதை நடந்ததாக சைவர் கதையளப்பர். ஆனால் ப்ரளய காலத்தில் நடந்ததாக இந்த பயணக் கட்டுரை ஆசிரியர் கதை விடுகிறார். இதை வைத்துப் பார்க்கும்போதே இக்கதை சைவர்கள் விஷ்ணுத்வேஷத்தால் கட்டிய கட்டுக்கதை என்பது தெள்ளத் தெளிவாகப் புலப்படும். ஒரே சம்பவம் வேறுவேறு சந்தர்ப்பங்களில், வேறுவேறு இடங்களில் எப்படி நடக்கும்? எத்தனை முறைதான் திருமூர்த்திகளுக்குள் யார் பெரியவர் என்ற சர்ச்சை வந்தது? இதிலிருந்தே இது புளுகு புராணம் என்பது தெளிவாகிறதல்லவா? ஸ்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களைக் கொண்டு சிவபரத்வத்தை நிலைநாட்ட இயலாத சைவர்கள், ஸ்தலபுராணக் கதைகளைக் கட்டிக்கொண்டு அழவேண்டிய நிலைக்கு வந்துவிட்டனர்! அந்தோ பரிதாபம்.



ஸுதர்சனர்

S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் மற்றும் அவருடைய

திருத்தம்பியாரான S.ராம ஐயங்கார்



சதாபிஷேக வைபவத்தன்று
(9-12-2004) ஸுதர்சனர்
ஸ்வாமிக்கு பொற்கிழி வழங்குதல்